S 149




மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
(University with Potential for Excellence)
தொலைநிலைக் கல்வி இயக்ககம்
www.mkudde.org




எம்.ஏ., முதலாமாண்டு
அரசியல்

தாள் - 1

# தற்கால அரசியல் கோட்பாட்டு நெறிகள்




# தொலைநிலைக் கல்வி இயக்ககம்



382

அரசியல்

## எம்.ஏ., முதலாம் ஆண்டு

தாள் - 1

# தற்கால அரசியல் கோட்பாட்டு நெறிகள்

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 625 021.

அன்புள்ள மாணவர்களே,

தற்கால அரசியல் கோட்பாட்டு நெறிகள் என்னும் இந்தப் பாடப்பகுதி முதலாமாண்டில் ஒரு தாளாக அமைந்துள்ளது. இப்பாடத்திற்குரிய பாடத்திட்டமும், பாடப்பட்டியலும் உட்பகுதியில் தரப்பட்டுள்ளன. உங்கள் நன்மைக்காக பாடங்களின் இறுதியில் கொடுக்கப்பட்டிருக்கும் மாதிரி வினாக்களுக்கு விடைகளைத் தயாரிக்க முயற்சியுங்கள்.

உங்களுக்கென நடத்தப்படும் தொடர் வகுப்புகளுக்குத் தவறாமல் வாருங்கள். அங்கு பாடம் பற்றிய உங்களுடைய ஐயப்பாடுகள் தீர்த்து வைக்கப்படும். கடினமான பாடப்பகுதிகளும் விளக்கப்படும். இவற்றைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்.

நல் வாழ்த்துக்கள்.

அரசியல் துறை.

(STAR / 500 Copies / 01.05.09)

## பாடப்பட்டியல்

1. பழைமைக்கால மற்றும் தற்கால அரசியல் கோட்பாடுகளின் ஆதாரத் தன்மைகள் : அரசியலமைப்பு – பொருள் வகைகள்

2. அரசு – அரசின் கூறுகள் — அரசும் பிற அமைப்புகளும் இறைமை – பொருள் பண்பு, ஒருமுக பன்முகக் கோட்பாடு

3. உரிமைகளும் — கடமைகளும் — பொருள் வகைகள் சமத்துவம் —பொருள் வகைகள் — சமத்துவத்தைப் பெறுவதில் ஏற்படும் தடைகள்

4. சட்டம் — பொருள் வகைகள் : நடக்கையியல் பின் தோன்றிய நடக்கையியல்

5. அரசியல் கலாச்சாரம் — பொருள் — தன்மை அரசியல் சமூகமயமாதல், பொருள், காரணிகள்

6. பொதுமுறையமைவுக் கோட்பாடு : டேவிட் ஈஸ்டனின் உள்ளீடு வெளிப்பாடு கோட்பாடு

7. ஆல்மண்டின் கூட்டமைவுக் கோட்பாடு : அதிகாரம் — அதிகாரத்துவம் — அரசியல் செல்வாக்கு

8. அரசியல் குழு கோட்பாடு : அரசியல் உயர்ந்தோர் குழும் — கோட்பாடுகள்

9. அரசியல் [illegible]தித் தொடர்பு கோட்பாடு : ஆட்டக் கோட்பாடு

10. அரசியல் வளர்ச்சி கோட்பாடுகள் : அரசியல் தற்கால நவீனமயமாதல்

## அலகு — 1

## அரசியல் அறிவியலின் தன்மையும் பரப்பும்: அரசியலமைப்பும், பொருள் — வகைகள்

### அறிமுகம்

அரசியல் அறிவியல் என்டது அரசு பற்றிய படிப்பு ஆகும். மனிதனிடம் இயற்கையிலேயே இணைந்து வாழ வேண்டும் என்ற ஆர்வம் உள்ளது. இதுவே சமுதாயம் தோன்றுவதற்கான அடிப்படையாகும். மனிதன் ஒரு சமுதாய, அரசியல் விலங்கு. வாழ்வை ஒழுங்கு செய்ய அரசாங்கம் ஏற்படுத்தப்பட்டது. அரசாங்கத்தின் தோற்றம் ஏற்பட்ட போது அரசியலும் தோன்றியது.

இன்று அரசு இல்லாமல் ஒரு சமுதாயம் அமைவது இயலாத ஒன்று எனலாம். எனவே, அரசியல் என்பது ஒரு முக்கியமான படிப்பு எனலாம். அது அரசு எவ்வாறு இருந்தது என்பதை ஆய்வு செய்கிறது. அரசு எப்படி இருக்கவேண்டும் என்பதை அனுமானிக்கிறது. இவ்வாறு அரசியல் அரசின் எல்லா அம்சங்களையும் பற்றிய படிப்பாகும்.

### நோக்கங்கள்:

அரசியல் அறிவியல் தன்மை மற்றும் பரப்பு பற்றி அறிதல்
அரசியல் அறிவியலின் பல்வேறு படிப்பு முறைகள் பற்றி பகுப்பாய்வு செய்தல்.
அரசியலமைப்பு, பொருள் — வகைகளைப் பற்றி புரிந்து கொள்ளுதல்.
அரசாங்கங்களின் வகைப்பாடுகளைப் பற்றிக் கற்றறிதல்.

### வடிவமைப்பு:

அரசியல் அறிவியல் பொருள் விளக்கம்
அரசியல் கோட்பாடுகள்
பழமைக்காலம்
அதிகாரப்பிரிவினைக் கோட்பாடு
அரசியல் கோட்பாடு
அரசியல் தத்துவம்
ஒப்பீட்டு அரசியல்
அரசியல் கொள்கைகள்
பன்னாட்டு அரசியல்
அரசியல் அறிவியல் படிப்பு முறைமைகள்—தத்துவமுறை

வரலாற்றுமுறை
ஒப்பீட்டு முறை
பரிசோதனை முறை
நடக்கை முறை
ஒருங்கிணைப்பு முறை
அரசியலமைப்பு பொருள்—வகைகள், இலக்கணம்
அரசியலமைப்புக்களின் பகுப்பு–எழுதப்பெற்ற,எழுதப்பெறாத, அரசியலமைப்புகள்
எழுதப்பெற்ற அரசியலமைப்பின் சிறப்புகள்
எழுதப்பெறாத அரசியலமைப்பின் சிறப்புகள்
நெகிழா, அரசியலமைப்பு, நெகிழும் அரசியலமைப்பு
அரசியலமைப்புத் திருத்த முறைகள்
நெகிழும் அரசியலமைப்பின் கூறுகள்
நெகிழா அரசியலமைப்பின் சிறப்புகள்
நெகிழா அரசியலமைப்பின் குறைகள்
நெகிழும் அரசியலமைப்பின் சிறப்புக்கள்
நெகிழும் அரசியலமைப்பின் குறைகள்
ஒற்றையாட்சி, கூட்டாட்சி அரசியலமைப்புக்கள் ஒற்றையாட்சி நாடு
ஒற்றையாட்சியின் இன்றியமையாத கூறுகள்
ஒற்றையாட்சியின் நாட்டின் சிறப்புக்கள்
ஒற்றையாட்சியின் குறைபாடுகள்
கூட்டாட்சி நாடு, கூட்டாட்சியமைப்பிற்கு வேண்டிய முன் தேவைகள்
கூட்டாட்சியின் இன்றியமையாத கூறுகள்
கூட்டாட்சியின் சிறப்புத் தன்மைகள்
கூட்டாட்சி முறையின் குறைபாடுகள்
பாராளுமன்ற மற்றும் குடியரசுத் தலைவர் முறையிலான அரசு – பாராளுமன்ற முறையிலான அரசு
குடியரசுத்தலைவர் முறையிலான அரசு
தொகுப்புரை
முக்கிய வார்த்தைகள்
பரிந்துரைக்கப்பட்ட நூல்கள்
முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகளுக்கான பதில்கள்
மாதிரி வினாக்கள்

## 1.1. அரசியல் அறிவியல் பொருள் விளக்கம்

பலஅறிஞர்கள் அரசியல் பற்றிய விளக்கங்களை வழங்கியுள்ளனர். 'கெட்டல்' அரசியல் அறிவியலை அரசு பற்றிய அறிவியல் என்கிறார். அரசியல் அறிவியல் அரசில் தெடாங்கி அரசில் முடிவடைகிறது எனும்

விளக்கத்தை கார்னர் (Garner) என்பார் கூறுகிறார். அரசின் பல அம்சங்களைப் புலனாய்வு செய்வது அரசியல் அறிவியல் எனும் எளிமையான விளக்கத்தை அளிக்கிறார். மேற்கூறப்பட்ட விளக்கங்கள் அரசியல் நிறுவனங்கள் பற்றிய ஆய்விற்கு முக்கியத்துவம் அளிக்கின்றன. பிற்கால அறிஞர்கள் மற்றச் செயல்கள் பற்றியும் அம்சங்கள் பற்றியும் கவனம் செலுத்தினர்.

### 1.1.1 அரசியல் கோட்பாடுகள்

மனித, சமுதாயக் கட்டுப்பாடு பற்றிய படிப்பே அரசியல் அறிவியல் என்கிறார். காட்லின் : அதிகாரம் செல்வாக்கு ஆகியவை பற்றிய படிப்பே அரசியல் அறிவியல் என்னும் விளக்கமும் அளிக்கப்படுகிறது. அரசியல் அறிவியலின் அண்மைக் காலமாக நடக்கைபற்றி அதிக முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. எனவே, அரசியல் நடக்கைப்பற்றிய அறிவியலே அரசியல் அறிவியல் என்றும் கூறப்படுகிறது.

அரசியல் அறிவியல் பற்றிய பல்வேறு விளக்கங்கள் அளிக்கப்படுகின்றன. அவற்றில் சில நிறுவனங்களைப் பற்றியதாகவும் சில அரசியல் நடவடிக்கைகள் பற்றியும் அமைந்துள்ளன. அரசியல் நடக்கையைச் சிலர் மையமாகக் கொண்டுள்ளனர். இவ்வாறு வெவ்வேறு அறிவியலாளர்கள் வெவ்வேறு விளக்கங்களைத் தருகின்றனர். அரசின் வெவ்வேறு அம்சங்களை அவர்கள் மனத்தில் கொண்டு விளக்கங்கள் அளித்துள்ளனர். சுருங்கக்கூறின் அரசியல் அறிவியல் என்பது அரசின் அனைத்து அம்சங்களையும் பற்றிய படிப்பு எனலாம்.

### பரப்பு

ஒருபடிப்பின் பரப்பு என்பது அப்படிப்பின் ஆய்விற்குரிய பொருள் ஆகும். அப்படிப்பு எதனைப்பற்றியது என்ற விளக்கம் அதனுடைய பரப்பினைத் தெளிவாக்கும். அரசியல் அறிவியலில் எவற்றைப்பற்றிய படிப்பு நடக்கிறது என்பது அதன் பரப்பைக் குறிக்கும். அரசியல் அறிவியல் என்பது அரசைப் பற்றிய படிப்பு: அரசு மனிதர்களால் ஆனது. மனிதவாழ்வு மாறிக்கொண்டே இருத்தலால் காலப்போக்கில் அரசியல் அறிவியலின் படிப்பும் மாறிக்கொண்டே வருகிறது எனலாம்.

### 1.1.2. பழமைக் காலம்

மிக முந்திய காலத்திலேயே அரசியலைப்பற்றிச் சிந்தித்து எழுதியவர்கள் கிரேக்கர்கள். பாலிஸ் எனும் கிரேக்கச் சொல்லிலிருந்துதான் பாலிடிக்ஸ் எனும் சொல் பிறந்தது. அன்று அச்சொல் நகர அரசைக் குறித்தது. பழங்காலக் கிரேக்கத்தில் ஒவ்வொரு நகரும் அரசாக விளங்கியது. அரசியலின் தந்தையெனக் கருதப்படும்

அரிஸ்டாட்டிலைப் பொறுத்தவரை ஒவ்வொரு மனிதனும் ஒரு அரசியல்வாதியே. ஆனால் சில மனிதர்கள் மற்றவர்களைவிட அதிகமான அளவு அரசியல் ஈடுபாடு உடையவர்களாக இருக்கின்றனர். அரிஸ்டாடிலின் அரசியல் அறிவியல் விரிந்த பரப்பினைப் பெற்றிருந்தது.

## 1.1.3. அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு

அரசியலின் பரப்பு பதினாறாம் — இருபதாம் நூற்றாண்டுகளுக்கு இடையில் உருவம் பெற்றது எனலாம். ஜான் போதன் எனும் பிரெஞ்சு அறிஞர் அரசியல் அறிவியல் என்னும் சொல்லை வடித்தார். அரசின் சட்டரீதியான அம்சத்திற்கு அவர் அதிக முக்கியத்துவம் அளித்தார். மான்டக்ஸ்யூ அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டை வடித்தார். இந்தக் கோட்பாடு ஒரு அரசாங்கத்தை சட்டமன்றம், நிர்வாகத்துறை, நீதித்துறை எனும் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கவேண்டும் என்பதை வலியுறுத்துகிறது. அரசியலின் பரப்பை இம்மூன்று பிரிவுகளின் படிப்பு என்னும் நிலைக்கு இது மாற்றியது. இருபதாம் நூற்றாண்டில் அரசியல் அறிவியலின் பரப்புபற்றிப் புதிய கருத்துக்கள் தோன்றின. அரசாங்கத்தின் மூன்று பிரிவுகள் பற்றிய படிப்பு எனும் நிலை போதாது என்று கருதப்பட்டது. எல்லாவிதமான அரசியல் முறைகளிலும் அரசியல் கட்சிகளும் தன்னலக் குழுக்களும் முக்கியப் பங்கு வகிக்கின்றன. எனவே அரசியல் அறிவியலில் இவற்றைப்பற்றிய ஆய்வும் இடம் பெற வேண்டும் என்பது சுட்டிக் காட்டப்பட்டது. மேலும் அரசியல் அறிவியலில் சில புதிய கிளைப் படிப்புகளும் தோன்றியுள்ளன. அவற்றின் காரணமாக அரசியல் அறிவியலின் பரப்பு மேலும் விரிவடைந்துள்ளது.

## 1.1.4. அரசியல் கோட்பாடு

அரசியல் கோட்பாடு, அரசியலின் முக்கியமான பிரிவு ஆகும். இப்பிரிவு அரசியல் அறிவியல் பற்றிய கோட்பாடுரீதியான படிப்பினை வலியுறுத்துகிறது. அரசின் தோற்றம், தன்மை, நோக்கம், பணிகள் மற்றும் அமைப்பு ஆகியவை பற்றியும் அரசியல் கோட்பாடு கூறுகிறது. இப்பிரிவு வெறும் உண்மைகளைப்பற்றி மட்டும் கவனம் செலுத்தவில்லை. கிடைத்திருக்கும் உண்மைகளின் அடிப்படையில் சில பொதுப்படையான விதிகளைக் கண்டறிய முயல்வது இப்படிப்பு.

அரசியல் நிகழ்ச்சிகள் எல்லா அரசுகளிலும் நிகழ்கின்றன. இவற்றிடையே சில பொதுவான தன்மைகள் காணப்படுகின்றன. அரசியல் நிறுவனங்களிடையிலும் பல ஒற்றுமைகள் காணப்படுகின்றன. இவற்றை அடிப்படையாகக் கொண்டு சில பொதுப்படையான முடிவுகட்கு வர முயல்கிறது, அரசியல் கோட்பாடு. இவ்வாறு அரசியல் கோட்பாடு

அரசியல் அறிவியலுக்கான பரப்பை ஒரு குறிப்பிட்ட பகுதியில் எல்லையிட்டுக் காட்டுகிறது.

### 1.1.5. அரசியல் தத்துவம்

அறிவின் முதிர்ச்சி நிலையைத் தேடுவது தத்துவம் எனப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட படிப்புப் பிரிவில் பொதுவான விதிகள் அல்லது கொள்கைகளைக் கூட்டிச் சேர்ப்பதை அது குறிக்கிறது. அரசியல் தத்துவம் என்பதை அரசியல் விதிகள் அல்லது கொள்கைகளின் தொகுப்பு எனலாம். கோட்பாடு என்பது எதிர்காலத்தில் வரப்போகும் ஒன்றினைப்பற்றி அனுமானம் செய்வதாகும். ஏற்கனவே நிகழ்ந்துவிட்ட சில நிகழ்ச்சிகளின் அடிப்படையில் கொள்கைகள் வகுக்கப்படலாம். கோட்பாட்டில் உருவாக்கப்பட்ட கொள்கைகளை ஓரளவு சரிபார்ப்பதற்கான வாய்ப்பும் உள்ளது. அரசியல் கோட்பாட்டையும் அரசியல் தத்துவத்தையும் ஒன்றே எனச் சொல்வாரும் உண்டு எனினும் அவற்றிடையே சில வேறுபாடுகள் உள்ளன.

**வேறுபாடுகள்:**

அரசியல் கோட்பாடு என்பது அரசியல் தத்துவத்தைவிட முறைப்படி அமைந்தது. ஓரளவு கண்டுணரப்பட்ட அறிவியலாளர்கள் அரசியல் சிந்தனைகளின் வெவ்வேறு காலத்தைச் சேர்ந்த வெவ்வெறு தத்துவ ஞானிகள் அரசியல் சிந்தனைகளின் தொகுப்பே அது. சாக்ரடீஸ், பிளாட்டோ, அரிஸ்டாட்டில், ரூசோ, மான்டெஸக்யூ போன்ற தத்துவ ஞானிகளின் சிந்தனைகள் அதில் அடங்கியுள்ளன. அரசு, அரசாங்கம், இறைமை, சட்டம் நீதி, போன்றவைபற்றிய அவர்களது கருத்துக்கள் அரசியல் தத்துவத்தில் அடங்கியுள்ளன. அரசியல் கோட்பாடு அல்லது அரசியல் தத்துவம் பற்றிய படிப்பு மட்டுமே அரசியல் ஆகாது. அரசியல் அறிவியல் அவற்றைவிட அதிகமானது.

## 1.2. ஒப்பீட்டு அரசியல்

அரசுகள் வெவ்வேறான அரசியல் நிறுவனங்களைப் பெற்றுத் திகழ்கின்றன. ஒப்பீட்டு அரசியல் இத்தகைய அரசியல் நிறுவனங்கள் பற்றிய ஒப்பீட்டு வகையிலான படிப்பாக அமைந்துள்ளது. ஒப்பீட்டு அரசியலில் “அரசியல்” என்னும் சொல் அரசியல் செயல், அரசியல் செயல்முறை, அரசியல் அதிகாரம் ஆகிய மூன்று பொருள்களை அளிக்கிறது. சச்சரவுகளையும், சச்சரவுக்கான தீர்வுகளைக் காணுதலையும் அரசியல் செயல் குறிக்கிறது. அரசியல் செயல்முறையைக் குறைக்கிறது. முடிவு எடுப்பதில் சட்டமன்றம்,

நிர்வாகத்துறை, நீதித்துறை ஆகியவை மட்டுமின்றி தன்னலைக் குழுக்களும் அரசியல் கட்சிகளும் பங்குபெறுகின்றன.

### 1.2.1. அரசியல் கொள்கைகள்

இலட்சியங்களின் தொகுப்பைக் கொள்கை எனலாம். எதிர்காலத்தில் அரசியல் தொடர்பான மனதுக்கிசைந்த கற்பனையே இலட்சியக் கொள்கை எனச் சொல்வதுண்டு. பல அரசியல் கொள்கை நடைமுறைக்கேற்றவையாய் அமைவதில்லை. அரசு அல்லது சமுதாயத்திற்கு ஒரு இலட்சிய இலக்கை அரசியல் கொள்கை நிர்ணயிக்கிறது. அவ்விலக்கை அடைவதற்கான செயல்முறைகளை அரசு அல்லது சமுதாயம் மேற்கொள்கிறது. தற்காலத்தில் ஒவ்வொரு அரசியல் முறையமைவும் ஒரு அரசியல் கொள்கையை அடிப்படையாகக் கொண்டுள்ளது.

அரசியல் கொள்கை அரசியல் முறையமைவின் செயற்பாடுகளை நியாயப்படுத்துகிறது. சான்றாக, தனியார் சொத்துக்கள் தேச உடைமையாக்கப்படும்போது சோஷலிசக் கொள்கையை அடைவதற்காக அவ்வாறு செய்யப்படுவதாகக் கூறி அச்செயல் நியாயப்படுத்தப்படுகிறது. அரசியலில் மட்டுமின்றிப் பொருளாதாரத்திலும் கொள்கைகள் உள்ளன. அரசியல் கொள்கை ஒரு இலக்கை அடைவதற்காக மக்களை உழைக்கத் தூண்டுகிறது. சோஷலிசம், கம்யூனிசம், காந்தீயம், முதலாளித்துவம், மார்க்சிசம், நாசிசம், பாசிசம், மக்களாட்சி போன்றவற்றை அரசியல் கொள்கைகளில் சில பயனுடையவையாகவும் வலுவானவையாகவும் திகழ்கின்றன. சில பயனற்றவையாகவும், வலுவற்றவையாகவும் உள்ளன. நாசிசமும், பாசிசமும் அபாயகரமானவை. இத்தகைய அரசியல் கொள்கைகள் பற்றிய படிப்பு அரசியல் அறிவியலின் பரப்பை விரிவாக்குகிறது.

### 1.2.2. பன்னாட்டு அரசியல்

அறிவியலின் தொழில் நுட்பமும் உலகத்தின் நிலவியல் பரப்பைச் சுருக்குகின்ற அளவு செய்தித் தொடர்பு மற்றும் போக்குவரத்து வசதிகளைப் படைத்துள்ளன. இன்று பிற அரசுகளுடன் தொடர்பற்ற தனியான வாழ்க்கையை எந்த அரசும் சிந்தித்துப் பார்க்க இயலாத நிலை நிலவுகிறது. இக்காரணங்களால் பன்னாட்டு அரசியல் என்பது அரசியல் அறிவியலின் புதிய பிரிவாக விரைந்து வளர்ந்துள்ளது.

பன்னாட்டளவில் அரசுகளிடையிலான உறவுகளை ஒழுங்கு செய்யப் பன்னாட்டு சட்டம் உள்ளது. முதல் உலகப்போரின் முடிவில் உலக அமைதி காக்கச் சர்வதேச சங்கம் உருவாகப்பட்டது. பன்னாட்டளவில் தோற்றுவிக்கப்பட்ட முதல் நிறுவனம் அதுவாகும்.

அவ்வமைப்பு ஏறத்தாழ இருபது ஆண்டுகள் செயல்பட்டு மறைந்தது. இரண்டாவது உலகப்போரின் முடிவில் ஐக்கிய நாடுகள் நிறுவனம் உருவாக்கப்பட்டது. உலக அமைதி காக்கவும், உலக மக்களின் மேம்பாட்டிற்காகவும் பல்வேறு அரிய சேவைகளை அவ்வமைப்புச் செய்து வருகிறது. இத்தகைய விஷயங்கள் பற்றிய படிப்பே பன்னாட்டு அரசியல் ஆகும். பன்னாட்டு அரசியல் இன்று முக்கியத்துவம் பெற்றுத் திகழ்கிறது.

## 1.2.3. அரசியல் அறிவியலில் படிப்பு முறைமைகள்

அரசியல் அறிவியல் ஒரு பழமையான படிப்பு. அதனைப் படிப்பதற்குப் பல்வேறு வழிமுறைகள் பரிந்துரைக்கப்படுகின்றன. வெவ்வேறு கால கட்டங்களில் வெவ்வேறு அரசியல் சிந்தனையாளர்கள் இம்முறைகளைப் பற்றிக் கூறியுள்ளனர். ஒவ்வொரு முறையிலும் சில நிறைகளும் குறைகளும் காணப்படுகின்றன. இவ்வத்தியாயத்தில் அரசியல் அறிவியலின் படிப்பு முறைகள் பற்றிக் காணலாம்.

### தத்துவ முறை

தத்துவமுறை ஊக முறை எனவும் அறியப்படுகிறது. இது மிகவும் பழமையான முறை எனலாம். அரசு எவ்வாறு இருக்க வேண்டும் என்பதற்கான விடையைக் கண்டறிதலில் தத்துவஞானி ஒவ்வொருவரும் மனிதனின் தன்மை, உலகின் தன்மை, மனிதவாழ்வின் நோக்கம் போன்றவைப் பற்றிச் சில அடிப்படையான கருத்துக்களை உருவாக்கினர். பிளாட்டோ, ஹாப்ஸ், ரூசோ, காண்ட், ஹெகல் ஆகியோர் அவர்களில் சிலர் ஆவர். இத்தகைய தத்துவஞானிகள் அரசின் நிலை எவ்வாறு இருக்கவேண்டும் என்பதை வெவ்வேறு விதங்களில் விவரித்துள்ளனர். இம்முறையில் சில நிறைகளும் குறைகளும் உள்ளன.

**நிறைகள்:**

தத்துவ முறையில் சில தகவுகள் உள்ளன. அரசு எவ்வாறு அமையவேண்டும் என்பதற்கான இலட்சிய இலக்கை இம்முறை சுட்டிக்காட்டுகிறது. இத்தகவுகள் அரசியல் நிறுவனங்கள் வளர்வதற்கு உதவிசெய்கின்றன. தகவுகளை அடையவேண்டும் என்ற நோக்கத்துடன் அரசியல் நிறுவனங்கள் செயல்படுவதால் முன்னேற்றம் சாத்தியமாகிறது. அரசியல் அறிவியல் தகவுகள் அவசியம் எனக் கூறப்படுகிறது. எனவே, இம்முறை ஒரு நல்ல முறை எனப் பாராட்டப்படுகிறது. பாராட்டப்படுவதுடன் பரிந்துரைக்கவும் படுகிறது. தகவுகளை அறிவியற் பூர்வமாக ஆய்வு செய்யமுடியாது. ஆனால் அவற்றைத் தத்துவரீதியாக நியாயப்படுத்தலாம். எனவே தத்துவமுறை அரசியல் படிப்பிற்கு ஏற்றதாகக் கருதப்படுகிறது.

**குறைகள்:**

தத்துவ முறையில் தத்துவ ஞானி பகுத்தறிவைப் பயன்படுத்துவதில்லை. தான் சொல்லுவதை மெய்ப்பிக்கவேண்டும் என அவர் எண்ணுவதில்லை. இம்முறையில் சில அடிப்படையான உண்மைகளிலிருந்து பொது விதிகள் வடிக்கப்படுவதும் இல்லை. தத்துவஞானி தனது அனுமானங்களின் அடிப்படையில் சில பொதுவான முடிவுகளை மேற்கொள்கிறார். தத்துவம் என்பது எளிதில் புலனாகிறது. அதை எளிதாகப் புரிந்து கொள்ள முடியாது. தத்துவ ரீதியாகப் பிறக்கின்ற கருத்துக்களை எளிதாக நடைமுறைப்படுத்தவும் முடியாது. இந்த அறிவியல் யுகத்தில் தத்துவமுறை பொருத்தமற்றது எனக் கூறப்படுகிறது.

## 1.2.4. வரலாற்று முறை

வரலாற்று முறை வரலாற்றுரீதியாக அரசின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் அறிந்து கொள்ள உதவுகிறது. ஓர் ஆராய்ச்சியாளருக்குக் கடந்தகாலம் பற்றிய அறிவு அவசியமாகிறது. அரசை அதன் அடித்தளத்திலிருந்து அறிந்து கொள்ள வரலாற்று அறிவு உதவுகிறது. அரசியல் நிறவனங்கள் திடீரென்று தோற்றவிக்கப்படுபவை அல்ல. அவற்றின் வேர்கள் கடந்த காலத்திற்குள் ஊடுருவிச் செல்கின்றன. வரலாற்றுமுறை அரசியல் நிறுவனங்களின் பரிணாம வளர்ச்சியைப் படம் பிடித்துக் காட்டுகிறது. சீலி, பிரீமன், லாஸ்கி, போன்ற சிந்தனையாளர்கள் இம்முறைக்கு முக்கியத்துவம் அளித்தனர். வரலாற்று முறை கடந்த காலத்தைப் புரிந்துகொள்ளவும், நிகழ்காலத்தை மதிப்பீடு செய்யவும், எதிர்காலத்தை அனுமானம் செய்யவும் உதவுகிறது.

**நிறைகள்**

அரசியல் நிறுவனங்களைக் கடந்தகாலக் கண்ணோட்டத்துடன் ஆய்வு செய்வது அரசியல் அறிவியலில் அவசியமானது எனலாம். சில அரசியல் நிறுவனங்கள் ஏன் தோன்றின என்பதையும் இவ்வாறு அறிந்து கொள்வது மிகவும் அடிப்படையானதாகும். இக்கேள்விகட்கு வரலாற்று முறை விடையளிக்கிறது. பழங்கால கிரேக்க, ரோம அரசியல் நிறுவனங்கள் இன்றைய அரசியல் அறிவியல் மாணவர்கட்கும் கூட ஆர்வமளிக்கும் விஷயங்களாக அமைந்துள்ளன. அவற்றைப் பற்றி அறிந்து கொள்ள வரலாற்று முறை பெரிதும் உதவுகிறது. பிளாட்டோ, அரிஸ்டாட்டில், மாக்கியவல்லி, ரூசோ போன்றவர்களின் சிந்தனை ஊற்றுக்கள் இன்றும் பல அறிவு ஜீவிகளின் அறிவுத் தாகத்தைத் தீர்க்கின்றன. இவையெல்லாம் வரலாற்று முறை காரணமாகவே சாத்தியமாகின்றன.

**குறைகள்**

வரலாற்று கடந்த காலத்தின் குறிப்பு. அது கடந்த காலத்தில் என்ன நிகழ்ந்தது என்பதனைக் கூறுகிறது. ஆனால், எதிர்காலத்தில் என்ன செய்யவேண்டாம் என்பது பற்றி அது தெளிவாக எதனையும் சொல்வதில்லை. வரலாற்றில் தகவுகளுக்கு இடமில்லை. வெவ்வேறு அரசியல் நிறுவனங்களின் நிறை,குறைகளை வரலாறு தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுவதில்லை. மிக விரைவாக மாறிவரும் சமுதாயத்திற்கு இம்முறை ஏற்றதல்ல. இம்முறையைப் பற்றிக் குறை கூறுபவர்களில் சிட்ஜ்விக் முக்கியமானவர்.

## 1.2.5. ஒப்பீட்டு முறை

ஒப்பீட்டு முறையை முதன்முதலில் பயன்படுத்தியவர் அரிஸ்டாடில் ஆவார். அவர் ஏறத்தாழ 158 அரசியலமைப்புகள் பற்றிய ஒப்பீட்டினை ஆய்வு செய்தார். அத்தகைய ஒப்பீட்டின் அடிப்படையில் தமது கருத்துக்களை அவர் வெளியிட்டார். தற்காலத்தில் மான்டெஸ்க்யூ, பிரைஸி போன்றோர் இம்முறைககுக ஆதரவளித்த சிந்தனையாளர்கள் ஆவர்.

**நிறைகள்:**

ஒப்பீட்டு முறையில் ஓர் ஆராய்ச்சியாளர் பல்வேறு அரசியல் நிறுவனங்களைப்பற்றி ஆய்வு செய்யமுடியும். வெவ்வேறு நிறுவனங்களை ஒப்பிட்டுப் பார்க்க அவரால் முடியும். ஓர் குறிப்பிட்ட அரசியல் நிறுவனம் ஒரு அரசியல் வெற்றி பெற்றமைக்கும், அதேவிதமான நிறுவனம் வேறொரு அரசியல் தோல்வியுற்றமைக்கும் காரணங்களை ஆய்வுசெய்வது எளிதாகிறது. வரலாற்று முறையிலும் உற்றுநோக்குதல் முறையிலும் உள்ள சில குறைபாடுகள் இம்முறையில் காணப்பட்டள்ளன.

**குறைகள்:**

இம்முறை கடந்த காலத்திற்கு முக்கியத்துவம் அளிக்கவில்லை. இம்முறையைப் பயன்படுத்தும் ஆரய்ச்சியாளர் மிகுந்த எச்சரிக்கையுடனும், கவனத்துடனும் இருக்கவேண்டும். விஷயங்களைக் கூர்ந்து நோக்குகின்ற திறன் பெற்றிருக்க வேண்டும். மேலும் ஆராய்ச்சியாளர்கள் நடுநிலை வகிப்பவராகவும் திகழ்தல் அவசியம். தவறான உற்றுநோக்குதல் ஆய்வு முழுவதையும் பாழ்படுத்திவிடும்.

## 1.2.6. பரிசோதனை முறை

அரசியல் அறிவியலிலும் பரிசோதனைகள் செய்ய முடியும் எனச் சில வல்லுநர்கள் கருதுகிறார்கள். அரசியல் அறிவியலாளர்கட்கு உலகம் முழுவதும் பரிசோதனைச் சாலை என அவர்கள் கருதுகின்றனர்.

இயற்றப்படும் ஒவ்வொரு சட்டமும் ஒரு பரிசோதனைக்குரிய விஷயம் என்கின்றனர். பல்வேறு அரசுகளில் நடக்கின்ற போர் ஒவ்வொன்றும் வேதியியல் பரிசோதனைச் சாலையில் பயன்படுகின்ற கந்தகம் அல்லது காரீயம் போன்றது எனக் கருதுகின்றனர். எங்கெல்லாம் ஒரு புதிய கொள்கை அறிமுகமாகிறதோ, அதை ஒரு பரிசோதனை எனலாம். ஓர் ஆராய்ச்சியாளர் அந்தக் கொள்கையினால் ஏற்படும் விளைவுகளையும் அதன் வெற்றி தோல்விகட்கான காரணங்களையும் கண்டறியவேண்டும்.

### நிறைகள்

ஒரு அறிவியற் பூர்வமான படிப்பிற்கு இம்முறை உதவுகிறது. சில அரசியல் நிறுவனங்களின் செயல்திறன் அளவிடுதல் இம்முறையில் எளிது. தற்கால அரசியல் அறிவியலாளர்கள் பரிசோதனை முறையிலான உதவும் பல கருவிகளை உருவாக்கியுள்ளனர். அவை ஆராய்ச்சியாளர்கட்குப் பெரிதும் உதவுகின்றன.

### குறைகள்

அரசியல் அறிவியல் ஒரு சமூக அறிவியல் ஆகும். எனவே அதில் பரிசோதனைகட்கான வாய்ப்பு மிகவும் குறைவு. மக்களாட்சியில் நடத்தப்படும் சில பரிசோதனைகள் அரசியல் தலைவர்களின் வீழ்ச்சியில் முடியலாம். மக்களை மாறாத நிலையில் வைத்துப் பரிசோதனை செய்வது இயலாத செயல், எனவே சரியான வகையில் பரிசோதனைகள்செய்வது கடினம்.

## 1.2.7. நடக்கை முறை

இது தற்காலத்தில் முக்கியத்துவம் பெற்றுவரும் முறையாகும். இரண்டாவது உலகப்போருக்குப் பின்னர் இம்முறை அதிக முக்கியத்துவம் பெற்றது. சில அமெரிக்க ஆராய்ச்சியாளர்கள் இம்முறைக்குச் சிறப்பினைத் தேடித்தந்தனர். இம்முறை மனிதனின் அரசியலில் நடக்கையை வலியுறுத்துகிறது. இம்முறையை வலியுறுத்துவோரிடையே எது அரசியல் நடக்கை என்பதில் கருத்து வேறுபாடு நிலவுகிறது. சிலரது கருத்துப்படி அரசியல் சூழ்நிலைகள் தனி நபர்களின் உளப்பாங்கே நடக்கை எனப்படுகிறது. வாக்காளர்களின் நடக்கையே அரசியல் நடக்கை எனச் சிலர் கருதுகின்றனர். மனிதனின் அரசியல் நடக்கை, அவனது நோக்கங்கள், உணர்வுகள், நம்பிக்கைகள், செயல்கள், மனப்பான்மை போன்றவற்றின் வாயிலாக வெளிப்படுத்தப்படுகிறது. நடக்கை முறை சார்ஸ் E. மெரியம், ஹெரால்டு D. லாஸ்வெல் போன்றோர் இம்முறையின் ஆதரவாளர்கள் ஆவர்.

### நிறைகள்

இது ஒரு நல்ல அறிவியற் பூர்வமான முறை எனலாம். இம்முறையில் மதிப்புமிக்கப் புள்ளிவிபரங்கள் சேகரிக்கப்படுகின்றன.

வாக்களிப்புப் பாங்கு, அரசியல் கட்சிகள் மற்றும் தன்னலக் குழுக்களின் பங்கு, அவற்றின் மனப்பாங்கு போன்ற விஷயங்கட்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. மக்களாட்சிக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்படும் தற்காலத்தில் மக்கள் கூட்டத்துடன் தொடர்புடைய பிரச்சினைகள் பற்றிய இப்படிப்பு முறை ஏற்றது எனலாம். இம்முறையின் காரணமாக அரசியல் அறிவியலின் இயக்காற்றல் பெருகிவிட்டது எனலாம்.

## குறைகள்

அரசியல் நடக்கை என்பது தெளிவற்ற சொற்றொடர் எனப்படுகிறது. மனிதனின் அரசியல் நடக்கையை ஆய்வது எளிதான செயல் அல்ல. அம்முறையைப் பின்பற்ற பிற முறைகளைப் பலிகொடுப்பது என்பது இயயலாதவொன்று எனலாம். இம்முறைக்காக வாதாடுபவர்கள் அரசியல் ஓர் அறிவியலே என்பதை வலியுறுத்துவதில் அதிக நாட்டம் கொண்டுள்ளனர். எனவே அவர்கள் ஒழுக்கத் தகவுகளைப்பற்றி அக்கறை கொள்வதில்லை. ஸெல்லி லிப்சன் எனபவரும் இம்முறையைக் கடுமையாக விமர்சிக்கின்றனர்.

## 1.2.8. ஒருங்கிணைப்பு முறை

புள்ளியியல் முறை, உயிரியல் முறை, சமூகவியல் முறை, சட்டவியல் முறை, உளவியல் முறை போன்ற சில முறைகளும் உள்ளன. கார்ல் J.பிரட்ரிட்ச் என்பார் இம்முறைகள் அனைத்தையும் ஒருங்கிணைந்த ஒரு முறையை உருவாக்கினார். அம்முறைக்கு ஒருங்கிணைந்த முறை எனப்பெயரிட்டார். அவரது கருத்துப்படி எந்தச் சமூக அறிவியலையும் குறிப்பிட்ட ஒரே ஒரு முறையின் மூலமாகப் பயில முடியாது. அரசியல் அறிவியல் ஒரு விரிவான படிப்பு. எனவே அதனைப் பயிலப் பல்வேறு முறைகள் அவசியமாகின்றன. வெவ்வெறு அரசுகளில் வாழ்கின்ற மக்கள் பல்வேறு குணநலன்களைப் பெற்றவர்களாகவும், மாறுபட்ட இலக்குகளை அடைய விரும்புவோராகவும் உள்ளனர். அவர்களது குணநலன்களும் எண்ணங்களும் மாறிக்கொண்டே இருக்கின்றன. அம்மாற்றங்கள் நாட்டுக்கு நாடு, சமுதாயத்திற்குச் சமுதாயம், காலத்திற்குக் காலம் வேறுபடுகின்றன. எனவே, அவற்றைப் பயிலப் பல்வேறு முறைகள் அவசியமாகின்றன. இவ்வாறு பல்வேறு முறைகளையும் ஒருங்கிணைத்து ஒரே நேரத்தில் பயன்படுத்துவதை ஒருங்கிணைந்த முறை என்கின்றனர். ஒருங்கிணைந்த முறை எல்லாவற்றையும் உள்ளடக்கிய முறை எனக் கூறப்படுகிறது.

## 1.3. அரசியலமைப்பின் இலக்கணம்

உலகில் பலவித அரசியலமைப்பு இருப்பது போலவே 'அரசியலமைப்பு' என்ற சொல்லுக்கும் பலவிதமான வரையறைகள் கொடுக்கப்பட்டுள்ளன. எனினும் இதுகாறும் இயற்றப்பட்டுள்ள வரையறைகள் சுருக்கமாகவும், தெளிவாகவும் அரசிலமைப்பின் பொருள் செறிந்த தன்மையைப் பற்றிச் சட்ட வல்லுநர்கள் பொதுவான கருத்துக்களைக் கொண்டுள்ளார்கள். அரசியலைப் பற்றிப் பயிலும் மாணவர்கள் அக்கருத்துக்களின் தொகுப்புக்களையறிந்திடின் அரசிலமைப்புக்களைப் பற்றிப் படிக்கும்போது அவை பயனுடையவையாக இருக்கும்.

பல சிறந்த சட்டவல்லுநர்கள் கொடுத்துள்ள வரையறைகளின் முக்கியத்துவம் அளவிறந்தது. "எக்கோட்பாடுகள் ஆட்சியின் அமைப்பைப் பற்றி வரையறுத்துக் கூறுகின்றனவோ அவை தாம் அரசிலமைப்பு" என ஆஸ்டின் கூறுகிறார். சர்.ஜேம்ஸ் மக்கின் டோஸ் கூறுவதாவது: ஆட்சியாளர்களின் உரிமைகளையும், குடிமக்களின் முக்கியச் சலுகைகளையும் பற்றி எடுத்துரைக்கும் எழுதப் பெற்ற அல்லது எழுதப்படாத சட்டங்களின் தொகுப்பே அரசியலமைப்பு ஆகும்". அரசியலமைப்பு என்ற சொல் ஒரு சமுதாயத்தில் பகிர்ந்து கொடுக்கப்படுகிறது என்பதை விளக்கும் சொல்" என ஆங்கில அரசியல் அறிஞர் லீவிஸ் கூறியுள்ளார். "ஒரு நாட்டின் இறைமை எவ்வாறு பகிர்ந்தளிக்கப்பட வேண்டும் அல்லது செலுத்தப்படவேண்டும் என்பதைப் பற்றி நேரடியாகவோ அன்றி மறைமுகமாகவோ கூறும் சட்டங்களின் விளைவே அரசிலமைப்பு ஆகும்" என டைசி வகுத்துள்ளார். "அரசு எவ்வாறு அமைக்கப்படவேண்டும், அரசின் பல கூறுகளின் அதிகாரங்கள் எவ்வாறு பகிர்ந்து கொள்ளப்பட்டிருக்க வேண்டும். எம்முறையில் இவை செயல்படுத்தப்படவேண்டும் என்பதைப்பற்றி எந்தச் சட்டங்களின் எழுதப்பட்ட அல்லது எழுதப்படாத தொகுப்பு விளக்குகிறதோ அத்தொகுப்பே அரசியலமைப்பு ஆகும்" என கில் கிறைஸ்ட் கூறுகிறார்.

மேற்கூறிய இலக்கியங்களினின்றும் ஓர் அரசு நிறுவப்பட வேண்டிய முறைகளைப் பற்றியும், அதன் அதிகாரங்களைப் பற்றியும், குடிமக்களின் உரிமைகளைப் பற்றியும், அரசுக்கும் குடிமக்களுக்குமிடையே உள்ள உறவை விளக்கியும் கூறுகிறது என்பது புலனாகிறது. ஒரு நாட்டில் நிலையான அரசைத் தோற்றுவித்து, குடிமக்களுடைய அடிப்படையுரிமைகளைக் கொடுத்துக் காத்து, நிர்வாகத் துறையின் அதிகாரங்களை வரையறுத்து, சட்டமன்றத்தின் பணிகளைத் தொகுத்து,

நீதித்துறையின் அமைப்பு, அதிகாரங்களை வகுத்து உரைப்பதே அரசிலமைப்பின் நோக்கமாகும். உடலுழைப்பிற்கு எல்லா உறுப்புகளும் இன்றியமையாதன போல தற்கால அரசுகள் செயல்படுவதற்கு அரசியலமைப்புகள் இன்றியமையாதனவாகும். அரசியலமைப்பு எழுதப்பெற்றோ அல்லது எழுதப்பெறாமலோ இருக்கலாம். அரசிலமைப்புக்களில் வழக்கம் சிறப்பிடம் பெற்றுள்ளதால், கருப்பொருள் உயிரற்ற சொற்றொடர்களைவிட சிறப்புடைய தென்று உணரப்பட்டிருக்கிறது. “ஒரு நாட்டின் அடிப்படையான நிறுவனங்கள் எவ்வாறு தோற்றுவிக்கப்பட்டுச் செயல்படவேண்டும் என்பதைப் பற்றி ஓர் ஆவணத்திலோ அன்றிப் பல சிறிய ஆவணங்களிலோ பொறிக்கும் முயற்சிகள் அபூர்வமாகத்தான் வெற்றி பெறுகிறது. அரசின் பலநெறிகளைப் பற்றி முழுமையாகத் தொகுத்துரைக்கின்ற அரசியலமைப்பு இருந்தாலும் நடைமுறையில் அக்கோட்பாடுகள் மாறுபட்ட நிலையில் விளங்கலாம்: மாறாகப் புதிய கொள்கைகள் எழுச்சி பெறுவதின் விளைவாக அரசியலமைப்புக்கும் நடைமுறையாட்சிக்கும் தொடர்பற்ற நிலை தோன்றலாம்” என லோவல் குறிப்பிட்டள்ளார்.

### 1.3.1. அரசியலமைப்புக்களின் பகுப்பு — எழுதப்பெற்ற, எழுதப்பெறாத அரசியலமைப்புகள்

எளிதில் விளங்கிக் கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தோடும் சுருங்கச் சொல்ல வேண்டுமென்பதற்காகவும் அரசியலமைப்புக்கள் எழுதப்பெற்றவை எழுதப்பெறாதவை எனப் பிரிக்கப்பட்டுள்ளன. அரசு அமைக்கப்பட உறுதுணையாக இருக்கும் கோட்பாடுகள், அரசின் பல கூறுகளின் அதிகார விளக்கங்கள் குடிமக்களுடைய உரிமைகள் இவைகளைப் பற்றி ஓர் ஆவணத்திலோ, பல ஆவணங்களிலோ எழுதப்பட்டிருந்தால் அவ்வரசியலமைப்பினை எழுதப்பெற்ற அரசியலமைப்பு எனக் கூறுவர். எடுத்துக்காட்டு: அமெரிக்க ஐக்கிய நாடுகள், பிரான்ஸ், சோவியத்துக்குடியரசு, இந்தியா, பொதுவாக எழுதப்பெற்ற அரசியலமைப்புகள் ஒரு குறிப்பிட்ட நாளில் ஒரு குறிப்பிட்ட ஆவணத்தில் எழுதப்பெற்றிருக்கும். எடுத்துக்காட்டு அ.ஐ.நாடுகள், இந்தியா, சிற்சில வேளைகளில் பிரான்ஸ் நாட்டு மூன்றாம் குடியரசு போல பல்வேறு நாட்களில் பொறிக்கப்பட்டுள்ள ஆவணங்களின் இணைப்பாக விளங்கலாம். அது போன்ற தனித்து அபூர்வமாகக் காணப்படுகின்ற அரசியலமைப்புத் தவிர, எல்லா அரசியலமைப்புக்களும் குறிப்பிட்ட தினத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்ட அரசியலமைப்புக்களாவே உள்ளன. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பு 1787—ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 17—ஆம் தேதியும் இந்திய அரசிலமைப்பு 1949—ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 26ம் தேதியும் ஏற்கப்பட்ட அரசியலமைப்புக்களாகும்.

ஒரு சட்டமன்றமோ அல்லது ஓர் அரசியல் நிர்ணயமன்றமோ எழுதப்பெற்ற அரசியலமைப்பைத் தோற்றுவிக்கிறது. ஆனால் எழுதப்பெறாத அரசியலமைப்பின் கோட்பாடுகளோ, அரசின் நெறிகளை ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட ஆவணங்களில் எழுதப் பெறாமல் விளங்குவனவாகும். அதாவது வழக்கங்களையும் மரபுகளையும் மட்டுமே பின்பற்றி எழுதப்பட்ட சட்டங்களை அடிப்படையாகக் கொள்ளாமல் நிற்குமானால் அது எழுதப்பெறாத அரசியலமைப்பு எனக் கூறப்படுகிறது. அந்நாட்டுப் பழக்க வழக்கங்கள், மரபுகள், நீதிமன்றத் தீர்ப்புகள், சட்டமன்றமியற்றும் நெறிகள் ஆகியவற்றின் தொகுப்பாக அது விளங்கும். டார்வின் கருத்துப்போல் பரிணாமக் கோட்பாட்டினைச் சித்தரித்துக் காட்டும் அமைப்பாக அது விளங்கும். அவ்வப்பொழுது தோன்றுகின்ற மாறுதல்களையும் தெளிந்த அறிவின் முடிவுகளையும் அது காட்டி நிற்கும். ஒரே நாளில் இயற்றப்பட்ட அமைப்பாக இல்லாமல் சமுதாய வளர்ச்சிக்கேற்ப வளர்ந்த கோட்பாடுகளின் தொகுப்பாக விளங்கும். எளிதில் ஏற்றுக் கொள்ளப்பட்ட சிந்திக்கப்படாத கோட்பாடுகள் போலன்றி நன்கு சூழ்நிலைகளால் பக்குவப்படுத்தப்பட்ட சிந்தனைக் கோவையாக அது விளங்கும். அரசியலமைப்புகள் தோற்றுவிக்கப்படுகின்றன என்று கூறுவதை விட வளர்கின்றன என்று கூறுவது சிறந்ததும் பொருத்தமானதுமாகும். கிரேட் பிரிட்டனின் அரசியலமைப்பு ஒன்று தான் எழுதப் பெறாத அரசியலமைப்பிற்கு எஞ்சி நிற்கும் சான்றாக விளங்கி வருகிறது.

எழுதப் பெற்றுள்ள அரசியலமைப்புக்கள் தற்காலத்தில் தோன்றியனவாகும். முறையோடு அரசியலமைப்புக்களை எழுதவேண்டும் என்ற எண்ணம் அமெரிக்கக்க காலனிகளிலும் ஐரோப்பாவில் பிரான்சிலும் தோன்றியதாகும். அதன் பின்னர் பல நாடுகளிலும் அம்முறையினைப் பின்பற்றலாயின. எழுதப்பட்டுள்ள அரசியலமைப்புகள் அரசின் அன்றாட அலுவல்கள் செயல்படுத்தப்படுவதற்கு உரைகற்கள் போல விளங்குகின்றன. அவற்றினை எளிதில் மாற்றியமைக்கக் கூடாது என்ற கருத்தோடு இயற்றுகின்ற பெரியோர்கள் நெகிழாத்தன்மையோடு அவற்றைப் படைக்கின்றனர்.

## 1.3.2. எழுதப்பெற்ற அரசியலமைப்பின் சிறப்புக்கள்

### 1. மேன்மை வாய்ந்தது

மரபுகளையும் மாறுகின்ற வழக்கங்களையும் அடிப்படையாகக் கொண்டுள்ள எழுதப்பெறாத அரசியலமைப்பினை விட ஒரு நாட்டு மக்கள் செவ்வனே வாழ்வதற்காக அந்நாட்டின் அறிஞர் பெருமக்கள் சிந்தித்து வகுக்கும் அரசியலமைப்பு மேம்பட்டதாகும். அரசின் நடவடிக்கைகளில் ஐயம் ஏற்படும்போது எழுதப்பட்டுள்ள கோட்பாடுகளுக்குட்பட்டுள்ள செயல்களா அவை என சரிபார்த்து முடிவு

எடுக்கலாம். மேலும் சர்வாதிகாரப் போக்கிலிருந்து பாதுகாத்துக்கொள்ளவும் உதவுகிறது.

2. உறுதித்தன்மை

ஒரு சாதாரண மசோதவை இயற்றப்படும் முறையிலிருந்து மாறுபட்ட ஒரு விசேஷ முறையைக் கையாண்டு அரசியலமைப்பு மாற்றப்படுவதால் எழுதப்பட்ட அரசியலமைப்பு உறுதிகொண்ட தன்மையை மேலும் பெறுகிறது.

குறைகள்

1. நெகிழாத்தன்மை

பொதுவாக எழுதப்பெற்ற அரசியலமைப்புக்களின் நெறிகள் எளிதில் மாற்றியமைக்கப்பட முடியாமல் அமைந்துள்ளன. இதன் விளைவாக மாறுகின்ற சூழல்களிலும் நெருக்கடிக் காலங்களிலும் அரசியலமைப்பினை மீற அல்லது தகர்க்க வேண்டும் என்ற உணர்வும் கட்டுமீறுகிறது. "உறுதித்தன்மையால் ஏற்படும் நன்மையை நெகிழாத் தன்மையின் தீமை சமன்படுத்திவிடுகிறது" என கெட்டல் கூறியுள்ளார். "புரட்சிகளுக்கு அடிப்படைக் காரணம் நாடுகள் முன்னேறும் போது அரசியலமைப்புக்கள் ஸ்தம்பித்து நிற்பது தான்" என மெக்காலே கூறியுள்ளார்.

2. தெளிவின்மை

குழப்பமின்மையும் தெளிவும் எழுதப்பெற்ற அரசியலமைப்புக்குத் தேவையான கூறுகளாகும். ஆனால் பெரும்பான்மையான எழுதப்பட்ட அரசியலமைப்புக்களில் இவ்வரு கூறுகளும் காணப்படுவதில்லை. இந்திய அரசியலமைப்பு வழக்குரைஞர்கட்கு சுவர்க்கம் போன்றது எனக் கூறுவர். ஏனெனில் வழக்குகள் தொடுப்பதற்கு அளப்பறிய வாய்ப்புகள் இதில் உண்டு. சிறப்பாக அடிப்படை உரிமைகளைப் பற்றி ஏராளமான வழக்குகள் தொடுக்கலாம். ஆனால் கோலக்நாத் வழக்கில் பாராளுமன்றம் இனி அரசியலமைப்பு உறுதி கொடுத்துள்ள அடிப்படை உரிமைகளைப் பாதிக்கும் அல்லது குறைக்கும் சட்டங்களை இயற்றமுடியாது என தீர்ப்பு வழங்கியது. ஆனால் அரசியலமைப்பின் 24—வது திருத்தத்தின் படி குடிமக்களின் அடிப்படை உரிமைகள் உட்பட அரசியல் சாசனத்தின் எந்தப் பகுதியை வேண்டுமானாலும் திருத்தி அமைக்க பாராளுமன்றத்திற்கு அதிகாரம் வழங்கப்பட்டது. கேசவாநந்த பாரதி வழக்கில் தலைமை நீதிமன்றம் இந்த உரிமையைப் பாராளுமன்றத்திற்கு வழங்கியது. ஆனால் அரசியலமைப்பின் அடிப்படை அமைப்பை மாற்றக்கூடாது என்றும் விதித்தது. இந்த அடிப்படை அமைப்பு இன்னது என்பது தெளிவற்றிருக்கிறது.

## 1.3.3. எழுதப்பெறாத அரசியலமைப்பின் சிறப்புக்கள்

### 1. நெகிழும் தன்மை, புதியவற்றை எளிதில் ஏற்றுக் கொள்ளும் தன்மை

எழுதப்பெறாத அரசியலமைப்பின் அடிப்படையில் அரசின் நெறிகள் நெகிழ்ந்து கொடுப்பதோடு, காலத்தின் மாறுதலால் விளையும் புதுக்கருத்துக்களை எளிதில் ஏற்றுக்கொள்ளக் கூடியனவாகவும் அமையும். சாதாரண காலங்களிலும், நெருக்கடிக் காலங்களிலும் அரசியலமைப்பைச் சாதாரண சட்டத்தை இயற்றுவது போல எளிதில் மாற்றி அமைக்கலாம். இதன் விறைவாகச் சிக்கல்களும் தேவையற்ற விதிமுறைகளும் தகர்க்கப்படலாம். அரசியலமைப்பைத் திருத்துவதற்கான தனி முறையைக் கையாள வேண்டியதில்லையாகையால் காலந் தாழ்த்தாமல் நெருக்கடி நிலைமைகளைச் சட்ட மாறுதல்களால் சமாளிக்கலாம்.

### 2. பழமையுடன் உறவு

எழுதப்பெறாத அரசியலமைப்பின் அடிப்படையில் அரசியல் மரபுகள் பழைய காலத்தினின்றும் தொடர்ந்து வருவனவாக இருக்கும். இதன் விளைவாகப் பழமையுடன் உள்ள நெருங்கிய உறவு இவ்வகை அரசியலமைப்பின் வளர்ச்சிக்குத் துணையாக உள்ளது.

### எழுதப்பெறாத அரசியலமைப்பின் குறைபாடுகள்

### 1. நிலையற்ற தன்மை

எழுதப்பெறாத அரசியலமைப்பின் மிக முக்கியமான குறைபாடு அதன் நிலையற்ற தன்மையாகும். பழக்கங்கள், மரபுகள், நீதிமன்றத் தீர்ப்புக்கள், பாராளுமன்ற சட்டதிட்டங்கள் ஆகியவற்றைச் சார்ந்து அரசியலமைப்பின் அடிப்படைக் கோட்பாடுகள் விளங்குவதால், அரசியலமைப்பிற்கு விளக்கம் கொடுக்கும் முறையில் நீதிமன்றத்தின் அதிகாரம் மிக உயர்ந்து காணப்படுகிறது. “நீதிமன்றங்களின் கைப்பாவைகளாக எழுதப்பெறாத அரசியலமைப்புக்கள் இயங்குகின்றன” என ஜே.ஏ.ஜேன்சன் குறித்துள்ளார்.

### 2. வல்லாட்சிக்கு வழிவகுத்தல்

மேலும் எழுதப்பெறாத அரசியலமைப்பின் நிர்வாகத் துறைக்குத் தன் அதிகாரங்களைப் பெருக்கிக் கொள்ள இடமிருக்கிறது. தன் விருப்பிற்கேற்ப முறையின்றி அரசியலமைப்பினை மாற்றும் வழிவகை நிர்வாகத் துறைக்குக் காணப்படுகிறது. அரசியலறிவோடும், விழிப்புணர்வோடும் விளங்குகின்ற வாக்காளர்தாம் நிர்வாகத் துறையின் வல்லாட்சிப் போக்கைத் தடுத்து நிறுத்த இயலும்.

எழுதப்பெற்ற அரசியலமைப்பு, எழுதப்பெறாத அரசியலமைப்பு என்ற பாகுபாடு ஒரு நாட்டின் அரசின் நெறியை உணர்ந்து கொள்வதற்குப் பொதுவான முறையில் உதவியளித்தாலும் முழு வேறுபாடுகளைத் தெளிவுபடுத்துவதற்கு இம்முறை பயன்படாததோடு நடைமுறையிலும் பொருள் செறிந்ததாகக் காணப்படுவதில்லை. எந்த அரசியலமைப்பும் முழுமையாக எழுதப்பெற்றோ அல்லது முற்றிலும் எழுதப்பெறாமலோ விளங்குவதில்லையாதலின் ஸி.எப்.ஸ்ட்ராங் இம்முறையில் அரசியலமைப்புக்களைப் பகுத்தல் பொய்யான முறையாகும் எனப் பகர்ந்துள்ளார். "எழுதப்பெற்றது, எழுதப்பெறாதது என்ற தனிச்சிறப்பு, தராததால் வேறுபட்டதேயன்றி இனத்தால் வேறுபட்டதன்று" என கார்னர் குறித்துள்ளார்.

### 1.3.4. நெகிழா அரசியலமைப்பும், நெகிழும் அரசியலமைப்பும்

அரசியலமைப்புக்களை எழுதப் பெற்றவையெனவும் எழுதப் பெறாதவையெனவும் பகுத்தல் தவறான முறையாவதோடு, குழப்பத்தில் ஆழ்த்துகின்ற ஆரய்ச்சிக்குப் பொருந்தாத வழியாகும் என பிரைஸ் கூறியுள்ளார். இவர் புதியதோர் முறையினை தெரிவித்துள்ளார். ஓர் அரசியலமைப்பினைத் திருத்தும் முறையிலிருந்து அது நெகிழும் அன்றி நெகிழா அரசியலமைப்பா என பகுத்தறியும் முறையே இவர் கூறியதாகும். ஓர் அரசியலமைப்பைச் சாதராணச் சட்டங்களை இயற்றுவது போலவே திருத்தியமைக்க முடியுமெனில் அது நெகிழும் அரசியலமைப்பாகும்: அரசியலமைப்பினைத் திருத்துவதற்குச் சட்டமியற்றும் முறை போலன்றி ஒரு சிறப்புமுறை பயன்படுத்தப்படுமெனின் அவ்வரசியலமைப்பு நெகிழா அமைப்பு ஆகும். இப்பகுப்பு முறையில் ஓரளவேனும் முக்கியத்துவம் உண்டு.

ஒரு நெகிழா அரசியலமைப்பு உறுதித்தன்மையும் பெற்றுள்ளது ஆகும். அது ஜிப்ரால்டர் பாறையைப் போன்று கடினமானது. சட்டமன்றம் சாதாரண சட்டங்களை இயற்றுவது போல அரசியலமைப்பினை எளிதில் மாற்ற முடியாது. தனிக்குழு ஒன்று கூட்டப்பட்டோ அல்லது சிறப்பு முறையிலோ தான் அரசியலமைப்பினை மாற்றவோ, திருத்தவோ இயலும். இம்முறையில் சாதாரண சட்டங்களைவிட அரசியலமைப்புச் சட்டத்திற்கு உயர்ந்த இடமளிக்கப்பட்டுள்ளது. மாசுபடிந்த கரங்கள் தொடா வண்ணம் அரசியலமைப்பு சட்டம் முதன்மையாகவும் அறுதித் தன்மையாகவும் விளங்குகிறது. இயற்றப்படுகின்ற சட்டங்கள் அரசியலமைப்புச் சட்டங்கட்கு முரணாக இருக்குமெனின் அச்சட்டங்கள் அரசியலமைப்பிற்குப் புறம்பானதாகக் கருதப்படும். அது போலச் சட்டங்கள் செல்லுபடியாகுமா அல்லது செல்லுபடியாகாதா எனத் தீர்மானிக்கும் அதிகாரம் நீதிமன்றத்திடம் பொறுப்பாக்கப்பட்டுள்ளது. அரசியலமைப்பின்

காவல்நாயாக நீதிமன்றம் விளங்குகிறது. பொதுவாக நெகிழா அரசியலமைப்புக்கள் எல்லாம் எழுதப்பெற்றிருக்கும். எழுதப்பெற்ற அரசியலமைப்புக்கள் எல்லாம் நெகிழாத்தன்மை பெற்றிருக்க வேண்டிய தேவையில்லையெனினும் உலகில் பெரும்பான்மையான எழுதப்பெற்ற அரசியலமைப்புக்கள் நெகிழா யாப்புகளாக இயங்குகின்றன.

### 1.3.5. அரசியலமைப்புத் திருத்த முறைகள்

மாறுகின்ற சூழல்கட்கேற்ப அரசியலமைப்பைத் திருத்தியமைக்கும் முறைகளில் நெகிழா அரசியலமைப்புக்களில் சிறப்பு வழிவகைகள் காணப்படுகின்றன. பொதுவாக அரசியலமைப்பைத் திருத்த நான்கு முறைகள் கையாளப்படுகின்றன. (1) சாதாரணச் சட்டமன்றங்களே அரசியலமைப்பினைத் திருத்தலாம். இந்தியா, பிரெஞ்சுக் குடியரசு, தென் ஆப்பிரிக்கா, சோவியத்துக் குடியரசு ஆகிய நாடுகளில் இம்முறை வழக்கிலுள்ளது. (2) அரசியலமைப்புத் திருத்தத் தீர்மானம் மக்கள் வாக்கெடுப்பில் ஏற்றுக் கொள்ளப்படாமல் நடைமுறைக்கு வரும். இம்முறை ஆஸ்திரேலியாவிலும் சுவிட்சர்லாந்திலும் உள்ளது. (3) கூட்டாட்சி நாடுகளில், ஒரு குறிப்பிட்ட பெரும்பான்மைப் பகுதிகள் ஏற்றுக் கொண்டால்தான் அரசியலமைப்புத் திருத்தத் தீர்மானம் ஏற்றுக் கொள்ளப்படும். ஆஸ்திரேலியா, சுவிட்சர்லாந்து நாடுகளில் பெரும்பான்மையான கூட்டாட்சிப் பகுதிகளின் இசைவோடு பெரும்பான்மையான வாக்காளர்களும் திருத்தத் தீர்மானத்திற்கு இசைவு தெரிவிக்க வேண்டுமென வரையறை செய்யப்பட்டுள்ளது. அமெரிக்கக் கூட்டாட்சியிலும் நான்கில் மூன்று பங்கு கூட்டாட்சிப் பகுதிகள் திருத்தத்திற்கு இசைவு தெரிவிக்க வேண்டும். (4) அரசியலமைப்புத் திருத்தத்தைப் பற்றி ஆய்வதற்காகச் சிறப்புக் கூட்டம் போடப்பட்ட அதன் முடிவுகளினடிப்படையில் திருத்தங்களையேற்கும் முறை அமெரிக்க ஐக்கிய நாடுகளின் சில மாநிலங்களும் சில இலத்தீன் அமெரிக்கக் குடியரசுகளும் கொண்டுள்ள முறையாகும்.

### 1.3.6. நெகிழும் அரசியலமைப்பின் கூறுகள்

பழங்காலத்தில் நெகிழும் அரசியலமைப்பு முறையைப்பற்றி மட்டுமே மக்கள் அறிந்திருந்தனர். தற்காலத்தில் இந்நிலை தலைகீழாகிவிட்டது. பிரிட்டன் நாடு ஒன்றுதான் எழுதப்பெறாத, நெகிழும் தன்மைபெற்ற அரசியலமைப்பிற்குச் சான்றாக எஞ்சியுள்ளது. ஒரு நெகிழும் (வளைந்து கொடுக்கும்) அரசியலமைப்பு, சாதாரணச் சட்ட திட்டங்களை இயற்றி திருத்தித், தள்ளுபடி செய்வதற்கான வழிமுறைகளில் அதே சட்டமன்றங்கள், அதே முறையில் மாற்றியோ திருத்தியோ அமைக்கப்படும் தன்மையை இயல்பாகப் பெற்றிருக்கும். இதையே வேறுவிதமாகக் கூறின்,

சாதாரணச் சட்டங்களை விட இந்த அரசியலமைப்பிற்கு வேறு எந்த உயர்வான சட்ட மேலாண்மையும் கிடையாது. கிரேட் பிரிட்டனில் பாராளுமன்றம் இறைமையோடு விளங்குவதால் அந்நாட்டு நீதிமன்றங்களோ வேறு குழுக்களோ பாராளுமன்றமியற்றும் சட்டங்களை சட்டத்திற்கு அப்பாற்பட்டவை எனக் கூறவியலாது. இதனடிப்படையில்தான் இந்நாட்டு அரசியலமைப்பினை நெகிழும் தன்மை பெற்றுள்ளது எனக் கூறுகிறோம். பொதுவாக நெகிழும் யாப்பு எழுதப்பெறாத அரசியலமைப்பின் தன்மையையே பெற்றிருக்கும. எடுத்துக்காட்டு : கிரேட் பிரிட்டன்.

நெகிழும் அரசியலமைப்பு கீழ்க்கண்ட முக்கியமான கூறுகளைப் பெற்றுள்ளது. (1) அரசியலமைப்புச் சட்டங்களும் சாதாரணச் சட்டங்களும் வேறுபாடின்றி ஒரே மாதிரியான முறையில் சட்டமன்றத்தால் இயற்றப்படும். (2) அரசியலமைப்புச் சட்டங்கள் இயற்றும் மன்றமி, சட்டமியற்றும் மன்றத்தினிடமிருந்து மாறுபட்டது அன்று (3) அரசியலமைப்புச் சட்டங்கள் சாதாரணச் சட்டசங்கபை போன்'றே திருந்தியமைக்கப்பெறும் அல்லது தள்ளுபடியாகும். (4) நீதித்துறைக்குச் சட்டமன்றமியற்றும் சட்டங்களை அரசியலமைப்பிற்கு உட்பட்டனவென்றோ அப்பாற்பட்டனவென்றோ கூறும் அதிகாரம கிடையாது (5) நெகிழும் அரசியலமைப்பு எழுதப் பெற்றோ எழுதப்பெறாமலோ விளங்கலாம்.

## 1.3.7. நெகிழாஅரசியலமைப்பின் சிறப்புக்கள்

### 1. உறுதித்தன்மை, நிலைத்திருக்கும் தன்மை

குடிமக்களுடைய உரிமைகள், அரசின் பல கூறுகளுடைய அமைப்பு, அதிகாரங்கள் ஆகியவற்றைப் பற்றிய விதிமுறைகள் போன்ற சில அடிப்படைக் கருத்துக்கள் வெகு எளிதில் மாற்றப்படக்கூடாது என்பதுதான் நெகிழா அரசியலமைப்பின் தலையாய சிறப்பு ஆகும். தெளிவான ஆழ்ந்த சிந்தனைக்குப் பின்னரே மாற்றங்கள் செய்யப்பட இயலும் என்ற பாதுகாப்பு, நெகிழா அரசியலமைப்பினால் விளைகிறது. அரசியலமைப்பிற்கு உறுதித் தன்மையையும் நிலைத்திருக்கும் தன்மையையும் நல்கும் தனிச் சிறப்பினை நெகிழா யாப்புப் பெற்றுள்ளது.

### 2. குடிமக்களுடைய அடிப்படை உரிமைகளைக் காத்தல்

பொதுவாக எழுதப்பெற்றிருக்கும் ஒரு நெகிழா அரசியலமைப்பில் குடிமக்களுடைய அடிப்படை உரிமைகள் பற்றி ஓர் அதிகாரம் இருந்தும், தன்னுடைய அடிப்படையுரிமை பாதிக்கப்படுகிறது என்று ஒரு குடிமகன் நினைப்பாரானால், தவறிழைத்தவர் மீது வழக்குத் தொடுத்துத் தன் குறைகளைத் தீர்த்துக் கொள்ள இம்முறை பயன்படும்.

### 3. சிறுபான்மையினரின் உரிமைகளைக் காத்தல்

### 4. சட்டமன்றத்தின் வரைகடப்பினைத் தடுத்தல்

நெகிழா அரசியலமைப்பு, சட்டமன்றம் வரம்பு கடந்து செல்லா வண்ணம் தடையிடும் தன்மையுடையதாகும். அரசியலமைப்பினடிப்படையில் அதிகாரங்களைப் பெற்று விளங்கும் சட்டமன்றம் அவ்வமைப்பிற்கு எதிரான முறையில் சட்டங்களை இயற்ற முடியாது.

## 1.3.8. நெகிழா அரசியலமைப்பின் குறைகள்

### 1. நெகிழா தன்மையும் புதியவற்றை ஏற்றுக் கொள்ளும் தன்மையுமின்மை

மாறுகின்ற சூழல்களுக்கேற்பவோ அன்றி நெருக்கடிக் காலங்களிலோ நெகிழா யாப்பு வளைந்து கொடுக்காமல் உடைந்து விடலாம். அரசியலமைப்பைத் திருத்துவதற்கு சிறப்பு வழிகள் மேற்கொள்ளப்பட வேண்டுமென்றிருப்பதால் அரசியலமைப்பு புதிய மாற்றங்களுக்கு ஈடுகொடுக்க முடியாமற்போக நேரிடலாம். மெக்காலே பிரபு புரட்சிக்கான காரணங்களை ஆராய்ந்து கூறும்போது நாடுகள் முன்னேறுகின்ற நிலையில், அரசியலமைப்புக்கள் அசையா நிலையில் விளங்குவது முக்கியமான காரணமாகும் எனக் குறித்துள்ளார். ஒரு நல்ல அரசியலமைப்பு கால மாறுதல்களுக்கேற்ப எளிதில் மாற்றியமைக்கப்படக்கூடிய தன்மையைப் பெற்றிருத்தல் வேண்டும். “சூழ்நிலைக்கேற்ப மாற்றியமைக்கப்படும் தன்மையும் வளைந்து கொடுக்கக்கூடிய தன்மையும் இருந்தால்தான் முன்னேற்றத்திற்கு வழியுண்டு. நெகிழா அரசியலமைப்பு பெற்றிருக்கும் நாடுகளில் கூட எளிதில் அரசியலமைப்பு திருத்தியமைக்கப்படுகின்ற வழிவகை இருந்தால் தான் முன்னேற்ட [illegible]படும்” என்று கில்கிறைஸ்ட் கூறியுள்ளார்.

### 2. நீதித்துறைக்கு கூடுதலான அதிகாரங்கள்

நெகிழா அரசியலமைப்பின் மற்றொரு முக்கியமான குறைபாடு நீதித்துறைக்குச் சட்டங்களின் நெறிக்குட்பட்ட தன்மையினை அறுதியாகக் கூறுகின்ற மிகைப்பட அதிகாரம் ஆகும். பொதுவாக நீதிபதிகள் பழமைப் பற்றாளர்களாகக் காணப்படுவார்கள். அக்கண்ணோட்டத்தின் விளைவாகச்

சட்டங்களின் உயிர் நோக்கத்தையும் அரசியலமைப்பு சரிபடுத்தப்பட வேண்டியதன் தேவையையும் முழுமையாகப் புறக்கணித்து சட்டங்களின் வறட்டுச் சொற்றொடரின் அடிப்படையில் அவற்றிற்கு விளக்கம் தருவர். அரசியலமைப்பின் அடிப்படைக்கருத்துக்களை மாற்ற வேண்டும் என்ற நோக்கத்தோடு வேறுவிதமான முறையில் அவர்கள் தீர்ப்பளித்தால் அவர்கள் மீது தப்பெண்ணம் ஏற்பட்டு அவர்களின் நடுநிலைமை பற்றி ஐயமேற்பட்டுவிடும். அவ்வப்பொழுது நிர்வாக, சட்டமியற்றும் துறைகளின் விருப்பிற்கேற்ப நீதிபதிகள் தீர்ப்பளித்தால் நீதித்துறையின் சுதந்திரம் அழிந்துவிடும். அந்நிலையில் நிர்வாகத் துறையினரோ சட்டமியற்றும் துறையினரோ நீதிபதிகளை நியமிக்கும் அல்லது நீக்கும் தங்கள் அதிகாரங்களைத் தவறான முறையில் பயன்படுத்தலாம். ஆனால் நீதிபதிகளைக் கட்டுப்படுத்துகின்ற அதிகாரங்களை எடுத்துவிட்டால் நீதித்துறை தேவைக்கு அதிகமான தன்னுரிமை பெற்று முழு வல்லமையோடு செயல்படும். அந்நிலை நாட்டு வளர்ச்சிக்கு தடையாய் அமையும்.

## 1.4. நெகிழும் அரசியலமைப்பின் சிறப்புக்கள்

**நீட்டிப்பாற்றலும் சூழ்நிலைக்கேற்ப மாறுதலும்**

நெகிழும் அரசியலமைப்பின் இரு முக்கியச் சிறப்புக்கள், நீட்டிப்புத் தன்மையும் சூழ்நிலையொட்டி மாற்றியமைக்கப்படும் தன்மையும் ஆகும். அரசியலமைப்புச் சட்டத்தைச் சாதாரண சட்டத்தைப் போலவே திருத்தியமைக்க முடியுமாதலின் அது நீட்டிப்பாற்றலுடையதெனக் கொள்ளப்படும். காலத்திற்கேற்ப நெகிழும் யாப்பும் மாற்றியமைக்கப்படலாம். கால மாறுதல்களை நெகிழா யாப்பைவிட எளிதில் நெகிழும் யாப்பில் ஏற்படுத்திக் கொள்ள முடியும். பிரிட்டனின் அரசியலமைப்பு நெகிழும் தன்மை நடக்கவேண்டியிருந்த பொதுத் தேர்தல்களை ஒத்திவைக்க முடிந்தது. அதே நேரத்திலோ நெகிழாத் தன்மையுடைய அரசியலமைப்பு இருந்ததன் விளைவாக அமெரிக்க ஐக்கிய நாடுகளில் தேர்தல்கள் நடத்தியே தீரவேண்டியிருந்தது. "நெருக்கடிக் காலங்களில் நீண்டு வளைந்து கொடுக்கும் தன்மையை நெகிழும் யாப்பு பெற்றிருப்பதாக அவ்வமைப்பினை முறிக்காமல் மாறுதல்களைச் செய்ய முடிகிறது. நெருக்கடி தீர்ந்தவுடன் எளிதில் பழைய நிலையை அடைந்துவிட முடியும். இஃது அடர்ந்த கிளைகளுடைய மரத்தின் ஒரு கிளையை ஊர்தி செல்வதற்காக ஒரு புறம் ஒதுக்குவது போன்றதாகும்." என்ற பிரைஸ் கூறுகிறார். இத்தன்மையினால் தான் "ஆங்கில அரசியலமைப்பு வளைந்து கொடுக்கும்: ஆனால் முறிந்துவிடாது" எனக் குறிக்கப் பெற்றுள்ளது. நெகிழும் அரசியலமைப்பில் புரட்சிகளைத் தடுத்து நிறுத்தலாம். நெகிழா அரசியலமைப்பின்கீழ் வாழும் மக்கள் சூழ்நிலையின்பால் மனக்குறையடைந்து கொதித்தெழுவதற்கு இடம்

உண்டு. நெகிழும் அரசியலமைப்பு முறையிலோ மக்களின் தேவைகளுக்கேற்ப எளிதில் அடிப்படைகளை மாற்றியமைத்துவிட முடியும்.

## 1.4.1. நெகிழும் அரசியலமைப்பின் குறைகள்

**உறுதிப்பாடு, நிலைத்திருத்தல் ஆகியவையற்றிருத்தல்**

நெகிழும் அரசியலமைப்பிற்கு உறுதித்தன்மையோ நிலைத்த தன்மையோ கிடையாது. அடிக்கடி அரசியலமைப்பு மாற்றப்படுவதால் உறுதித்தன்மை இயலாததொன்றாகிவிடுகிறது. பொதுமக்களின் உணர்வுகட்கு கட்டுப்படவேண்டிய நிலை நெகிழும் யாப்பிற்கு ஏற்பட்டுவிடுகிறது. மக்கள் நிலை பதட்டமாக இருக்கும் தருணத்தில் தேவையும், ஆரய்ந்து பார்க்கும் தன்மையும் புறக்கணிக்கப்பட்டு வெறிகட்கேற்ப மாறுதல்களமைக்கப்படலாம். எந்த நாட்டில் மக்கள் பதட்ட உணர்விணை வழிகாட்டியாகக் கொண்டு பொருள்களை ஆராய்ந்து பாராமல் செயல்களில் ஈடுபடுகிறார்களோ அந்நாட்டிற்கு நெகிழும் அரசியலமைப்புப் பொருந்தாது. ஒரு கண வெறியினால் போற்றற்குரிய நல்ல நிறுவன அமைப்புக்கள் அடித்துச் செல்லப்பட்டுவிட நேரிடும். அரசியல்வாதிகளின் விளையாட்டுப் பொருளாக ஏராளமான மாற்றங்களை கொண்டுவருவதற்கு நெகிழும் யாப்பில் இடமிருப்பதால் அது மக்களாட்சி முறைக்கு முற்றிலும் பொருந்தியதல்ல என்ற கருத்து பல அறிஞர்களிடையே நிலவி வருகிறது.

முடிவாக, எழுதப்பெற்ற நெகிழா யாப்பு அதிகக் கவர்ச்சிகரமானது என்று சுட்டிக்காட்ட இயலும். இம்முறைக்கு கூடுதலான செல்வாக்கு உள்ளதால் இதற்கு நல்ல எதிர்காலம் உள்ளது. இதற்குப் பல காரணங்களைக் கூறலாம். முதற்கண் தற்காலப்போக்கு, உரிமைகளுக்கு உத்திரவாதம் அளிக்கக்கூடிய அரசியலமைப்பினை நாடியுள்ளதால் நெகிழா யாப்புதான் அவ்வாறு உறுதியளிக்க முடியும். இரண்டாவதாக மக்களாட்சிக் கருத்துக்களில் ஆழ்ந்த பற்றுடைய மக்களாட்சிவாதிகள் அரசின் பல கூறுகளுக்குப் பகிர்ந்து கொடுக்ககப்பட்டுள்ள அதிகாரங்கள் சாதாரணச் சட்டமியற்றும் முறையினால் மாற்றியமைக்கப்படக்கூடாது என விழைந்துள்ளனர். மூன்றாவதாக, தற்காலத்தில் கூட்டாட்சி முறை அரசுகளைத் தோற்றுவிக்க வேண்டுமென்ற உளப்பாங்கு உள்ளது. கூட்டாட்சி முறையில் அரசின் அதிகாரங்கள் மைய ஆட்சிக்கும் மாநில ஆட்சிகளுக்குமிடையே பகிர்ந்து கொடுக்கப்படுமாதலின் பூசல்களைத் தவிர்க்கும் நோக்கத்தோடு அரசியலமைப்பு எழுதப்பெற்று நெகிழாத் தன்மையோடு அமைக்கப்பட்டிருக்க வேண்டும். கடைசியாக, புதிய அரசுகள் தற்பொழுது தோற்றுவிக்கப்படுகின்றபோது, எழுதப்பெற்ற அரசியலமைப்பு முறை தேவை என்ற பொதுவிருப்பம் பரவியுள்ளது.

### 1.4.2. ஒற்றையாட்சி, கூட்டாட்சி அரசியலமைப்புகள்

**ஒற்றையாட்சி நாடு**

ஒரு நாட்டரசின் முழு உரிமை அல்லது இறைமை செலுத்தப்படுகின்ற அடிப்படையையொட்டி அரசியலமைப்புக்களை ஒற்றையாட்சி முறையெனவோ கூட்டாட்சி முறையெனவோ பகுத்தல் இயலும். “ஒரு மைய அரசிற்குட்பட்ட நெறியில் ஆட்சியமையுமெனில் அது ஒற்றையாட்சி நாடு எனப்படும். அதாவது பல பகுதிகளின் ஆட்சியதிகாரங்களை முழுமையாக ஓர் அரசே தன் விருப்பத்திற்கேற்றவாறு செலுத்தி அந்த மைய அதிகாரம் தங்கு தடையின்றி இயங்கும். அது பகுதிகட்கு கொடுக்கும் சிறப்பு அதிகாரங்களை எந்த சட்டமும் தடுக்கவியலாதவாறு விளங்கும் என்பதாகும்” என்று சி.எப். ஸ்டிராங் கூறுகிறார். “முழுமையான சட்டமியற்றும் அதிகாரங்கள் அனைத்தும் ஒரு மத்திய அரசினாலேயே வழக்கமாகச் செலுத்தப்படும் அமைப்பு ஒற்றையாட்சி முறை” என டைசி கூறியுள்ளார். “எந்த அமைப்பில் முழு ஆட்சியதிகாரமும் ஒரு நிறுவனத்திலோ அல்லது ஒரு கட்டுப்பாட்டிற்குட்பட்ட நிறுவனங்களிலோ குவிக்கப்பட்டு அந்த மைய ஒழுங்கினடிப்படையில் செலுத்தப் பெறுகிறதோ அந்த அமைப்பே ஒற்றையாட்சியரசு” என ஜே.டபிள்யு. கார்னர் கூறியுள்ளார். பிரிட்டன், பிரான்ஸ், பெல்ஜியம், ஹாலந்து, ஜப்பான், இத்தாலி ஆகியவை ஒற்றையாட்சி நாடுகளாகும். அந்நாட்டுத் தலக்குழுக்கள் மைய அரசு தங்கட்கு ஒப்படைக்கப்பட்டுள்ள அதிகாரங்களை எக்கணத்திலும் மைய அரசு மாற்றவோ பறித்துவிடவோ முடியும். தல அரசுகள் நல்ல வலிமையோடு அதிகாரங்களைப் பெற்றிருந்தாலும் மைய அரசு யாதொரு தடையுமின்றி அவைகளின் முடிவுகளைப் புறக்கணிக்கலாம்.

### 1.4.3. ஒற்றையாட்சியின் இன்றியமையாத கூறுகள்

சி.எப்.ஸ்டிராங் ஒற்றையாட்சியின் இன்றியமையாத கூறுகளாக இரண்டு அடிப்படைகளைக் கூறுகிறார். அவையாவன: (1) மையப் பாராளுமன்றத்தின் மேலாண்மை (2) இறைமையைச் செலுத்துகின்ற துணைக்குழுக்கள் இல்லாமை.

மையப் பாராளுமன்றத்தின் மேலாண்மை ஒற்றையாட்சி முறையின் சிறப்புக்கூறு ஆகும். சட்டமியற்றும் அதிகாரங்களை மைய மாநிலச் சட்ட மன்றங்கள் பகிர்ந்து கொள்வதோடு தத்தம் வரையறைகளில் முழு உரிமை செலுத்தி, தனித்தனியே முழு உரிமை இல்லாது நிற்கும் முறை இல்லாது, இறைமையைச் செலுத்தும் கீழ்ப்பட்ட குழுக்கள் இல்லாததுதான் மையச் சட்ட மன்றத்தின் தலையாய நிலை. நடைமுறை

வசதிகட்காக மையச் சட்டமன்றம் தலக்குழுக்களிடம் சில அதிகாரங்களை ஒப்படைக்கலாம்.

இறைமையைச் செலுத்தும் துணைக்குழுக்கள் இல்லாமை என்ற ஒற்றையாட்சியின் இரண்டாவது கூற்றின் பொருள் கீழ்ப்பட்ட சட்டமியற்றும் குழுக்கள் அறவே இல்லை என்பதல்ல. மாறாக இந்தக் கீழ்ப்பட்ட சட்டமியற்றும் குழுக்கள் மைய அதிகாரத்திற்கு எதிரிடையாக செயல்பாட்டால் அவை இறைமை பெற்று இயங்குவதல்ல என்பது தான் பொருள். ஒற்றையாட்சிமுறையில் கீழ்ப்பட்ட இறைமை செலுத்தும் குழுக்கள் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் மைய ஆட்சி நினைத்தால் அவைகளைக் கலைத்துவிடலாம்.

பல அரசியல் பிரிவுகளும், உட்பிரிவுகளும் மைய அரசின் முக்கிய பகுதிகள் என்பது ஒற்றையாட்சி அரசின் ஒரு கூறாகும். அரசியலமைப்பின் வரையறையில் மைய அரசுக்கும் பகுதி ஆட்சிக்குழுக்கட்குமிடையே அதிகாரப் பங்கீடு கிடையாது. "தல அரகசள் தாங்கள் கொண்டுள்ள அதிகாரங்களனைத்தையும் தன்னுரிமையையும் கூட, ஏன் அவைகளின் நிலைப்புத் தன்மையையே மைய ஆட்சியினின்று தாம் பெறுகின்றன".

மைய ஆட்சி பிரிவுகளையும், உட்பிரிவுகளையும் தோற்றுவிப்பதோடு நினைத்தால் அவற்றை நீக்கிவிடவும் முடியும். தல அரசுகள் தாங்கள் செலுத்த வேண்டிய அதிகாரத்தை மைய ஆட்சியினின்றும் பெறுவதால், மைய ஆட்சியின் கட்டளைகட்கு கீழ்ப்படிதல் வேண்டும். ஒற்றையாட்சியின் கீழ் இயற்கும் தலக்குழுக்கள் தங்களதிகாரத்தை மைய ஆட்சியிலிருந்து தானமாகப் பெறுவதேயன்றி உரிமையுடன் பெறுவதன்று. சிறு பகுதிகள் கீழ்ப்பட்ட நிலையைப் பெற்றுள்ளனவேயொழிய மைய ஆட்சியோடு சமதகுதி பெற்றவையல்ல.

### 1.4.4. ஒற்றையாட்சி நாட்டின் சிறப்புக்கள்

**1. உறுதித்தன்மையையும் சீரான நிலையினையும் அளித்தல்.**

பிரிட்டன், இத்தாலி, பெல்ஜியம் போன்ற சிறு நாடுகளுக்கு ஒற்றையாட்சி முறை மிகவும் பொருந்தியதாகும். அரசின் அதிகாரங்கள் அனைத்தும் மையப்படுத்தப் பட்டுள்ளதால் தீர்மானங்களனைத்தும் மையத்திலிருந்து தோன்றுகின்றன. இம்முறைச் சட்டங்கள், கொள்கைகள், ஆட்சிமுறைகள் முதலியவற்றில் உறுதியையும் சீரான நெறியையும் கொடுக்கின்றன. மைய ஆட்சிக்கும் உறுப்புப் பகுதியாட்சிகட்குமிடையே பூசல்கட்கு இடமில்லை.

**2. ஒற்றுமையையும் நாட்டு உறுதித் தன்மையையும் வளர்த்தல்**

ஒற்றையாட்சிமுறை நாட்டில் ஒற்றுமையையும் உறுதித்தன்மையையும் வளர்க்கிறது. கூட்டாட்சி நாடுகளில் சாதாரணமாகக் காணப்படும் பிரிந்து செல்கின்ற சக்திகளும் பிளவு மனப்பான்மைகளும் ஒற்றையாட்சிமுறையில் இரா. ஏனெனில் இருவகை அரசுகளிடமும் (மைய ஆட்சி, மாநில ஆட்சி) பற்றுவைக்க முடியாமல் குடிமக்கள் மாறுகின்ற நிலை இதில் கிடையாது. அயல்நாட்டுக்கொள்கையிலும் நாட்டுப் பாதுகாப்பிலும் ஒற்றையாட்சி முறை கூட்டாட்சி முறையைவிட மேம்பட்டு விளங்கும்.

**3. வளைந்து கொடுத்தல்**

நில அடிப்படையில் அதிகாரமளித்தலும் அவற்றை மாற்றிப் பங்கீடு செய்வதிலும் வளைந்து கொடுக்கும் தன்மை பெற்றுள்ளமை ஒற்றையாட்சியின் முக்கியமான சிறப்பு ஆகும்.

**4. எளிமையும் சிக்கனமானதுமான முறை**

கூட்டாட்சி முறை சிக்கல் நிறைந்து காணும் போது ஒற்றையாட்சி முறை எளிமையானதாக உள்ளது. கூட்டாட்சியமைப்பினை நடத்துவதைவிட இலகுவாக ஒற்றையாட்சியை நடத்தமுடியும். இம்முறை சிக்கனமானதும் கூட. ஏனெனில் இவ்வமைப்பில் இரு அரசியல் நிறுவனங்கள் கிடையாது.

### 1.4.5. ஒற்றையாட்சியின் குறைபாடுகள்

தலப்பகுதியின் தன்னுரிமையை ஒடுக்கி அதிகாரக் குவிப்பு ஏற்படுவதற்கு இடமளிக்கும் தன்மை ஒற்றையாட்சியின் முக்கியமான குறைபாடாகும். கூடுதலான மையப்படுத்துதல் தீமையையளிக்கும். மைய அரசியல் வல்லாட்சியைத் தோற்றுவிக்கும் நிலையை ஏற்படுத்துவதோடு அதிகார வெறிபிடித்த தலைவர்கள் தங்கள் நலனை முன்னேற்றுவிப்பதாகும். ஒற்றையாட்சி அரசைத் தவறாகப் பயன்படுத்தலாம். தல மக்களின் தொடக்க முயற்சியை அடக்கி பொதுவாழ்வில் அவர்களுடைய உணர்வுகளைத் தூண்டிவிடாமல் ஊக்கத்தைக் கெடுத்து, அத அரசுகளின் உயர்நிலையினை பழுதடையச் செய்து, மையஅதிகார வர்க்கத்தின் வளர்ச்சிக்கு வழிவகை செய்வதுதான், ஒற்றயைாட்சியின் ஒரே குறையாகும்" எனப் பேராசியரியர் கார்னர் உரைத்துள்ளார். பிரிட்டனில் தல சுயாட்சி சிறப்போடு தன்னுரிமை பெற்று விளங்குவதால் கார்னரின் கூற்று அந்நாட்டிற்குப் பொருந்தாது. தலப்பகுதிகளின் மீது நம்பிக்கையும் பற்றும் வைத்திருந்தால் தான் எந்த வகையான அரசும் வெற்றியடையும். கணிசமான அளவு தன்னுரிமைகளை தல ஆட்சிகள் பெற்றிருத்தல் வேண்டும். ஒவ்வொரு

பகுதியின் நடப்புக்களையும் பற்றி நன்கு தீர்மானிக்கும் தகுதி அப்பகுதி மக்களுக்கே அதிகமாக உண்டு. அவர்களிடம் அப்பகுதி அலுவல்களைச் செயல்படுத்தும் முழு அதிகாரமும் அளிக்கப்படால் அம்முறை ஒற்றுமைப் பிணைப்பினையும், நாட்டு உறுதித்தன்மையையும் வளர்க்கும். நிலைத்துத் திறமையுடன் ஆட்சி நடைபெறுவதற்கு மைய அரசு தலப்பகுதிகளுக்கு ஒரு சில பொறுப்புரிமைகள் கொடுத்தல் சிறப்பாகும். பெரிய நாடுகட்கு ஒற்றையாட்சி முறை பொருந்தாது.

**கூட்டாட்சி நாடு**

தேசிய ஒற்றுமையையும், அதிகாரத்தையும், மாநில உரிமைகளின் பாதுகாப்பினையும் பொருந்தச் செய்யும் அரசியல் வழிமுறையே கூட்டாட்சியரசாகும்'' என டைசி கூறுகின்றார். ''பல நாடுகள் ஒன்று சேர்ந்து புது நாட்டினையமைக்கும் முறையே கூட்டாட்சியாகும்'' என ஹாமில்டன் விளக்கம் கூறுகிறார். ''ஒற்றையாட்சியிலிருந்து வேறுபடுகின்ற கூட்டாட்சி முறை அரசின் முழு அதிகாரங்களைத் தேசிய அரசியலமைப்பின் வழியில் பிரித்துப் பங்கீடு செய்து கொள்கின்ற முறையாகும். மைய அரசும் கூட்டாட்சியைத் தோற்றுவிக்கின்ற பகுதிகளும் அவ்வாறு பகிர்ந்துகொள்ளும்'' என ஜே.டபிள்யு.கார்னர் குறித்துள்ளார். அஃதாவது நாடுகள், குறுநிலப்பகுதிகள், மாநிலங்கள், குடியரசுகள் என பலவிதமாக உரைக்கப்படும். கூட்டாட்சியின் உறுப்புக்களுக்கும் மைய அரசுக்கும் அதிகாரப் பங்கீடு கூட்டாட்சிஅரசில் காணப்படும்.

## 1.4.6. கூட்டாட்சியமைப்பிற்கு வேண்டிய முன் தேவைகள்

ஒரு கூட்டாட்சி அமைய வேண்டுமானால் கீழ்காணும் சூழ்நிலைகள் காணப்பட வேண்டும்.

**1. ஒன்றிப்பு விழைவு**

கூட்டுச் சேருகின்ற பகுதிகள் ஒற்றுமையோடு விளங்குவதற்கு ஆழ்ந்த விழைவு கொண்டிருக்க வேண்டும். இவ்விழைவு இயற்கையாகத் தோன்றிக் கூட்டுப்பகுதிகள் ஓர் ஒற்றுமை உணர்வோடு வாழ வேண்டும் என்பதை ஊக்குவிப்பதாக இருக்க வேண்டும்.

**2. ஒன்றிப்பு விழைவேயன்றி முழுமையாகக் கலத்தலன்று**

இம்மக்கள் ஒன்றிப்போடு இருக்க வேண்டுமேயொழிய இரண்டறக் கலக்க விழையக் கூடாது. அஃதாவது உறுப்புப் பகுதிகள் தாங்கள் தன்னுரிமையைத் தக்க வைத்துக்கொள்ளவேண்டும். அவர்கள் தத்தம் மொழி, பண்பாடு, வட்டார நலன்கள் ஆகியவற்றைப் பாதுகாக்க முயற்சிக்கவேண்டும். வீயர் இதைப்பற்றித் தெளிவபடுத்துகையில் ஒரு

கூட்டாட்சியின் பகுதிகள் ஒற்றுமையாய் இருக்க விரும்ப வேண்டுமேயன்றி ஒற்றையாட்சி முறையை விரும்புதல் கூடாது எனக் குறிப்பிட்டுள்ளார். ஒற்றுமையையும் வேற்றுமையையும் ஒருங்கே தடைப்படுத்தும் முறையே கூட்டாட்சியாகும். தேசிய அதிகாரங்களுக்கும் மாநில உரிமைகளுக்கும் சமரசம் காணும் முயற்சியே கூட்டாட்சி முறையாகும்.

### 3. கருத்தொருமை

கூட்டாட்சியைத் தோற்றுவிக்க முற்படும் பல்வேறு பிரிவினர்கள் கருத்தொருமை பெற்றிருக்க வேண்டும். இனத்திலோ, மொழியிலோ, சமயத்திலோ, அரசியல் நிறுவனங்களிலோ வேறுபாடுகள் இருப்பினும் ஒன்றாக வாழ வேண்டும் என்ற உணர்வினை வலுப்படுத்துமளவில் சில பொதுமக்காரணிகள் இருந்தால் கூட்டாட்சி முறையை நல்ல வகையில் இயக்கமுடியும். அண்மை நாடுகள் வலியத்தாக்குமெண்ணத்துடன் அச்சுறுத்திக் கொண்டிருந்தால் மக்கள் தங்கள் சிறு பூசல்களைக் களைந்து ஒற்றுமை உணர்வோடு வெளிப்படுவர். பாகிஸ்தானின் படையெடுப்பினாலும், சீன நாட்டின் இடைவிடா அச்சுறுத்தலாலும் இந்தியா ஒற்றுமையுள்ள நாடாக வெளிப்பட்டுள்ளது.

### 4. திறமையான தலைமை

கூட்டாட்சியை வழி நடத்தச் சிறந்த, திறமையுள்ள தலைவர்கள் இல்லாவிடின் கூட்டாட்சி கேலிக் கூத்தாக முடிந்துவிடும். திறமையற்ற தலைவர்கள் நாட்டின் பொறுப்பையேற்றல் கூட்டாட்சி முறையே திரிந்துவிடும். வாஷிங்டன், பென்ஜமின், பிராங்க்ளின், ஹாமில்டன், மாடிசன், ஜேம்ஸ்வில்சன் போன்ற அரும்பெருந்தலைவர்களைப் பெற்றிருந்தது அமெரிக்க ஐக்கிய நாடுகளின் நற்பேறேயாகும். அதே நேரத்தில் திறமையான தலைமையிருந்தால் மட்டும் போதாது, கூட்டாட்சி மக்களிடையே ஒற்றுமையுணர்விற்காக தியாகம் செய்யும் மனப்பான்மையும் இருக்க வேண்டும். படியாத மக்களுக்குக் கூட்டாட்சி முறை பொருந்தாது.

### 5. தேர்தல் அரசியல் அறிவு

கூட்டாட்சியைத் தோற்றுவிக்க வேண்டுமெனக் கருத்துடையவர்கள் தேர்ந்த அரசியலறிவு பெற்றிருக்க வேண்டும். மக்களாட்சிக் கோட்பாடுகளில் முழுமையாக நம்பிக்கை கொண்டிருக்க வேண்டும். கூட்டாட்சியின் கூறுகளாக விளங்குகின்ற பகுதிகளில் ஒரே மாதிரியான அரசியல் நிறுவனங்கள் இருப்பதோடு பகுதிவாழ் மக்களிடையே தன்முனைப்பாட்சித் தன்மையோ வல்லாட்சியுணர்வோ இருத்தல் கூடாது. ஏதேனும் ஒரு பகுதியில் வல்லாட்சி தோன்றினாலும் மற்றைய பகுதிகளின் மக்களாட்சி முறைக்கு அழிவு ஏற்பட்டு கூட்டாட்சி தோற்றுவிக்கப்பட்ட

நோக்கமே தோல்வியடைந்துவிடும். "கூட்டாட்சிக் கருத்தும் வல்லாட்சி முறையும் ஒன்றோடொன்று இணைந்து நடக்காத முறைகளாகும்". நீதிமன்றங்களின் மேலாண்மையை ஏற்று சட்டங்களை மதித்து நடக்கும் தன்மையை மக்கள் பெற்றிருக்வேண்டும்.

6. நிலவமைப்பில் அடுத்திருத்தல்

கூட்டாட்சி முறையில் இருக்க விழையும் பகுதிகள் பல்வேறு இடங்களில் சிதறியிராமல் இருத்தல் கூட்டாட்சியமைப்பின் மற்றொரு முன் தேவையாகும். கூட்டாட்சி பகுதிகள் அடுத்தடுத்துத் தொடாச்சியாக அமைந்திருக்க வேண்டும். "அதிக இடைவெளி மாநிலப் பகுதிகளிலும் மைய ஆட்சியிடமும் கவனமற்ற தன்மையையும் உணர்ச்சியற்ற நிலையையும் இரு(அரசு) பிரிவுகட்கு மிடையிலேற்படுத்திவிடும். மக்கள் தொலைவில் வெவ்வேறு பகுதிகளில் வாழ்ந்து வந்தால் நாட்டு ஒற்றுமையைப் பெற்றுப் பேணுதல் கடினமானதாக அமைந்துவிடும்" பொதுப் பாதுகாப்பு, பொருளாதார அனுகூலங்கள் ஆகிய நன்மைகளை தொலைவில் வெவ்வேறு பகுதிகளில் வாழ்ந்து வரும் மக்கள் பெற முடியாது. தொடர்ந்து நிலப்பகுதிகள் கூடிக் கூட்டாட்சியைத் தோற்றுவித்ததுதான் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கூட்டமைப்பு முறையில் குறிப்பிடத்தக்க வெற்றிக்கு காரணமாகும். ஆனால் தற்பொழுது 49,50—வதுமாநிலங்களாகவுள்ள அலாஸ்காவும், ஹவாய்த் தீவுகளும் வெவ்வேறு பகுதிகளில் உள்ளன. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியல், இராணுவ வலிமையே இம்முக்கியமான முன்தேவை இல்லாதிருத்தலைப் புறக்கணிக்க இயலுகிறது. இந்தியா, கனடா, ஆஸ்திரேலியா, சுவிட்சர்லாந்து போன்ற நாடுகளில் கூட்டாட்சி முறை, வெற்றியைத் தந்துள்ளபோது, பாகிஸ்தானில் அது திருப்திகரமாகச் செயல்படவில்லை: இப்பொழுது பங்களாதேஷ் என்றழைக்கப்படும் கிழக்குப் பாகிஸ்தான் 1971—ல் பாகிஸ்தானிடமிருந்து விடுதலையடைந்தது.

7. பகுதிகளனைத்திற்கும் சமதகுதி அளித்தல்

கூட்டாட்சியின் பகுதிகளனைத்திற்கும் வேறுபாடின்றிச் சமதகுதி அளித்துக் காத்தலைப் பொறுத்து அம்முறையின் வெற்றி அமையும். சமப்பரப்பளவு, மக்கள்தொகை, இயற்கை வளங்கள் ஆகியவை கொண்டபகுதிகள் சேர்வது எளிதன்று. ஆயினும் இயன்ற அளவு ஏற்றத்தாழ்வுகள் தவிர்க்கப்பட்டிருந்தால் நன்று. செயல்களில் முனைப்புச் செலுத்தும். இந்நிலை சிறு பகுதிகளிடையே நம்பிக்கையின்மையையும் பொறாமையையும் தோற்றுவித்துவிடும். 1871—ம் ஆண்டு ஜெர்மானிய இணைவு ஏற்பட்டபோது பிரஷியா கூட்டரசுப் பகுதிகள் அனைத்தின் மீதும் ஆதிக்கம் செலுத்தியது. "1871—ல் தோற்றுவிக்கப்பட்ட

ஜெர்மானியக் கூட்டாட்சி ஓர் அரிமா, ஆறு குள்ளநரிகள், 20 சுண்டெலிகள் இவற்றிற்கிடையே நிலவிய உடன்படிக்கை போன்றதாகும்'' என ஒரு பேராசிரியர் சுவையாகக் கூறியுள்ளார்.

8. போதுமான பொருளாதார வளங்கள்

கூட்டாட்சியில் இணைகின்ற பகுதிகள் போதுமான பொருள் வளங்களைப் பெற்றிருக்க வேண்டும். அரசுத்துறையில் ஏற்படும் இரு படி நிறுவனங்கள் கூட்டாட்சி நடத்துதலை அதிகச் செலவுடையதாகச் செய்யும் பணப்பற்றாக்குறை, பொருட்குறைவு, முதலியவையிருந்தால் கூட்டாட்சி நல்லமுறையில் செயல்படாது.

## 1.4.7. கூட்டாட்சியின் இன்றியமையாத கூறுகள்

1. ஓர் எழுதப்பெற்ற அரசயலமைப்பு

''நாட்டு ஒற்றுமையையும், அதிகாரத்தையும், மாநில உரிமைகளின் பாதுகாப்பினையும் பொருந்தச் செய்யும் அரசியல் வழிமுறையே கூட்டாட்சியரசாகும்''. ஒற்றுமைக்கும் வேற்றுமைக்கும் சமரசம் காண்பதோடு மட்டுமின்றி நாட்டு அதிகாரத்திற்கும் தலசுயாட்சிக்கும் இடையேயும் சமரசம் காணமுயலும் நெறி அதுவாகும். மைய ஆட்சிக்கும் மாநில ஆட்சிக்குமிடையே அதிகாரப்பங்கீடு இருக்வேண்டிய நிலையினை முன்கூட்டியே கருதித்தான் கூட்டாட்சியைத் தோற்றுவிக்க முடியும். மாநிலங்களுக்கு மைய அரசின் வரையறை மீறுதலினின்றும் தகுந்த காப்பு கொடுக்கப்பட்டிருக்க வேண்டும். வழக்காறுகளின் அடிப்படையிலோ மரபுகளின் வழியிலோ அதிகாரப் பங்கடுட அமையப் பெற்றிருக்கும் நிலை தவிர்க்கப்படவேண்டும். மைய, மாநில அரசுகளின் நிலை அதிகாரங்கள் முதலியவை தெளிவாக எழுதப் பெற்றிருக்க வேண்டும்.

2. ஒரு சுதந்திரமான நீதிமன்றம்

நுண்ணிய கவனத்துடன் கூட்டாட்சி அரசியலமைப்பை இயற்றுவோர் பொருத்தமமாக அமைந்தாலுங்கூட சிற்சில நேரங்களில் மைய அரசுக்கும் மாநில அரசுகளுக்குமிடையே பூசல்கள் எழலாம். நடுநிலையில் நின்று அதைத் தீர்த்து வைப்பதற்காக யாரேனும் ஒருவரோ அல்லது ஒரு குழுவோ அமைந்திருக்கவேண்டும். பொதுவாக அரசியலமைப்புக்கு விளக்கம் கொடுத்து மாநிலங்கட்கும் மைய ஆட்சிக்கும் இடையே தோன்றுகின்ற பூசல்களைத் தீர்த்து வைக்கும் அதிகாரம் தலைமை நீதிமன்றத்திற்குக் கொடுக்கப்படும். அரசியலமைப்பிற்கு பாதுகாவலாய் அது இயங்கும். எனவே கூட்டாட்சி முறைக்கு சுதந்திரமான நீதிமன்ற இன்றியமையாததொன்றாகும்.

3. நெகிழாத அரசியலமைப்பு

மைய, மாநில அரசுகட்கிடையே பூசலெழாமல் சமரச நிலைக்காகக் கூட்டாட்சி தோற்றுவிக்கப்படுவதால் ஒருவர் உணர்வை மற்றொருவர் மதித்து நடந்தால் தான் அம்முறை வெற்றியளிக்கும். நெறிகளினின்றும் தப்பியோடும் வழிவகைகளின்றி அரசியலமைப்பு நெகிழாத தன்மையோடு அமைக்கப்பெறும். சாதாரணச் சட்டங்களைவிட அரசியலமைப்புச் சட்டங்களுக்குத் தலைமமையிடமுள்ள சிறப்பினை இம்முறை ஒப்புக்கொள்ளும். இதையே வேறுவிதமாகப் பகரின், அரசியலமைப்பு இறைமை பெற்றதாக விளங்கும். சாதாரணச்சட்டங்களை இயற்றுவது போலல்லாமல் அரசியலமைப்பு திருத்தப்படும் போதெல்லாம் மைய அரசு, மாநில அரசுகளைத்தன் நம்பிக்கைக்குட்படுத்தி அவற்றிற்குப் பொருந்திய நியாயத்தோடு போதுமான அளவு பங்கினையும் கொடுக்கவேண்டும்.

4. ஓர் இரண்டாவது மன்றம்

ஒரு கூட்டாட்சியில் இரண்டாவது மன்றம் இருக்கவேண்டுமென்ற கட்டாயமில்லையெனினும், அவ்வமைப்பு மிகப் பயனுடையதாய் இருக்கும். கூட்டாட்சி முறையில் தங்களுடைய கருத்துக்களை வெளியிடவும் நலன்களைப் பாதுகாத்துக் கொள்ளவும் மாநிலங்களுக்கு இரண்டாவது மன்றத்தில் சம சார்புத் தன்மையளிக்கப்பட்டிருக்க வேண்டும்.

## 1.4.8. கூட்டாட்சியின் சிறப்புத் தன்மைகள்

1. ஒற்றுமைக்கும் வேற்றுமைக்குமிடையே சமநிலை

தலப்பகுதிகள் சுதந்திரத்திற்கும் தேசிய ஒற்றுமைக்கும் இடையேயும், ஒற்றுமை வேற்றுமை இவைகட்கு இடையேயும் மகிழ்ச்சிகரமான சமநிலையை கூட்டாட்சி முறை தோற்றுவிக்கிறது. பிளவு மனப்பான்மைக்கும் அதிகாரக் குவிப்பிற்கும் இடையே சமநிலையுறுதிப்பாட்டை இம்முறை காக்கிறது. பல மொழிகள், நம்பிக்கைகள் பண்பாடுகள் முதலியவற்றைக் கொண்டிருக்கும் பிரிவைச் சார்ந்த மக்களும் தனியரசு அமைத்துக் கொண்டு வாழ்வது இயலுமாயினும் மிக இடுக்கண்கள் நிறைந்ததாகும். பெருத்த திமிங்கலங்கள் சிறு திமிங்கலங்களை விழுங்கியிருப்பதற்குச் சான்றுகள் பல உண்டு. தங்களுடைய தனித்தன்மையைப் பாதுகாத்துக் கொள்வதற்கும், அதே வேளையில் வெளிநாட்டு அச்சுறுத்தல்களிலிருந்து காத்துக் கொள்வதற்கும், ஒரே வழி மற்ற பகுதிகளோடு இணைந்து நின்று ஒற்றுமையின் நன்மைகளையும் பகுதிகளின் நன்மைகளையும் பெறுவதுதான்.

2. மக்களாட்சி நெறியில் அதிகார உரிமையைப் பன்முகப்படுத்துதல்

சிறு நாடுகள் ஒருங்கிணைந்து ஒற்றுமையோடும் தன்னுரிமையை இழக்காமலும், தனித்தன்மையைப் பேணியும் வாழ்வதற்குக் கூட்டாட்சி முறை போதுமான செயலெல்லை கொடுக்கிறது. மக்களாட்சி முறையில் அதிகாரக் குவிப்பு ஏற்படாமல் பன்முகப்படுத்தும் வாய்ப்பினை இம்முறை தருகிறது. அது நாட்டின் ஒற்றுமைக்கும் அடிகோலும். பொறுப்பினைச் சிறு பகுதிகட்குக் கொடுக்க மறுத்தால் அவை பொறுப்பற்ற தன்மையுடையதாகிவிடும். பொறுப்புத் தன்மையோடு அவைகளை நடந்து கொள்ள வைக்க, பொறுப்பை ஒப்படைத்தல் சிறந்த முறையாகும். மக்களாட்சிக் கருத்துக்கள் வளர்ச்சி பெறவும் குடிமையியலில் போதிய பயிற்சி பெறவும் இம்முறை வாய்ப்பளிக்கிறது.

3. வல்லாட்சி மனப்போக்குகளைத் தடை செய்யும் வழிவகை

வல்லாட்சிப் போக்குளைத் தடுத்து நிறுத்துவதற்கு கூட்டாட்சி முறை சிறந்த வழியாகும். ஏனெனில் கூட்டாட்சி அடிப்படையில் அதிகாரம் பன்முகப்படுத்தப் பட்டிருக்கும். இதை வேறுவிதமாகக் கூறின், கூட்டாட்சி நாடுகளில் உரிமைகள் நன்கு மதித்துக் காப்பாற்றப்படும்.

4. ஊறுகள் குறைதல்

ஒற்றையாட்சியைப் போலன்றி, படையெடுப்புக் காலங்களில் கூட்டாட்சிக்கு ஊறுகள் குறைவதாகும். ஒற்றையாட்சியில் மைய அரசு, நாட்டின் நரம்புகட்கு உயிர்நாடிபோல் விளங்குகிறது. வெளிநாட்டுப் படையெடுப்புக்கள் அவ்வுயிர் நாடியைப் பல முறைகள் இடைவிடாமல் தாக்கினால் நாடு முழுவதும் துண்டு துண்டாகச் சிதறிப் போய்விடும். கூட்டாட்சியில் உயிர்நாடி ஓரிடத்திலில்லாமல் பல இடங்களில் பரவி நிற்பதால் அவ்வளவு எளிதில் அதனமைப்பைச் சீர்குலைக்க முடியாது.

## 1.4.9. கூட்டாட்சி முறையின் குறைபாடுகள்

1. எளிமையற்ற தன்மை

சிக்கலுள்ள அரசு நிறுவனங்கள் அமைக்கப்படுமாதலால் எளிமையான முறையே தெரியாமல் கூட்டாட்சி விளங்கும்.

2. அதிகச் செலவு கொடுக்கும் தன்மை

ஒற்றையாட்சியைவிடக் கூட்டாட்சியில் இரண்டு பங்கு நிறுவனங்கள் அமைக்கப்பெறுமாதலால் அதிகச் செலவு ஏற்படும்.

### 3. அடிக்கடி தோன்றும் பூசல்கள்

கருத்து வேறுபாடுகளும் பூசல்களும் கூட்டாட்சி அரசுகளில் தோன்றிடலாம். இடையறாத சச்சரவுகளும் பூசல்களும் மைய அரசுக்கும் மாநிலங்களுக்குமிடையே காலப்போக்கில் பெரிதளவு வளர்ந்து போகலாம். அத்தருணத்தில் அயலார் படையெடுப்பு மக்களுக்கும் பெரும் சுமையாக அமைந்துவிடும்.

### 4. விசுவாசம் பிரிந்திருந்தல்

ஒரு கூட்டாட்சியில் மைய அரசிடமும் மாநில அரசிடமும் விசுவாசம் பகிர்ந்தளிக்கப்பட்டிருக்கும். ஒற்றையாட்சியில் ஒற்றைக் குடிமை முறை இருப்பதால் விசுவாசமும் கீழ்ப்படிகின்ற தன்மையும் வளர்வதற்கான வழிவகைகள் உண்டு. இருவேறு அரசுகளிடம் விசுவாசம் கொள்ளுதல் பிளவு மனப்பான்மைக்கும் முடிவில்லாத வழக்குகளுக்கும் இடம் கொடுத்துவிடும். இவ்விசுவாசப் பிரிவு தான் சிங்கப்பூர், மலேஷியக் கூட்டமைப்பிலிருந்து வெளியேறுவதற்கு வழிவகுத்தது.

### 5. நல்ல அயல்நாட்டுக் கொள்கைக்கு இடமின்மை

கூட்டாட்சியின் குறைபாடு அயல்நாட்டுறவுத் துறையில் நன்கு வெளிப்படுகிற ஒரு குறிப்பிட்ட நாட்டினரிடம் மைய அரச நட்புறவு கொள்ளுதல் கூட்டாட்சிப் பகுதிகள் சிலவற்றிற்குப் பிடிக்காமல் போகலாம். இதன் விளைவாக மைய, மாநில அரசுகட்கிடையே இணக்க முறிவு ஏற்படலாம். அதோடு மட்டும் நில்லாமல் கூட்டாட்சி முழுவதுமே குறிப்பிட்ட அயல்நாட்டின் மனத்தாங்கலுக்கு ஆளாக நேரிடலாம்.

### 6. அரசியலமைப்புத் திருத்தமுறை முன்னேற்றத்திற்குத் தடை

கூட்டாட்சிகளில் அரசியலமைப்புத் திருத்தமுறை கடினமாக அமைக்கப் பெற்றிருப்பது நாட்டு முன்னேற்றத்திற்குத் தடையாக அமையும். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் ஓரரசியலமைப்புத் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு நான்கில் மூன்று பங்கு மாநிலங்களின் இசைவு உறுதியாக வேண்டும். அ.ஐ. நாடுகளிலுள்ள 50—ல் 13 மாநிலங்கள் ஒன்று சேர்ந்து கொண்டால் அரசியலமைப்புத் திருத்தத்திற்கு முட்டுக்கட்டை போடமுடியும். இரு அரசு முறையின் செலவுகளும் காலம் தாழ்த்தும் இயல்பும் உள்ளத்தை மேலும் வருத்தும்.

7. சட்டங்களில் வேறுபாடு

பல மாநிலங்களில் பல மாறுபட்ட சட்டதிட்டங்கள் அமைந்திருப்பது தேதியக் கோட்பாடுகளைப் புறக்கணிக்கும் செயலாகும். அது பலவிதமான தொந்தரவுகளுக்கும் அநீதிகளுக்கும் இடமளிக்கும்.

## 1.5. பாராளுமன்ற முறையிலான அரசும் மற்றும் குடியரசுத் தலைவர் முறையிலான அரசும்

நிர்வாகத்துறை அல்லது ஆட்சித்துறை யாருக்குப் பொறுப்பாக இருக்கிறது என்ற அடிப்படையில் அரசியலமைப்பு பகுக்கப்படுகிறது. ஆட்சித்துறை என்பது நாட்டின் தலைமை நிர்வாகத்தை ஏற்று நடத்தும் அமைப்பாகும். எடுத்துக்காட்டாக இந்தியாவில் அமைச்சரவை தான் தலைமை நிர்வாகத்தை ஏற்று நடத்தும் அமைப்பு ஆகும். இந்த ஆட்சித்துறை பாராளுமன்றத்திற்கு பொறுப்பாக இருந்தால் பாராளுமன்ற முறையிலான அரசு எனப்படும். குடியரசுத் தலைவருக்கு நேரடிப் பொறுப்பாக இருக்குமானால் அது குடியரசுத் தலைவர் முறையிலான அரசு எனப்படும். பேராசிரியர் பேஜ்ஹாட் கருத்துப்படி, “சட்டமன்றங்களின் அதிகாரங்களும் நிர்வாகத்துறையின் அதிகாரங்களும் தனித்தனியே சுதந்திரமாக இயங்குவது குடியரசுத் தலைவர் முறை அரசு ஆகும்”. ஆனால், அவைகளின் இணைப்பும் தொகுப்பும் அமைச்சரவை கோட்பாடாகும். பாராளுமன்ற முறையிலான அரசுக்கு இந்தியா, இங்கிலாந்து ஆசிய நாடுகள் எடுத்துக்காட்டாக இருக்கும் போது குடியரசுத்தலைவர் முறையிலான அரசுக்கு அமெரிக்கா சிறந்த எடுத்துக்காட்டாய்த் திகழ்கிறது.

### பாராளுமன்ற முறையிலான அரசு

பாராளுமன்ற முறையிலான அரசில் அமைச்சரவைதான் உயர் ஆட்சித்துறையாகச் செயல்படுகிறது. இந்த அமைச்சரவை பாராளுமன்றத்திற்குப் பொறுப்பாக இருக்கிறது. பாராளுமன்றத்தின் நம்பிக்கையைப் பெற்றிருக்கும் வரைதான் அமைச்சரவை பதவியில் நீடிக்கும். பாராளுமன்றத்திலும், மக்களால் நேர்முகமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கீழ்சபைக்குத் தான் பொறுப்புள்ளதாக இருக்கும். கீழ்சபையின் பெரும்பான்மை உறுப்பினர்களின் நம்பிக்கையை இழந்துவிட்டால் அமைச்சரவை நிர்வாகப் பொறுப்பிலிருந்து விலகிவிடும். பொதுவாக கீழ் சபையில் பெரும்பான்மை பெற்றுள்ள கட்சிதான் அமைச்சரவை அமைக்கும் எந்தக் கட்சிக்கும் பெரும்பான்மை இல்லை எனில் பல கட்சிகள் ஒன்று சேர்ந்து கூட்டு அமைச்சரவை அமைக்கும்.

பொதுவாக பாராளுமன்ற முறையிலான அரசில் இரு தலைமைகள் இருக்கும். ஒன்று பெயரளவிற்கான தலைமை; மற்றொன்று உண்மைத் தலைமை. குடியரசுத் தலைவர் பெயரளவிற்கான தலைவர் ஆவார். உண்மையான தலைமைப் பொறுப்பு அமைச்சரவையிடம் இருக்கும். அமைச்சரவையின் ஆலோசனையின் பெயரில் குடியரசுத் தலைவர் நிர்வாகத்தை நடத்துவார். அமைச்சரவை தலைமை அமைச்சரின் கீழ் இயங்கும். இவர் பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக் கட்சியின் தலைவராக இருப்பார். பிற அமைச்சர்களைத் தெரிந்தெடுப்பவரும் இவர் தான். கொள்கையை வகுப்பதிலும் அரசாங்கத்தை நடத்துவதிலும் முக்கியப் பங்கு வகிக்கிறார். அமைச்சரவையின் தலைவராக மட்டுமின்றி பாராளுமன்றத்தின் தலைவராகவும் இருந்து அரசுக்கொள்கைகளுக்கும் நடவடிக்கைகளுக்கும் பாராளுமன்றத்தின் ஒப்புதலைப் பெறுகின்றனர். குடியரசுத் தலைவருக்கும் பாராளுமன்றத்திற்கும் இணைப்புச் சங்கிலியாகப் பணியாற்றுகிறார். அமைச்சர்கள் அனைவரும் பாராளுமன்றத்தின் ஏதாவது ஒரு சபையின் உறுப்பினராக இருத்தல் வேண்டும். அவ்வாறு இல்லாதவர் அப்படி அமைச்சராக நியமிக்கப்பட்டால் ஆறு மாத காலத்திற்குள் ஏதாவது ஒரு சபையின் உறுப்பினராக வேண்டும்.

அமைச்சர்கள் பாராளுமன்ற உறுப்பினர்களாக இருப்பதால் மசோதாக்களை சட்டமன்றத்தில் முன் மொழிந்து அவற்றிற்கு விளக்கமளித்து அவை நிறைவேற்றப்படுவதற்கும் வேண்டிய ஏற்பாடுகளை எளிதாகச் செய்யமுடியும். அவ்வாறு நிறைவேற்றப்பட்ட மசோதாக்கள் குடியரசுத் தலைவரின் கையொப்பம் பெற்று சட்டமாகின்றன. இச்சட்டங்களை செயல்படுத்தும் பொறுப்பும் அமைச்சரவையினுடையதே. சட்டத்தை இயற்றுதல், செயல்படுத்துதல் ஆகிய இரு முக்கிய பொறுப்புக்களையும் அமைச்சரவை நிறைவேற்றும்.

**நிறைகள்:**

(1) **இணக்கமான நிர்வாகம்:** பாராளுமன்ற முறையிலான அரசுகளின் சட்டத்தை முன்மொழிந்து இயற்றும் அமைச்சரவையே நிர்வாகம் நடத்துவதால் சட்டமியற்றல், நிர்வாகம் நடத்துதல் ஆகிய இரு துறைகளிடையே ஓர் இணக்கம் ஏற்பட்டு நாட்டு நிர்வாகம் சுமூகமாக நடைபெற ஏதுவாகிறது. மேலும் சட்டம் இயற்றுபவர்களே அதனைச் செயல்படுத்துவதால் சட்டம் எந்த உணர்வோடு இயற்றப்பட்டதோ அதே உணர்வோடு செயல்படுத்தப்படவும் வாய்ப்பு ஏற்படுகிறது. சுருங்கக்கூறின் சட்டமன்றத்திற்கும் நிர்வாகத்திற்குமிடையே முரண்பாடுகளோ பிணக்குகளோ நிகழ்வதில்லை.

(2) **மக்கள் இறைமை மதிக்கப்படுகிறது:** பாராளுமன்ற உறுப்பினர்கள் நேரடியாக தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் ஆவர்.

இப்பிரதிநிதிகள் மன்றத்திலிருந்து தான் அமைச்சரவை அமைக்கப்படுகிறது. எனவே பொதுமக்கள் கருத்திற்கேற்ப சட்டம் இயற்றப்படுகிறது. இயற்றப்பட்ட சட்டம் செயல்படுத்தப்படுகிறது.

(3) நெகழ்வுடைமை: பாராளுமுன்ற நிர்வாக முறை நெகிழ்வுடையது ஆகும். அவசரகாலத்திற்கும் நெருக்கடி நிலைகளுக்கும் ஏற்ப வளைந்து கொடுக்கும் தன்மைகொண்டது.

(4) எதிர்கட்சிகளுக்கு உரிய இடம்: பாராளுமன்றத்தில் எதிர்கட்சிகளும் இடம் பெறுவதால் அரசு சட்டங்களிலும் நிர்வாகத்திலும் உள்ள குறைபாடுகளை எடுத்துக்கூறும் வாய்ப்பு ஏற்படுகிறது. அதன்மூலம் அமைச்சரவை தன் குறைபாடுகளை திருத்தி செம்மைப்படுத்தும் வாய்ப்பு கிடைக்கிறது. தலைமை அமைச்சர் எதிர்கட்சித் தலைவரை நன்கு அறிந்திருக்க வேண்டும். அப்போதுதான் அரசு நெறிபிறழாது இயங்கும்.

குறைகள்:

(1) அதிகாரப் பிரிவினை கோட்பாடு புறக்கணிப்பு:
பாராளுமன்ற முறையிலான அரசில் அதிகாரப்பிரிவினைக் கோட்பாடு புறக்கணிக்கப்படுகிறது. சட்டமியற்றலும் நிர்வாகம் நடத்துதலும் அமைச்சர் குழு என்ற ஒரே மையத்தினால் செயல்படுததப்படுவதால் பல குறைபாடுகள் தோன்றலாம்.

தனிமனித உரிமை பறிக்கப்படலாம்.
சர்வாதிகார ஆட்சி தோன்றலாம்.
அதிகார குவிப்பு ஏற்படுவதால் காலதாமதமும் குழப்பங்களும் ஏற்படலாம்.

(2) கட்சி அரசு: அமைச்சரவை கட்சி அடிப்படையில் அமைக்கப்படுவதால் நாட்டின் அரசு தேசிய அரசாக அமையாமல் கட்சி அரசாக மாறி விடுகிறது. எதிர்க்கட்சியினரிடமும் ஆற்றல்மிகு நிர்வாகிகள் இருக்கலாம்: அதனை இம்முறையில் பயன்படுத்த முடியாது போய் விடுகிறது.

(3) நிலையில்லா அரசு: பாராளுமன்றப் பெரும்பான்மை என்ற நூலிழையில் தான் அமைச்சரவை தொங்குகிறது. பெரும்பான்மையில்லாது போய்விட்டால் அமைச்சரவை கவிழ்ந்துவிடும். எனவே நாட்டில் ஸ்திரமான அரசு ஏற்பட வழியல்லாது போகிறது. அடிக்கடி அமைச்சரவை கவிழ்ந்தால் அரசியலில் நிலையற்ற தன்மை ஏற்படுகிறது. இது நாட்டின் முன்னேற்றத்திற்கு உகந்ததன்று.

(4) நிர்வாகத்தலைமையின் பரிதாப நிலை: நாட்டின் நிர்வாகத் தலைவரான குடியரசுத் தலைவர் பிரதம அமைச்சரின் கைப்பொம்மையாக இருக்கும் பரிதாப நிலைக்குத் தள்ளப்படுகிறார். சுயமாக சிந்தித்து தன்னிச்சையான முடிவு எடுக்க முடியாது. விருப்பமிருந்தாலும் இல்லாவிட்டாலும் அமைச்சரவையின் முடிவினை ஏற்க வேண்டியவராகிறார்.

(5) விரைந்து செயல்படாத்தன்மை: பாராளுமன்ற முறையிலான அரசில் பிரதமர் தன்னிச்சையாக கொள்கைகள் வகுக்க முடியாது. பிற அமைச்சர்களை கலந்தாலோசித்துதான் முடிவெடுக்க வேண்டும். அதற்கு அமைச்சரவை கூட்டத்தைக் கூட்டி ஒப்புதல் பெற வேண்டும். பல கட்சிகளைக் கொண்ட கூட்டு அமைச்சரவை நிலவும் நாடுகளில் ஒரு கொள்கையை வகுப்பதிலும் பிற அமைச்சர்களின் இசைவைப் பெறுவதிலும், அதிக காலதாமதம் ஏற்படுகிறது. அதனால் விரைந்து செயல்பட முடியாமல் போகிறது.

(6) பாராளுமன்றத்தின் செல்வாக்கு: பாராளுமன்ற முறையிலான அரசில் பாராளுமன்றம் இறைமை பெற்றுத் திகழ்கிறது. அது நிர்வாகத்தைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் கொண்டதாகத் திகழ்கிறது.

### 1.5.1. குடியரசுத் தலைவர் முறையிலான அரசு

நாட்டின் குடியரசுத்தலைவர் உண்மையான ஆட்சித்துறை தலைவராக திகழ்ந்தால் அது குடியரசுத் தலைவர் முறையிலான ஆட்சி முறை ஆகும். இம்முறையில் பாராளுமன்றம் இருக்கும். அப்பாராளுமன்றம் சட்டம் இயற்றுவதோடு நின்றுவிடும்: நிர்வாகத்துறையும் (அமைச்சரவை) இருக்கும்: அதனை சட்டமன்றம் கட்டுப்படுத்தாது: அமைச்சரவை குடியரசுத் தலைவரால் நியமிக்கப்பட்டு அவருக்குப் பொறுப்பாகவே இயங்கும். சட்டமன்றத்திற்கு அல்ல. இம்முறையில் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு அப்படியே செயல்படுத்தப்படுகிறது. சட்டமியற்றலும். நிர்வாகம் நடத்துதலும் தனித்தனியே செயல்படுகின்றன. இம்முறையின் இயல்புகள்:

1) அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டின்படி இயங்குகிறது.
2) குடியரசுத் தலைவரே நாட்டின் உண்மையான ஆட்சித்துறைத்தலைவர்
3) சட்டமியற்றிலில் குடியரசுத் தலைவர் நேரடியாக பங்கேற்க முடியாது.
4) அமைச்சரவை குடியரசுத் தலைவர் கட்டுப்பாட்டில் இயங்கும். அவருக்கே பொறுப்பானது.

5) அமைச்சர்கள் சட்டமன்ற உறுப்பினர்களாக இருக்கக்கூடாது. சட்டமன்றத்திற்கு பொறுப்பாளர்கள் அல்ல.

6) சட்டமன்றங்கள் அமைச்சர்கள் மீது நம்பிக்கை இல்லாத தீர்மானம் இயற்ற முடியாது.

7) சட்டத்துறைக்கும், நிர்வாகத் தலைமைக்கும் தனித்தனி தேர்தல்.

8) சட்ட மன்றங்களை குடியரசுத் தலைவர் கலைக்க முடியாது.

**நிறைகள்:**

**(1) நாட்டின் தலைவரே நிர்வாகத் தலைவர்:** குடியரசுத் தலைவர் நாட்டின் உண்மை நிர்வாகத் தலைவராகத் திகழ்வதால் அப்பதவி உண்மையான மதிப்பினைப் பெற்று விளங்குகிறது.

**(2) நிலையான ஆட்சி:** குடியரசுத்தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்டபின் தம் பதவி காலம் முழுவதும் தலைவராக நீடிக்கிறார். சான்றாக அமெரிக்காவில் 4 ஆண்டு காலமும் பிரான்சில் ஐந்தாண்டு காலமும் அப்பதவியில் நீடிக்கின்றனர். நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் மூலம் சட்டமன்றம் அவரை பதவி நீக்கம் செய்ய முடியாது. சட்டமன்றப் பெரும்பான்மை அவரை எதுவும் செய்துவிடமுடியாது. எனவே எவ்வித பயமும் இன்றி தமது பதவிக் காலத்தில் நிர்வாக நலன் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு செயல்படமுடியும். அந்தப் பதவிக்காலம் சொந்தக் கட்சியினரின் ஆதரவையோ மாற்றுக்கட்சியினரின் எதிர்ப்பையோ பொறுத்திராததால் நிலையான ஆட்சி ஏற்படும்.

**(3) அதிகாரச் சமன்பாடு:** அரசின் மூன்று அதிகார மையங்களான சட்டமியற்றல், நிர்வாகம் நடத்துதல், நீதி வழங்குதல் ஆகியவை ஒன்றையொன்று விஞ்சிவிடாமல் அதிகாரச் சமன்பாடு நிலைநாட்டப்படுகிறது. இதனால் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு முழுமையாகச் செயல்படுத்தப்படுகிறது.

**(4) திறமை மிக்க அமைச்சரவை:** இம்முறையில் அமைச்சர்கள் பாராளுமன்ற உறுப்பினர்களாக இருக்க வேண்டியதில்லை. பெரும்பான்மைக் கட்சியைச் சார்ந்திருக்க வேண்டிய அவசியமும் இல்லை. எனவே குடியரசுத் தலைவர் அனுபவம் மற்றும் ஆற்றல் மிக்கவர்களை தெளிவு செய்து நியமிக்கலாம்.

**(5) நிர்வாகத்துறை சுதந்திரமாக செயலாற்றுதல்:** இம்முறையின்படி சட்டமியற்றும் பணிகளை சட்டமன்றங்களே கவனிக்கின்றன. இயற்றப்பட்ட சட்டங்களை செயல்படுத்துவதே

> முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகள்
>
> அ) அரசியல் அறிவியல் பொருள்விளக்கத்தை எழுதுக.
>
> ஆ) அரசியல் தத்துவம் என்றால் என்ன?
>
> இ) அரசியல் அறிவியல் படிப்புமுறைகளை விளக்குக.
>
> ஈ) அரசியலமைப்பு பொருள், வகைகளைப் பற்றி விவரிக்க.

நிர்வாகத்துறையின் முக்கியப் பொறுப்பு: எந்த ஒரு சட்ட முன்வரையும் தோல்வியுற்றாலும் அதற்கு நிர்வாகத்துறை பொறுப்பேற்பதில்லை. எனவே நிர்வாகத்துறை சுதந்திரமாக செயல்படமுடிகிறது.

(6) பல இனமொழிகள் உள்ள நாடுகளுக்கு ஏற்றது: இனத்தாலும் மொழியாலும் மரபாலும் சமயத்தாலும் வேறுபட்ட பல்வேறு இனமக்கள் வாழும் நாடடில் கட்சி ஒருமைப்பாடின்றி பல கட்சி முறையால் நிர்வாகத்துறை வலிமையற்றதாகவும் அடிக்கடி மாறக்கூடியதாகவும் இருக்கும். ஆனால் குடியரசுத்தலைவர் முறையிலான நிர்வாகத்துறை உறுதியானது. பல கட்சிமுறை அதனைப் பாதிக்காது.

**குறைகள்:**

(1) அதிகாரப் பிரிவினையின் குறை: சட்டமியற்றும் துறைக்கும் நிர்வாகத் துறைக்குமிடையே அதிகாரப் பிரிவினை கோட்பாடு கையாளப்படுவதால் குடியரசுத்தலைவர் முறை அரசு பாராளுமன்ற முறை அரசைப் போல் இணக்கமாகச் செயல்படாது. சட்டத்துறைக்கும் நிர்வாகத்துக்துறைக்கும் இடையே அடிக்கடி பூசல்களும் முரண்பாடுகளும் தோன்றக்கூடும். அதனால் நாட்டின் நலம் பாதிக்கப்படலாம்.

(2) நிர்வாகத் தலைமை விரும்பும் சட்டங்கள் இயற்றல் கடினம்: நிர்வாகத் துறைக்கு சட்டமியற்றிலில் எந்தவித அதிகாரமும் இல்லாததால் நிர்வாகத் தலைமை விரும்பும் சட்டங்களை இயற்றுவது கடினம். இதனால் மிகவும் இன்றியமையாதது, அவசரமானது என்று நிர்வாகம் கருதும் சட்டங்களை உடனடியாக, இயற்றுவது முடியாது.

(3) வல்லாட்சி அபாயம்: ஒருமுறை தேர்ந்தெடுக்கப்பட்டுவிட்டால் பதவி காலத்தில் தம்மை யாரும் அசைக்க முடியாது என்ற இறுமாப்பான எண்ணம் குடியரசுத் தலைவரிடம் வல்லாட்சி மனோபாவத்தை ஏற்படுத்திவிடலாம்.

## 1.6. தொகுப்புரை

இப்பகுதியில் அரசியல் அறிவியலின் பொருள் மற்றும் தன்மைபற்றி விளக்கப்பட்டுள்ளது. அரசியல் அறிவியல் படிப்புமுறை பற்றியும் அரசியல் அமைப்பு பொருள், தன்மை மற்றும் அதன் வகைபாடுகளும் விவரிக்கப்பட்டுள்ளது. இப்பாடத்தின் மூலம் அரசாங்கங்களின் வகைபாடுகளையும் அதன் சிறப்புத்தன்மைகள் மற்றும குறைகளும் நன்கு விளக்கப்பட்டுள்ளது.

## 1.7. முக்கிய வார்த்தைகள்

| | | |
|---|---|---|
| பரப்பு | — | பாடப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளது பிரிவுகள் |
| பாலிடிக்ஸ் | — | பாலிஸ் என்ற கிரேக்க சொல் — நகர அரசு |
| இலட்சியங்கள் | — | அரசியல் கொள்கைகள் |
| நடக்கையியல் | — | அரசியல் சார்ந்த மனித நடவடிக்கை |

## 1.8. பரிந்துரைக்கப்பட்ட நூல்கள்


1. S.P. Varma, Modern Political Theory, New Delhi, Vikas – 1983.
2. S.Ramasamy, Political Theory, Ideas and concepts, Delhi Macmilian – 2002.
3. H.J. Laski, A.Grammer of Politics, London, Allen and Unwin -1948.


## 1.9. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவு சோதனைக் கேள்விகளுக்கான பதில்கள்

| | |
|---|---|
| கேள்வி எண். 1 | பதில் எண். 1.1. |
| கேள்வி எண். 2 | பதில் எண். 1.1.5. |
| கேள்வி எண். 3 | பதில் எண். 1.2.3. |
| கேள்வி எண். 4 | பதில் எண். 1.3. |
| கேள்வி எண். 5 | பதில் எண். 1.3.4. |
| கேள்வி எண். 6 | பதில் எண். 1.5. |

## 1.10. மாதிரி வினாக்கள்

1. அரசியல் அறிவியல் தன்மையும் பரப்பும் பற்றி விளக்குக.
2. அரசியல் அறிவியல் காணப்படும் பல்வேறு படிப்பு முறைகளில் உள்ள நிறை குறைகளை விளக்கி எழுதுக.
3. ஒற்றையாட்சி, கூட்டாட்சி முறை பற்றி விவரி.
4. அதிபர் ஆட்சி முறை பற்றி விளக்குக.

## அலகு – 2

# அரசு வளர்ச்சி – அதன் கூறுகள்

### அறிமுகம்

அரசின் அடித்தளங்களை நிருணயிக்க விரும்பும் எர்னஸ்ட் பார்க்கர் வரலாற்றுப் பூர்வமான பகுத்தாய்வு முறையைக் கையாளுகிறார். இதற்காக இவர் பண்டைய கிரேக்க சிந்தனை; 18—ஆம் நூற்றாண்டின் சிந்தனை; இன்றைய சிந்தனை இவற்றிற்கிடையே வேறுபாட்டினைக் கண்டறிந்து, அதன்மூலம் அரசியல் கோட்பாட்டில் சமூகம், அரசு ஆகிய இரண்டிற்கிடையே என்ன வேறுபாடு என அறிய முயற்சி செய்கிறார். அரசு என்பது தேச அளவிலானது. சமுதாயம் அவ்வாறேயிருந்த போதிலும் அரசுக்கும், சமுதாயம் மற்றும் சமுதாய நிறுவனங்களுக்குமிடையே இரு முக்கிய வேறுபாடுகள் உண்டு. முதலாவதாக அரசானது தனது பகுதியில் வசிக்கும் அனைத்து மக்களையும், கட்டாயமாக உள்ளடக்கியுள்ளது. அனால் மற்ற நிறுவனங்கள் ஒரு சிலரை மட்டும், அதுவும் அவர்களது சுய விருப்பத்தினால் கொண்டுள்ளன. இரண்டாவதாக, சட்டத்தைப் பயன்படுத்திக் கட்டாயப்படுத்தும் அதிகாரம், பணிய வைக்கும் அதிகாரம், தண்டனை அளிக்கும் அதிகாரம் இவை அரசுக்கு உண்டு. இதன்மூலம் நடத்தை ஒழுங்கு விதிகளை அனைவரும் கடைபிடிக்க அது தூண்டுகிறது. ஆனால் மற்ற நிறுவனங்கள் சமூக ரீதியிலான தண்டனை மட்டுமே அளிக்க முடியும். தனது அங்கத்தினர் தாமாகவே பணிந்தாலன்றி, கட்டாயப்படுத்திப் பணியவைத்தல் என்பது இல்லை.

### நோக்கங்கள்

1. அரசின் தோற்றம் அதன் வளர்ச்சியை அறிந்து கொள்தல்.
2. அரசு மற்றும் பிற சமுதாய அமைப்பைப் பற்றி புரிந்து கொள்தல்.
3. இறைமை அதன் பண்புகளை கற்றறிதல்.
4. ஆஸ்டினின் இறைமைக் கோட்பாட்டை பகுப்பாய்வு செய்தல்.

### வடிவமைப்பு

கிருத்துவ மத்தின் தாக்கம்
16 ஆம் நூற்றாண்டும் தேசிய அரசும்
அரசு என்பதன் பொருளும் — விளக்கமும்
அரசின் தன்மைகள்
மார்க்சீய கருத்தின் பார்வையில் அரசு
முழுத்தகுதி வாய்ந்த பணிகள்

அரசின் கூறுகள்
அரசும் பிற அமைப்புகளும்
அரசும் சங்கமும்
அரசும் அரசாங்கமும்
அரசும் நாடும்
இறைமையின் சிறப்புத்தன்மைகள்
இறைமையின் வகைகள்
ஆஸ்டின் கோட்பாடு அல்லது ஒருமுகக் கோட்பாடு
பன்முகக் கோட்பாடு – அடிப்படைக் கருத்துக்கள்
மனிதமும் சங்கங்களும்
பன்முக அரசின் தன்மை
தொகுப்புரை
முக்கிய வார்த்தைகள்
பரிந்துரைக்கப்பட்ட நூல்கள்
முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனை கேள்விகளுக்கான பதில்கள்
மாதிரி வினாக்கள்

## 2.1. கிருத்துவ மதத்தின் தாக்கம்

கிருத்துவ மதத்தின் தோற்றமும், வளர்ச்சியும் கிரேக்க சிந்தனை முறையிலிருந்து மாறுபட்ட சிந்தனைகளைத் தோற்றுவித்தன. நகர அரசுகள் குன்றி இம்மதம் வலிமை பெற்ற போது “இரு நோக்கங்கள்” எனும் கொள்கை உருவாயிற்று. ஒரு நோக்கம் இவ்வுலகஞ்சார்ந்த நோக்கம். அது அரசின் அதிகாரத்திற்குட்பட்டது. மற்றொன்று என்றுமழியாத, நிலையான தெய்வீக நோக்கம். இது மதத்தின், திருச்சபையின் அதிகாரத்திற்குட்பட்டது. ஆகவே இருநோக்கங்களடிப்படையில் இரு அதிகாரங்கள் அரசின் அரசியல் அதிகாரம், திருச்சபையின் ஆன்மீக அதிகாரம் — பிறந்தன. இதில் மத அதிகாரமானது அரசினையும் நல்வழிப்படுத்த வேண்டிய பொறுப்பினால் “கனத்த”, மேம்பட்ட அதிகாரமாகக் கருதப்பட்டது. இரு அதிகாரங்கள் என்ற பாகுபாடு இருப்பினும் கூட ஒரே சமுதாயத்தையே இவ்விரு அதிகாரங்களும் ஆட்சி செய்கிறன. ஒரு மக்கள் கூட்டமும், இரு அதிகாரங்களும் இருக்குமானால் அவ்விரு அதிகாரங்களில் ஒன்று மற்றதைவிட விஞ்சி உயர முயற்சி செய்யும். உண்மையில் பெறும் பொறுப்பைப் பெற்றிருந்த திருச்சபை இவ்வாறு உயர்ந்த அதிகாரமாய்த் திகழத்தலைப்பட்டது. கி.பி.1150 முதல் 1300 வரை திருச்சபையானது அரசின் இவ்வுலகம் சார்ந்த விஷயங்களையும் தன் பொறுப்பாக்கிக் கொள்ள ஆரம்பித்தது. மத ஒழுங்கில் உச்ச அதிகாரம் இணைந்த ஒரு அரசியலை அப்போது பாப்பரசர்கள் விழைந்தனர். அரசினை சமுதாயத்தோடு ஒன்றாக்கும் இக்கனவுகளுக்கும் அல்லது

கோரிக்கைகளுக்கும் எதிர்சக்திகள் இல்லாமலில்லை. முதலாவது 14—ஆம் நூற்றாண்டில் சட்ட வல்லுநர்களும், அரசர்களும் ஒவ்வொரு நிலப்பகுதியிலும் அரசுரிமை பெற்ற அரசர்களே அவ்வப்பகுதியில் உயர்அதிகாரம் கொண்டவர் என்று கூறத்தலைப்பட்டனர்.

இரண்டாவதாக, இடைக்காலத்தில் அரசுகள் அரசு முறைகளாக இல்லாமல், பிரிவுகளின் சொர்க்கமாகத் திகழ்ந்தன. அப்பகுதி சார்ந்த மதக்குருமார், நிலக்கிழார்கள், சாமானியர் ஆகிய மூன்று பிரிவினரும் அரசரது உச்சநிலைக்குப் போட்டியாளராக, பிரிவுகளாக, எஸ்டேட்டகளாகத் திகழ்ந்தனர். இவர்கள் கட்டுக்கோப்பான அமைப்புகளாகத் திகழவில்லை. இடைக்கால அரசானது இத்தகைய இத்தகைய எஸ்டேட் அரசாகவே இருந்தது. அதில் சமுதாயம் அதிகமாகவும், அரசு மிகக் குறைந்தும் காணப்பட்டது.

## 2.1.1. 16—ஆம் நூற்றாண்டும் தேசிய அரசும்

16—ஆம் நூற்றாண்டில் தேசிய அரசுகள் தோன்ற பல காரணங்கள் இருந்தன. மக்கியவல்லி, போதான் ஆகியோர் அரசர்களது அதிகாரத்தை மேம்படுத்த வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தி எழுதினர்: தேசிய உணர்ச்சி எழுந்தது. வியாபாரம், தொழில் ஆகியவற்றில் புதிய முன்னேற்றங்கள் ஏற்பட்டன: பண்டைய இலக்கியங்கள் மறுமலர்ச்சி பெற்றன: திருச்சபையில் சீரமைப்பு ஆகிய இப்பல காரணிகளும் ஐரோப்பிய மறுமலர்ச்சி தோன்றி, அனைத்தையும் உள்ளிட்ட முடியாட்சி அரசுகள் ஏற்பட உதவின.

ஜெர்மனியரான ஹெகல் என்பவர் 'எல்லாம் வல்ல' அரசுத் தத்துவம் பற்றி எழுதினார். அரசு என்பதை தெய்வீகமாக்க 'அரசே அனைத்தும்' என்ற கருத்தினை வலியுறத்தினார்

இதற்கு மாறாக 17—ஆம் நூற்றாண்டு இங்கிலாந்தில் அரசுக்குப் புதிய வடிவம் கொடுத்து அரசையும், சமுதாயத்தையும் தனித்தனியே பிரிக்கும் முயற்சி எழுந்தது. சுதந்திர மதம் எனும் கோரிக்கையை ஒட்டி வியாபாரப் போக்குகளும், தொழில் போக்குகளும் வளர்ந்தன. இதனால் தனியுரிமை, சுதந்திரம் ஆகிய கருத்துக்கள் அங்கே உருவாயின. ஆனால் பிரான்சில் எல்லாம் வல்ல முடியாட்சிக்கு எதிராகக் கிளம்பிய பிரெஞ்சுப் புரட்சி தனது நோக்கத்தை முற்றிலும் அடையமுடியாமல் போயிற்று. ஏனெனில் முடியாட்சிக்கு தேசிய இறைமை எனும் புரட்சித் தத்துவம் தேசத்தின் முழு உரிமை, அனைத்து சக்தி என்பதை உறுதிப்படுத்தியது. பார்க்கரின் கருத்தில் "பிரான்சின் புரட்சிக் கருத்தானது அது எவ்வளவு தூரம் மக்களாட்சிக் கருத்தாக இருக்க விழைந்தாலும்,

அரசினை மட்டுமே அமைப்பாகவும் அமைப்பாளராகவும் காட்டும் கோட்பாடாக அமைந்துள்ளது''.

மார்க்சின் சோசலிசம்: ஹெகலின் வாதத்தைப் பின்பற்றிய மார்கஸ் பாட்டாளிகளின் அரசு என்பதை ஒரு வளர்ச்சிக் கட்டமாகவே கண்டார். வரலாற்றின் முழுமையானது அரசை மறுக்கும் நிலையில் ஏற்படுகிறது. இயற்கையான பலவந்தமற்ற பொதுவுடைமையில் ஏற்படும் அப்பழுக்கற்ற சமுதாயத்திலும், சோசலிசத்திலும் அரசுக்கு இடமில்லை என்பது அவர் கருத்து. லெனின் போன்றோர் எழுத்துக்களிலும் வாழ்வின் அனைத்துப் பகுதிகளையும் தழுவும் எல்லாம் வல்ல சமூக – அரசு பற்றிய சித்திரமே தீட்டப்படுகிறது.

நாம் நினைவில் வைக்க வேண்டியது என்னவெனில், அரசுக்கும், சமூகத்திற்கும் இரண்டிற்குமே இடம் உள்ளது. மனித இயற்கை மாற்றமில்லாமல் இருக்கும் வரை, அரசானது நம்முடன் என்றும் இருக்கும்.

## 2.1.2. அரசு என்பதன் பொருளும் விளக்கமும்:

மனிதன் ஒரு சமூக விலங்கு. அவன் தனித்து இயங்க முடியாது. தனது தேவைகளை பூர்த்தி செய்ய பல அமைப்புகளை மனிதன் ஏற்படுத்துகிறான். அவைகளில் அரசு முக்கியத்துவம் பெறுகிறது. அரிஸ்டாட்டில் என்பவரின் கூற்றுப்படி "ஒரு தனிமனிதன் தனது தேவைகளை நிறைவேற்ற, அடைய பூர்த்தி செய்ய தனது குடும்பம், கிராமம் என்ற அமைப்புகளை விட ஒரு உயரிய அமைப்பை உருவாக்குகிறான். அதற்கு பாலிஸ் அல்லது நகர அரசு என்ற வார்த்தையை பயன்படுத்துகிறான்''. அரசு என்பதன் முக்கியத்துவத்தை அரிஸ்டாட்டில் வலியுறுத்தி மனிதன், அரசு என்ற அமைப்பு இல்லாமல் வாழ முடியாது எள்றும் கூறுகிறார்.

விளக்கம்: 'அரசு' என்ற சொல்லிற்கு எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட விளக்கம் இதுவரை இல்லை. அறிஞர்களின் பல விளக்கங்கள் இங்கு கொடுக்கப்பட்டுள்ளன.

1. அரிஸ்டாட்டில்: "முழு நிறைவு பெற்ற, தன்னிறைவுள்ள, மதிப்போடு கூடிய மகிழ்ச்சி நிறைந்த வாழ்விற்காக குடும்பங்களும், கிராமத்தினரும், ஒருங்கிணைந்து உருவாக்கிய ஒரு அமைப்புதான் அரசு என்பதாகும்.

2. உட்ரோ வில்சன்: ஒரு வரையறுக்கப்பட்ட நிலப்பகுதியில், சட்டத்திற்குட்பட்டு வாழும் இனத்திற்கு அல்லது சமூகத்திற்கு அரசு என்று பொருள் என்கிறார்.

3. பாலான்ட் செல்: ஒரு வரையறுக்கப்பட்ட நிலப்பகுதியில் அரசியல் மூலமாக இணைந்த மக்களின் அமைப்பு அரசு என்பதாகும்.

4. கார்னர்: ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் வாழும் மக்கள், தங்களின் இறைமையை கொண்டு, பிற நாட்டின் கட்டளைக்குட்படாது தங்களால் அமைக்கப்பட்ட அரசாங்கத்திற்கு மட்டும் கீழ்ப்படிந்து வாழும் முறைக்கு அரசு என்று பெயர் என்கிறார்.

5. பேராசிரியர் லாஸ்கி: மக்களும், அரசாங்கமும் இணைந்த ஒரு அமைப்பு. மக்களுக்கும், அரசாங்கத்திற்கும் உள்ள தொடர்பை அதிகாரத்தை கொண்டு வகைப்படுத்தும் ஒரு நிறுவனத்திற்கு அரசு என்று பெயர்.

6. ரஃபேல்: ஒரு வரையறுக்கப்பட்ட நிலப்பகுதியில் முழு அதிகாரம் செலுத்தி ஒழுங்கையும், பாதுகாப்பையும் நிலை நிறுத்தி மக்களின் ஒருங்கிணைந்த சங்க அமைப்புதான் அரசு என்பதாகும்.

7. எர்னஸ்ட் பார்க்கர்: அரசு என்பது ஒரு சிறப்பு நிறுவனத்தைக் குறிக்கிறது. அந்நிறுவனம் சட்டம் ஒழுங்கை பராமரிக்கிறது. அந்நிறுவனம் தெளிவான நடைமுறைகளை கொண்ட சட்டங்களால் செயல்படுகிறது. சட்டபூர்வமாக அமைக்கப்பட்ட சட்டத்தை நிலைநாட்டும் ஒரு அமைப்பு.

8. பிளாட்டோ: மனிதனின் பெரிய வடிவமே 'அரசு' என்பதாகும்.

## 2.1.3. அரசின் தன்மைகள்

அரசின் தன்மை பற்றி அறிஞர்களிடையே பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன.

**அரசு என்பது ஒரு ஒழுக்கக் கூறு**

கிரேக்க தத்துவஞானிகளான பிளாட்டோவும் அரிஸ்டாட்டிலும் அரசு என்பது ஒரு ஒழுக்க நெறியை அடிப்படையாகக் கொண்டது. வாழ்வின் அனைத்து போக்குகளையும் கட்டுப்படுத்தி நெறி செய்யும் ஒரு கருவியே அரசு என்று கூறினர். கிரேக்கர்கள் அரசையும், சமுதாயத்தையும் வேறுபடுத்தி கூறவில்லை. அரசிடமே ஒரு தனிநபரின் முன்னேற்றத்தை (உடல் ரீதியான, உணர்ச்சி ரீதியான, அறிவுப் பூர்வமான) அரசிடமே ஒப்படைத்தனர். ஒரு தனிநபரின் வளர்ச்சிக்கு

அரசே பொறுப்பு என்று கருதினார். பதினெட்டாம், பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில், ஹெகல், கான்ட் பாசங்கே போன்ற அறிஞர்களும் இக்கருத்தை புதுப்பித்தனர். புவியில் இறைவனின் வீர நடை என்று வர்ணித்தனர். ஆனால் இன்று பலர் ஒழுக்க கூறு என்பதை மறுக்கின்றனர். அரசு என்பது உறுப்பினர்களிடையே நிலவும்வேறுபாடுகளை களையும் ஒரு நிறுவனம் அல்லது ஒரு கருவி. உறுப்பினர்களின் நல்வாழ்வு பணிகளை மேற்கொள்கிறது என்று கூறுகின்றனர்.

### அரசு என்பது ஒரு சட்ட நிறுவனம்

அரசு என்பது தன்னிடம் உள்ள சட்டங்களை கொண்டு மககளின் உரிமைகளையும், உயிரையும், சொத்துக்களையும் பாதுகாக்கக் கூடிய ஒரு நிறுவனம். போடின், ஹோப்ஸ் பென்தாம், ஆஸ்டின் போன்றோர்களும் இக்கருத்தையே வலியுறுத்துகின்றனர். பதினேழாம் நூற்றாண்டில் இக்கருத்து முக்கியத்துவம் பெற்றது. நாட்டின் சட்ட ஒழுங்கை நிலைநிறுத்தும் ஒரு அமைப்பு என்று கருதினர்.

### அரசு என்பது ஒரு உயிர்

அரசு என்ற ஒரு வாழும் அங்கத்தின் ஒரு பகுதியே மனிதன். மனிதனின் பெரிய வடிவமே அரசு. பிளாட்டோ இக்கருத்தையே கொண்டிருந்தார். ஆனால் தனிநபருக்கும், அரசுக்கும் இடையே அவற்றின் பணிகளின் அடிப்படையில் வேற்றுமை கூறப்பட்டது. உதாரணமாக கிரேக்க சமூகத்தை அவர்களின் தொழிலின் அடிப்படையில் மூன்றாகப் பிரித்தார். 1. தத்துவஞானிகள் 2. வீரர்கள் 3. தொழில் வல்லுநர்கள்.

### அரசு என்பது ஒரு நல்வாழ்வு நிறுவனம்

இன்றைய கருத்தின்படி அரசு என்பது மக்கள் நலன் பேணும் ஒரு நல்வாழ்வு நிறுவனம் அல்லது ஒரு சமூக தொண்டு நிறுவனம். சட்ட ஒழுங்கை நிலைநாட்டுவதை விட, அனைத்து மக்களின் நலன்களை பேணுவதை விட பெரும்பான்மை மக்களுக்கு பெரும்பான்மையான நலன்களை பெற்றுத்தர வாய்ப்புகளை உருவாக்கும் ஒரு நிறுவனமே அரசு என்று கூறப்படுகிறது.

## 2.1.4. மார்க்சீய கருத்தின் பார்வையில் அரசு

காரல் மார்க்ஸ், ஏஞ்சல் போன்றோர்கள் தங்களது பாணியில் அரசின் தன்மைக்கு விளக்கம் அளிக்கின்றனர். ‘‘சமூகத்தில் பணபலமிக்க வல்லமை வாய்ந்தவர்களின் கையில் உள்ள ஒரு சுரண்டல் கருவியே அரசு. அரசு அனைத்து மக்களின் நல்வாழ்விற்காக இல்லை. ஒரு

குறிப்பிட்ட மக்களின் நன்மைக்காக, பெரும்பாலோரை சுரண்டும் ஒரு நிறுவனமே அரசு என்று கூறப்படுகிறது.

இவ்வாறு அரசின் தன்மை பலருக்கு பலவிதமாக மாறுபடுகிறது. ஒருமித்த கருத்து ஏதும் இல்லை. மேலும் நவீன காலத்தில் அரசின் வேலைகளும் பல மாற்றங்களை பெற்றுள்ளன. அரசு, மனிதனால் உருவாக்கப்பட்ட கழகங்கள், திருச்சபை, தொழிற்சங்கங்கள், அரசியல் கட்சிகள் போன்றவற்றிலிருந்து வேறுபடுகிறது.

**முழு அதிகார வரம்பு**

ஒரு அரசின் நிலப்பகுதியில் வாழும் மக்கள் அனைவரையும் இது கட்டுப்படுத்துகிறது. ஒரு அரசின் சட்டங்களுக்கு அவ்வரசில் வாழும் மக்களும், அங்குள்ள வெளிநாட்டவரும் கட்டுப்பட்டவர்கள். இத்தகைய முழு அதிகார வரம்பினை மனிதனால் உருவாக்கப்பட்ட மற்ற அமைப்புகளில் காண முடியாது. இன்றைய அரசுகளில் மட்டுமே இத்தகைய அதிகாரத்தை காணமுடியும்.

**கட்டாய அதிகாரவரம்பு**

இரண்டாவது சிறப்புத்தன்மை, முதல் சிறப்புத்தன்மையுடன் நெருங்கிய தொடர்புடையது. ஒரு அரசின் குடிமகனுக்கு அவ்வரசின் அங்கத்தினராகவோ அல்லது அங்கத்தினராகாமல் இருக்கவோ, தனது விருப்பப்படி முடிவெடுக்க எவ்விதமான வாய்ப்பும் அளிக்காமல் இருத்தல், கட்டாய அதிகார வரம்பை குறிக்கிறது. முன்பு ஒரு காலத்தில் நினைத்தால் மக்களின் ஒரு பிரிவினர் நாட்டை விட்டு வெளியேறி, புதிய குடியேற்றமோ அல்லது புதிய நாட்டில் தங்களது சுயசட்டங்களுடன் அரசு உருவாக்க வாய்ப்பு இருந்தது. இன்றும் மற்றொரு நாட்டிற்கு சென்று குடியேற வசதி உண்டு. ஆனால் மனிதனால் உருவாக்கப்பட்ட மற்ற சங்கங்களில் மக்கள் உறுப்பினராக வற்புறுத்தப்படுவதில்லை. பிற சங்க அமைப்புகளில் அங்கத்தினராகுமாறு ஒருவரையும் கட்டுப்படுத்த முடியாது. ஒருவர் தன் சுய விருப்பத்தால் ஒரு சங்கத்தில் அங்கத்தினராகலாம். ஆனால் ஒருவராலும் தங்கள் அரசை விட்டுப்பிரிந்து அரசின் அதிகார வரம்பிலிருந்து விடுபட்டுச் சுதந்திரமாக வாழ இயலாது. ஒவ்வொருவரும் ஏதாவதொரு அரசின் வரம்பிற்கு உட்பட்டவராகவே இருத்தல் வேண்டும்.

## 2.1.5. முழுத்தகுதி வாய்ந்த பணிகள்

அரசு தனது அதிகாரங்களை கொண்டு பணியாற்ற முழுத்தகுதி வாய்ந்தது. ஒவ்வொரு அரசும் இரண்டு வகையான பணிகளைச் செய்கின்றன.

1. நேர்மறை பணிகள்

2. எதிர்மறை பணிகள்

எதிர்மறை பணிகள் என்பது இருக்கக்கூடிய உரிமைகளுக்கு இடையூறு ஏற்படும் பொழுது சட்டம் ஒழுங்கை நிலைநாட்டி மக்களின் உரிமைகளை பாதுகாத்தல். நேர்நிலை அல்லது ஆக்கரீதியான பணிகள் என்பது, நாட்டில் மக்களிடையே சீரான முறையில் உரிமைகளைப் பகிர்ந்தளித்து நீதியையும், மக்களின் நலத்தையும் பேணுதல். எதிர்மறைப்பணிகள் அரசை பிற சங்கங்களிலிருந்து வேறுபடுத்துகின்றன. பிற சங்கங்களில் சங்க அமைப்புகளின் உள்ளே ஒழுங்கு கடைபிடிக்கப்படுகின்றன. ஆனால் அரசியல் சட்டம ஒழுங்கை புறத்தில் நிலைநாட்டுதலே முதன்மை பணியாக உள்ளது.

**கட்டாய வழிமுறைகள்:**

ஒரு அரசு தனது பணிகளை மேற்கொள்ளும் முறை, கட்டாயப்படுத்தும் அதிகாரத்தை கொடுக்கும் சட்டங்களை அடிப்படையாக கொண்டது. அரசின் முக்கிய மூன்று துறைகள் நிர்வாகத்துறை, நீதித்துறை, சட்டமன்றதுறை போன்றவைகள் சட்டங்களை இயற்றுகின்றன. நடைமுறைபடுத்துகின்றன, சட்டங்களுக்கு விளக்கமளிக்கின்றன. இவ்வேலைகள் கட்டாய வழிமுறைகளைக் கொண்டுதான் செயல்படுத்தப்படுகின்றன. பிற சங்கங்களுக்கும் சட்டங்கள் உண்டு. ஆனால் சட்டங்களுக்கு வலிமை இல்லை. அரசின் சட்டங்கள் தமக்குரிய அதிகாரத்தை அரசிடம் இருந்துதான் பெறுகின்றன. எனவே அரசின் சட்டங்கள் பிற சங்கங்களின் சட்டங்களை விட மேன்மையானவை.

**2.1.6. அரசின் கூறுகள்:**

அரசு என்பது ஒரு அரசியல் ஒருங்ககம், அதற்கெனச் சில சிறப்பான தன்மைகளை அது பெற்றுள்ளது. அரசு என்பதும் அரசாங்கம் என்பதும் ஒரே பொருளுடைய சொற்களாகப் பயன்படுத்தப்படுகின்றன. ஆனால் அவை ஒன்றல்ல அரசின் ஒரு அங்கமே அரசாங்கம். அரசிற்கும் அரசாங்கத்திற்குமிடையிலான மாறுபாடுகள் பற்றிப் பின்னர் விரிவாகக் காணலாம். அரசின் கூறுகள் மக்கள், நிலப்பரப்பு, அரசாங்கம், இறைமை ஆகிய நான்கு ஆகும்.

### 1. மக்கள்

அரசினை உருவாக்கும் கூறுகளில் முக்கியமாக அமைவது அதன் மக்களாகும். மக்கள் இல்லாமல் அரசு அமையமுடியாது. அரசின் உறுப்பினர்கள் அதில் வாழும் மக்களேயாவர். மக்கள் தொகை என்பதனை அவர்கள் உருவாக்குகின்றனர். ஒரு மக்கள் தொகை சிறியதாகவோ, பெரியதாகவோ அமையலாம். அதிகமான மக்கள் ஒரு அரசில் இருந்தால் மனித சக்தி அதிகம் இருக்கும். ஆனால், பிரச்சினைகளும் அதிகமாக இருக்கும் என்பதில் ஐயமில்லை. மக்கள் தொகை மிகவும் குறைவாக இருந்தால் அந்த அரசிற்குத் தேவையான மனித சக்தி கிடைக்காது.

ஒரு அரசில் வாழும் மக்கள் உழைக்கும் தன்மை நிறைந்தவர்களாகவோ அல்லது சோம்பேறிகளாகவோ இருக்கலாம். உழைக்கும் திறன்மிக்க மக்கள் இருந்தால் அரசு முன்னேறும். சோம்பேறிகள் நிறைந்து இருந்தால் அரசு அல்லற்படும். எனவே மக்கள் தொகையின் அளவும் தன்மையும் அரசின் வளத்தையும் மேம்பாட்டையும் முடிவுசெய்வதில் முக்கியமான அம்சங்கள் எனலாம். ஒரு அரசில் வசிக்கும் மனிதர்கள் அனைவரும் அதன் மக்களாவர். ஆனால் அவர்கள் அனைவரும் குடிமக்களாக இருக்க வேண்டும் என்பதில்லை. குடியுரிமை என்பது பிறப்பின் வாயிலாகவோ அல்லது சட்டரீதியான வழிமுறையிலோ பெறப்படுகிறது. எல்லாக் குடிமக்களுக்கும் தேர்தலில் வாக்குரிமை கிடைப்பதில்லை. ஒவ்வொரு அரசும் வாக்குரிமைக்கான வயது வரம்பு ஒன்றினை நிர்ணயிக்கிறது. பொதுவாக அரசினை உருவாக்க மக்கள் அவசியம்.

### 2. நிலப்பரப்பு

ஒவ்வொரு அரசிற்கும் தெளிவான நிலப்பரப்பு அமைவது அவசியம். ஒவ்வொரு அரசின் நிலப்பரப்பு எல்லைகளைப் பிற அரசுகள் அங்கீகாரம் செய்ய வேண்டும். சான்றாக, இந்தியா, காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரைத் தனது நிலப்பரப்பினைப் பெற்றுள்ளது. அரசின் வளம் அதனது நிலப்பரப்பைப் பொறுத்தும் அமைகிறது. பரந்த நிலப்பரப்புடைய அரசிற்குப் பல இயற்கை வளங்கள் சிறப்பாக அமையலாம். பரந்த நிலப்பரப்ப அரசின் பலத்தையும் உறுதி செய்யும். அதே சமயத்தில் பரந்த நிலப்பரப்புக் காரணமாக ஒற்றுமையின்மை, பற்றாக்குறை போன்ற பிரச்சினைகளும் தோன்றலாம். ஒரு வளரும் அரசின் மக்கள் தொகையும் நிலப்பரப்பும் சரியான நல்ல விகிதத்தில் அமைதல் அவசியம். மிகச் சிறிய நிலப்பரப்பில் மிக அதிகமான மக்கள் வாழ்ந்தால் பல பிரச்சினைகள் உருவாகலாம். மிகப் பரந்த நிலபபரப்பில் குறைவான மக்கள் வாழ்ந்தால் மனித சக்தியின் பற்றாக்குறை தோன்றலாம். வரலாற்றின் வெவ்வேறு காலக் கட்டங்களில் நிலப்பரப்புக் காரணமாகவே பல போர்கள் நடைபெற்று இருக்கின்றன. தற்காலத்தில்

பன்னாட்டுச் சட்டம் ஒரு அரசுடைய எல்லை விண்ணிலும், கடல் நீரிலும் எந்த அளவு என்பதையும் நிர்ணயித்துக் கூறுகிறது.

### 3. அரசாங்கம்

அரசாங்கம் அரசினுடைய மூன்றாவது கூறு ஆகும். அரசாங்கம் அரசினுடைய முகவராகச் செயல்படுகிறது. அரசும், அரசாங்கமும் ஒன்று எனும் தவறான கருத்தைச் சாதாரணமானவர்கள் கொண்டிருக்கலாம். ஆனால், ஒரு அரசியல் அறிவியல் மாணவனுக்கு இரண்டிற்கும் இடையிலான வேறுபாடுகள் தெரிந்திருத்தல் அவசியம். அரசின் செயல்பாட்டை அரசாங்கத்தின் வாயிலாகவே நாம் காண்கிறோம். அரசு நிலையானது. ஆனால் ஒரு அரசாங்கம் மாற்றம் அடையலாம். அரசாங்கத்தின் வடிவமே மாற்றி அமைக்கப்படலாம். ஒரு மக்களாட்சியில் அரசாங்கத்தின் தலைவிதியை ஏதேனும் ஒரு அரசியல் கட்சியோ அல்லது அரசியல் தலைவரோ நிர்ணயிக்கலாம். ஆனால் அரசின் நிலை அவ்வாறு இல்லை. அரசாங்கம் இன்றிச் சிறிது காலமேனும் ஒரு அரசால் இருக்க முடியும். ஆனால் அரசற்ற அரசாங்கம் பொருளற்றது.

ஒவ்வொரு அரசாங்கமும் மூன்றுவிதமான முக்கியப் பணிகளைச் செய்கின்றன. சட்டமியற்றுதல், நிர்வகித்தல், நீதி பரிபாலனம் என்பவையே. அம்மூன்றுவிதமான பணிகளையும் முறையே சட்டமன்றம், நிர்வாகத்துறை, நீதித்துறை ஆகிய பிரிவுகளே செய்கின்றன. சட்டமன்றம் சட்டங்களை இயற்றுகிறது. இயற்றப்பட்ட சட்டங்களை நிர்வாகத்துறை அமல் செய்கிறது. எல்லா அரசுகளிலும் சட்டத்தை மீறுபவர்கள் இருப்பார்கள். அவர்களைத் தண்டிக்கவும், நீதியை நிலைநாட்டவும் நீதித்துறை அமைந்துள்ளது. அது அரசாங்கத்தின் பிற இரு பிரிவுகளையும் கட்டுப்படுத்தும் பணியினையும் செய்கிறது.

### 4. இறைமை

அரசின் மிக முக்கியமான கூறாக அமைவது இறைமை ஆகும். இறைமை என்பது அரசின் முழுமையான அதிகாரம் ஆகும். அது எவராலும் எதிர்க்கப்பட முடியாத முறியடிக்கப்பட முடியாத அரசியல் அதிகாரத்தைக் குறிப்பிடுகிறது. மனித உடலில் இரத்த ஓட்டம் போன்றது அரசிற்கு இறைமை. இறைமையில்லாத அரசு அரசே அல்ல. அரசிற்கு இறைமை இல்லாவிடில் அது மற்றச் சங்கங்களில் இருந்து மாறுபட்டதாகாது. இறைமைபற்றிப் பல்வேறு கோட்பாடுகள் உள்ளன. இறைமை உள் இறைமை, வெளி இறைமை என இருவகைப்படும்.

அரசு `தனது எல்லைகளுக்குள் முறியடிக்கப்பட முடியாத அரசியல் அதிகாரம் பெற்றுள்ளது. இதனையே உள் இறைமை என்கிறோம்.

அரசை எந்தத் தனி மனிதனும் எதிர்க்க முடியாது. எந்த நபரும் அமைப்பும் அரசிற்கும் மேலானதல்ல. அரசின் சட்டங்களையும் ஆணைகளையும் மீறுபவர்களைத் தண்டிக்கும் அதிகாரம் அதற்குள்ளது. இவை உள் இறைமையின் அம்சங்களாகும். உள் இறைமை இல்லாமல் அரசு தனது தனி நிலையைப் பெறமுடியாது. பஞ்சாபில் உள்ள சில தீவிரச் சீக்கியர்கள் காலிஸ்தான் எனும் புதிய அரசின் பிறப்பைப் பிரகடனம் செய்தனர். அதற்கென எல்லையைக் குறித்தனர். அரசாங்கத்தையும் உருவாக்கினர். ஆனால் அவர்களிடம் அரசியல் அதிகாரமில்லை. அதேபோன்ற நிலையில்தான் ஈழத்தமிழ்ப் போராளிகளும் உள்ளனர். இந்நிலையில் காலிஸ்தானும், தமிழ் ஈழமும் முழுமையான அரசுகள் ஆகமாட்டா.

வெளிஇறைமை என்பது அரசின் வெளியிலிருக்கும் எந்தச் சக்திக்கும் கட்டுப்படாத நிலையையைக் குறிக்கும். ஒரு அரசினைப் பிற அரசுகள் அங்கீகரித்தால்தான் அந்த அரசு வெளி இறைமை பெற்றுவிட்டதாகப் பொருள் கொள்ளமுடியும். சான்றாக, 1947க்கு முன்னரே இந்தியாவில் மக்கள் இருந்தனர். இந்திய எல்லைகள் இருந்தன. இந்திய அமைச்சர்களே பங்குபெற்ற அமைச்சரவை கூடு இருந்தது. ஆனால் 1947க்கு முன்னர் இந்தியா ஒரு சுதந்திரம் பெற்ற இறையமையுள்ள அரசாகத் திகழவில்லை. ஏனெனில் அது பிரிட்டனின் கட்டுப்பாட்டில் இருந்தது. இவ்வாறு இறைமை அரசு வாழ மிகவும் அவசியமான அம்சமாகத் திகழ்கிறது.

மக்கள் தொகை, பரப்பு, அரசாங்கம் மற்றும் இறைமை ஆகிய நான்கும் ஒரு அரசின் அடிப்படைக்கூறுகள் எனக் கருதப்படுகின்றன. ஒரு அரசிற்கு உகந்த மக்கள் தொகை அளவு எது என்பதை நிர்ணயிக்கச் சில எழுத்தாசிரியர்கள் முயற்சிகளை மேற்கொண்டுள்ளனர். சிலர் மிக அதிகமான மக்கள் தொகை அரசிற்கு வலிமையூட்டும் என வாதாடுகின்றனர். ஆனால் எண்ணிக்கைக்கு முக்கியத்துவம் அளிக்க வேண்டிய அவசியமில்லை எனும் கருத்தினைச் சிலர் கூட்டிக் காட்டுகின்றனர். சிலர் மக்கள் தொகையின் எண்ணிக்கையைவிட அவர்களின் த[illegible] முக்கியத்துவம் அளிக்கின்றனர். முழுமையான இறைமையைப் பரிந்துரைக்கும் எழுத்தாளர்களும் உள்ளனர். இறைமை எங்கு இருக்கவேண்டும் என்பது பற்றியும் கருத்து வேறுபாடுகள் உள்ளன. எனினும் அரசின் அடிப்படையான கூறுகள் எவை என்பதில் எழுத்தாளர்களிடையே கருத்து வேறுபாடு இருப்பதாகத் தெரியவில்லை.

## 2.2. அரசும் பிற அமைப்புகளும்

அரசு ஒரு அரசியல் நிறுவனம் அதற்கெனச் சில கூறுகள் நோக்கங்கள் இலட்சியங்கள் ஆகியவற்றைப் பெற்றிருக்கிறது. இவை தொடர்பான பல்வேறு கோட்பாடுகள் உள்ளன. வேறு சில அமைப்புக்கள் பற்றி நாம் அறிவோம். அவற்றிற்கும் அரசிற்கும் இடையிலான ஒற்றுமைகளைக் கண்டறிதல் அவசியம், அரசிற்கும், சமுதாயம், சங்கம், நாடு மற்றும் அரசாங்கம் போன்ற அமைப்புகட்கும் இடையிலான ஒற்றுமை வேற்றுமைகளைப் பற்றி இவ்வத்தியாயத்தில் ஆய்வு செய்யலாம்.

### 1. அரசும் சமுதாயமும்

அரசு ஒரு அரசியல் நிறுவனம். சமுதாயம் ஒரு சமுதாய அமைப்பு. மனிதன் ஒரு சமுதாயப்பிராணி என்னும் உண்மை பலராலும் சுட்டிக் காட்டப்படுகிறது. மனிதன் ஓர் அரசியல் பிராணி என்பதும் அதற்கு நிகரான உண்மை. எனவே சில எழுத்தாளர்கள் அரசையும், சமுதாயத்தையும் சமமானவை எனக் கருதுகின்றனர். அவ்வாறு முயல்பவர்களிடையே முக்கியமானவர் எட்மண்ட் பர்க் என்பவராவார். ஆனால் மாக்ஐவர் போன்ற அரசியல் வல்லுனர்கள் அரசிற்கும் சமுதாயத்திற்கும் இடையிலான வேறுபாடுகளைத் தெளிவாக்குகின்றனர்.

#### ஒற்றுமைகள்

சமுதாயம் மனிதர்களால் ஆனது. அரசும் மனிதர்களாலானது. சமுதாயமும் அரசும் பொதுநலனைக் குறிக்கோளாகக் கொண்டு செயல்படுபவை. அரசிற்கெனச் சில பொதுவான இலட்சிய எல்லைகள் உள்ளன. அதேபோன்று சமுதாயத்திற்கெனச் சில இலட்சிய எல்லைகள் அமைந்துள்ளன. சமுதாய மேம்பாட்டிற்கு ஒற்றுமை அவசியம். அரசின் மேம்பாடும் ஒற்றுமையைச் சார்ந்தேயுள்ளது. அரசிற்கும் சமுதாயத்திற்கும் ஒரேவிதமான அறம் சார்ந்த இலட்சிய நோக்கங்கள் உள்ளன. எனவே அரசும் சமுதாயமும் ஒன்றானவை என்னும் கருத்து வலியுறுத்திக் கூறப்படுகிறது. எனினும் அவற்றிடையே சில ஆழமான வேறுபாடுகளும் உள்ளன.

#### வேறுபாடுகள்

சமுதாயம் இன்றியமையானது. தேடித்திரிந்து வேட்டையாடி உண்டு வாழ்ந்த மனிதன் கூடி உறவாடிக் கூட்டாய் வாழக் கற்றுக்கொண்ட காலத்தில் சமுதாயம் எழுந்தது. ஆனால் அரசு செயற்கையானது. மிருகங்களிடையே கூட சமுதாய வாழ்க்கையைக் காணலாம். தேனீக்கள் கூட்டமாக வாழ்கின்றன. யானைகள் கூட்டமாக வாழ்கின்றன. ஆனால்

அவற்றிடையே அரசு முறையில்லை. சமுதாயம் அரசைவிட முந்தியது. சமுதாயம் ஏற்பட்டதற்குப் பின்னரே அரசு தோன்றியிருக்க முடியும். கூடி வாழும் உணர்வினால் தோற்றுவிக்கப்பட்ட சமுதாயத்தைப் பாதுகாக்க ஒரு தலைமையை அவன் தேடியபோது அரசை உருவாக்கினான். எனவே சமுதாயம் அரசிற்கு முந்தியது.

சமுதாயம் விரும்புகின்ற சில நோக்கங்களை நிறைவேற்ற அது பயன்படுத்தும் கருவியே அரசு என்பாரும் உண்டு. சமுதாயத்திற்கு எதிர்க்கப்பட முடியாத அரசியல் அதிகாரம் இல்லை. ஆனால் அரசிற்கு அத்தகைய அதிகாரம் இறைமை வடிவத்தில் உள்ளது. அரசு இறைமை பெற்றுள்ளது. எனினும் அது சமுதாயத்திற்குள்தான் செயல்படுகிறது. அரசில்லாத சமுதாயம் அமையலாம். காரல் மார்க்ஸ் பொதுவுடைமை அமைப்பில் அரசற்ற சமுாயதம் அமையும் என ஆணித்தரமாக அவரது கோட்பாட்டில் குறிப்பிடுகிறார். மகாத்மா காந்தியும் அரசற்ற சமுதாய அமைப்பு பற்றிய இலட்சியக் கனவுக்கண்டார்.

### 2.2.1. அரசும் சங்கமும்

அரசு என்பது அரசியல் சார்நத சங்கம் எனலாம். லாஸ்கி அதை மற்றச் சங்கங்களுடன் சமமானது என்றே கருதுகிறார். மாக் ஐவரும் அரசு மற்றச் சங்கங்களைப் போன்றே ஒரு சங்கம் என்றே கூறுகிறார். சங்கம் என்பது சில குறிப்பிட்ட நோக்கங்களைச் சாதித்துக்கொள்ள மனிதர்களால் உருவாக்கப்படும் ஒரு அமைப்பு எனலாம். அரசு சில அரசியல் நோக்கங்களைச் சாதிக்க உருவாக்கப்பட்ட அமைப்பாகும். இத்தகைய கருத்தினை பன்முகக் கொள்கையாளர்கள் திடமாக நம்புகின்றனர். அவர்கள் அரசிற்கும் சங்கத்திற்கும் இடையில் எத்தகைய வேறுபாட்டினைம் காணவில்லை. எனினும் அரசிற்கும் சங்கத்திற்கும் இடையில் சில வேறுபாடுகள் உள்ளன.

ஒரு சங்கத்தில் உறுப்பினராவது ஒருவரது விருப்பத்தின் அடிப்படையிலானது. ஆனால் ஒரு அரசின் எல்லைக்குள் பிறக்கின்ற ஒருவனுக்கு அதில் உறுப்பினராய் இருத்தல் என்பது இயற்கை. எடுத்துக்காட்டாக, இந்தியாவில் பிறந்த நாம் இந்திய அரசின் உறுப்பினர்களாகிவிட்டோம். அதாவது இந்நாட்டின் குடிமக்களாகிவிட்டோம். ஆனால் ஒரு சங்கத்தில் உறுப்பினராவது என்பது அப்படியல்ல. சான்றாக, ஒருவர் ஒரு பாட்மின்டன் விளையாட்டுச் சங்கம் அல்லது கர்நாடக இசைச் சங்கத்தில் உறுப்பினராக ஆவது என்பது அவரது விருப்பத்தின் அடிப்படையில் அமைவது. இவ்விஷயத்தில் கட்டாயப்படுத்துதல் என்பது இல்லை. ஒருவர் இதுபோன்ற சங்கத்தில் சேரவோ விலகவோ அவரது விருப்பத்திற்கேற்றபடி செய்யலாம். ஆனால் ஒரு சங்கம் எல்லை வரையறைகளைத் தாண்டி அமையலாம். சான்றாக,

அமைதியை விரும்புவோர் சங்கம் எல்லை வரையறைகளைத் தாண்டி அமையலாம். சான்றாக, அமைதியை விரும்புவோர் சங்கம் எனும் சங்கம் அமைக்கப்படடால் உலகெங்கிலும் அதில் உறுப்பினர்கள் சேர்ந்து கிளைகளை அமைக்கலாம். முதலாளித்துவம், பொதுவுடைமை, முன்னேறியவை, முன்னேறாதவை போன்ற பாகுபாடு பார்ப்பதில்லை.

அரசு நிலையானது. அரசின் அழிவு என்பது மிகவும் அபூர்வமாக ஏற்படும் மிகப்பெரும் வரலாற்று நிகழ்ச்சி. ஆனால் ஒரு சங்கம் நிலையானது எனச் சொல்ல முடியாது. அரசிடம் அதிகாரம் இருக்கிறது. அதனுடைய இறைமையை பயன்படுத்த அது அதிகாரத்தைச் செலுத்துகிறது. அரசு தனது ஆணைகளையும் சட்டங்களையும் கீழ்ப்படியுமாறு தனது மக்களைக் கட்டாயப்படுத்தலாம். அரசின் எல்லைக்குள் எவரும் அரசின் விருப்பத்தை மீறிச் செயல்பட முடியாது. அரசின் ஆணையை மீறுவது தண்டனைக்குரிய குற்றமாகும். ஆனால் ஒரு சங்கம் அந்த அளவு அதிகாரம் பெற்றதல்ல.

ஒரு உறுப்பினர் சங்கத்தின் விதிகளை அல்லது முடிவுகளை மீறினால் அச்சங்கம் அந்த உறுப்பினரை அதிகபட்சம் சங்கத்தைவிட்டு வெளியேற்றலாம். ஆனால் சிறையிலடைத்தல் போன்ற தண்டனையை வழங்க மடியாது. அரசு சிறையிலடைத்தல், தூக்கிலிடுதல் போன்ற தண்டனைகளை நிறைவேற்றும் அதிகாரத்தைப் பெற்றுள்ளது. அரசுக்கு இருப்பதைப் போன்று பரந்த விரிவான நோக்கங்கள் சங்கத்திற்கு அமைவதில்லை.

அரசின் செயல் எல்லை விரித்துக்கொண்டே செல்லக்கூடியது.

ஒரு அரசின் எல்லைக்குள் பல சங்கங்கள் அமையலாம். அனால் அரசு ஒன்று மட்டுமே அமைய முடியும். ஒரு அரசிற்குள் செயல்படும் சங்கங்களிடையே மோதல்கள் நிகழலாம். ஒரு சங்கம் மற்றொரு சங்கத்திற்கு எதிராகச் செயல்படலாம். சான்றாக, ஒரு வியாபாரிகள் சங்கம் விலையை ஏற்றுமாறு கோரும் போது நுகர்வோர் சங்கம் விலையைக் குறைக்குமாறு கோரலாம். ஆலைய உரிமையாளர்களின் சங்கம் போனசைக் குறைக்க விரும்புகையில் தொழிலாளர் சங்கம் அதைக் கூட்டுவதற்காகப் போராடலாம். சங்கங்களிடையே மோதல்கள் நிகழ்ந்தால் அரசு தலையிட்டுச் சமரசம் செய்துவைக்க முயல்கிறது. இவ்வாறு அரசிற்கும் சங்கத்திற்கும் இடையிலான மாறுபாடுகளைச் சில எழுத்தாளர்கள் சுட்டிக்காட்டுகின்றனர்.

### 2.2.2. அரசும் அரசாங்கமும்

அரசு, அரசாங்கம் ஆகிய சொற்கள் அரசியல் அறிவியலில் பயன்படுத்தப்படுபவை. அவற்றைச் சிலர் ஒரே பொருள் உடையவையாகப்

பயன்படுத்துகின்றனர். ஆனால் அவை வெவ்வேறானவை. ஒரு அரசியல் அறிவியல் மாணவர் அவற்றைச் சமமாகப் பாவிக்கும் தவறினைச் செய்யக்கூடாது. அரசு அரசாங்கத்தின் வாயிலாக செயல்படுகிறது. அரசிற்கும் அரசாங்கத்திற்குமிடையிலான வேறுபாடுகளைக் கீழே காணலாம்.

அரசு அதன் எல்லைக்குட்பட்ட அனைவரையும் குறிக்கும் சொல். அரசாங்கம் அதன் ஒரு பகுதியை மட்டும் குறிப்பது. அரசின் பணிகளைச் செய்பவர்கள் மட்டுமே அரசாங்கம் எனும் சொல்லின் பொருளுக்குள் அடங்குவர்.

அரசு நிலையானது. ஆனால் அரசாங்கம் அத்தகையதல்ல. ஒரு தேர்தல் அல்லது அரசியல் மாற்றத்தின் மூலமாக அது மாற்றப்படலாம். ஒரு பாராளுமன்ற முறை அரசாங்கம் ஜனாதிபதி முறை அரசாங்கம் ஆகலாம். அல்லது ஒரு சர்வாதிகார முறையாகக் கூட ஆகலாம். ஆனால் எல்லாவிதமான முறைகளிலும் அரசு தவிர்க்க முடியாதது. ஒரு அரசை மற்றொரு அரசு போரில் வென்று தன்னுடன் சேர்த்துக் கொள்வதன் மூலம் அதனை இல்லாமல் ஆக்கலாம். அல்லது உள்நாட்டுப்போர் அல்லது குழப்பங்கள் காரணமாக ஒரு அரசு சிதைந்து இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட அரசுகள் ஆகலாம்.

அரசிற்கு இறைமையுண்டு. உள் இறைமை, வெளிஇறைமை ஆகியவை அரசின் முக்கியமான அம்சங்கங்கள். ஆனால் அரசங்காத்திற்கு இறைமை கிடையாது. பல அரசுகளில் மக்களுக்கெனச் சில அடிப்படை உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன. அவற்றைப் பாதிக்கும் வண்ணம் அரசாங்கம் செயல்பட்டால் அரசாங்கத்திற்கு எதிராக வழக்குத் தொடரக் குடிமக்கட்கு உரிமையுண்டு. அரசாங்கத்தின் வரம்பு மீறிய மேலாதிக்கத்திலிருந்து மக்களைக் காக்கும் வண்ணம் அரசியலமைப்புக்கள் வழங்கப்பட்டுள்ளன. ஆனால் அரசிற்கு எதிரான உரிமைகள் மக்களுக்கு இல்லை. அரசு மேலாண்மை பெற்றது. அரசாங்கம் அரசின் ஒரு அங்கமே.

### 2.2.3. அரசும் நாடும்

நாடு அல்லது தேசம் என்பதைப் பலரும் பலவாறு விவரிக்கின்றனர். ஒரு பொதுவான எல்லைப் பரப்புக்குள் இன ஒற்றுமையுடன் வாழ்கின்ற மக்கள் கூட்டம் நாடு எனக் சிலர் விளக்கம் கூறுகின்றனர். சில பொதுவான அம்சங்களால் பிணைக்கப்பட்ட மக்களின் சுட்டம் நாடு என்பது மற்றொரு விளக்கம். பொதுவான மொழி மற்றும் பொதுவான பாரம்பரியம் ஆகியவற்றால் இணைக்கப்பட்ட மக்கள் நாடு என அழைக்கப்படுவதாக லிலாக் என்பார் சுறுகிறார். பண்டையக்

கிரேக்கர்கள் காலத்தில் ஒவ்வொரு நகரும் ஒரு அரசாக இருந்தது. ஆனால் இக்காலத்தில் நாடு என்பது அரசாக விளங்குகிறது. நாடு என்பதையும் அரசு என்பதையும் சமமாகப் பாவிக்கும் நடைமுறை சிலரிடம் உள்ளது. ஆனால் இவை இரண்டும் ஒன்றல்ல.

அரசுக்கும் நாட்டிற்குமிடையில் சில வேறுபாடுகள் உள்ளன. பல பொதுவான அம்சங்களால் பிணைக்கப்படும் எந்த மக்கள் கூட்டத்தையும் தேசம் அல்லது நாடு என அழைக்கலாம் ஆனால் அரசியல் ரீதியாக ஒருங்கப்படுத்தப்பட்டது மட்டுமே அரசு என அழைக்கபப்டும். அரசு என்னும் சொல்லைவிட நாடு எனும் சொல் விரிவான பொருளை அளிக்கக்கூடியது. ஒருமித்தல் எனும் உணர்வினை தேசம் என்பது பிரதிபலிக்கிறது.

இடைக்கால இந்தியாவில் பல அரசுகள் இருந்தன. தற்காலத்தில் ஒரே அரசுள்ள நாடாக ஒருமித்த உணர்வுடன் அது திகழ்கிறது. இந்த நாட்டினைச் சேர்ந்திருக்கிறோம். என்ற உணர்வு மக்களிடம் காணப்படுகிறத. இதைச் தேசிய உணர்வு என்கிறோம். தேசியம் என்பது உளவியல் சார்ந்தது. அரசு என்பது சட்ட ரீதியானது. குடியுரிமை என்பது ஒருவனின் உடைமை. அரசுநிலை அவன்மீது நடைமுறைப்படுத்தப்படும் அரசியல் ரீதியான கட்டுப்பாடு. இவ்வாறு இவ்விரு சொற்களும் வேறுபடுகின்றன.

## இறைமை

அரசினை உருவாக்குகின்ற நான்கு அடிப்படைக் கூறுகளில் முக்கியமானது இறைமை எனலாம். இறைமை எனப் பொருள்படும் ஆங்கிலச் சொல் “சாவரின்டி” என்பதாகும். இந்தச் சொல் லத்தீன் மொழியிலுள்ள ‘சூப்பர் ஆனஸ்’ என்ற சொல்லிலிருந்து வந்தது என்கின்றனர். சூப்பர் ஆனஸ் என்றால் மேலானது என்று பொருள். அரசின் விருப்பம் அனைத்து மக்களையும் கட்டுப்படுத்தும் மேலாண்மை பெற்று மேலானதாகத் திகழ்கிறது. இந்த அரசின் விருப்பமே இறைமை எனப்படும். அரசின் எல்லைகளுக்குள் அதன் விருப்பத்தை எதிாக்கின்ற அதிகாரம் எவருக்குமில்லை. இந்த எதிர்க்கப்பட முடியாத அதிகாரத்தை இறைமை எனலாம். ஓர் அரசின் அரசியல் ரீதியான வாழ்வைப் பிற அரசுகள் ஒப்புக்கொண்டு அதன் எல்லைகளை அங்கீகரித்து மதிப்பதும் இறைமையின் ஓர் அம்சமாகும்.

மக்கள் மீதான எல்லையற்ற அதிகாரமே இறைமை எனும் விளக்கத்தை போதன் என்பார் கூறுகிறார். அரசின் இந்த எல்லையற்ற அதிகாரத்தை எவரும் எதிர்க்க முடியாது. டர் கய்ட் என்பாரின் கூற்றுப்படி அரசின் கட்டளையிடுகின்ற அதிகாரமே இறைமையாகும். அரசின்

எல்லைக்குள் வசிக்கின்ற குடி மக்கள் மீது நிபந்தனையற்ற ஆணைகளைப் பிறப்பிக்கின்ற அதிகாரம் அரசிற்குண்டு அரசுக்கு மக்கள் மூலமான முழுமையான வரையற்ற அதிகாரமே இறைமை எனும் விளக்கத்தை பர்கஸ் என்பார் அளிக்கிறார். இதுபோன்று இறைமை பற்றிப் பல்வேறு விளக்கங்கள் அளிக்கப்படுகின்றன. அத்தகைய விளக்கங்களின் வாயிலாகச் சில சிறப்புத் தன்மைகளை உணரமுடியும். அவற்றை இறைமையின் சிறப்புத் தன்மைகள் எனக்கொள்ளலாம்.

## 2.3. சிறப்புத் தன்மைகள்

இறைமை முழுமையானது. அரசின் எல்லைக்குள் இறைமையை எவரும் எதிர்க்கமுடியாது. இறைமை இடுகின்ற ஆணைகளை எந்தத் தனி நபரும் சங்கங்களும் மீற முடியாது. அவ்வாறு மீறுகின்ற நபர்களும் சங்கங்களும் தண்டனைக்குள்ளாக வேண்டும். அரசை ஆணையிட்டுப் பணியவைக்கும் அதிகாரம் எவருக்குமில்லை. இத்தகைய தன்மைகளின் காரணமாக இறைமையை முழுமையானது என்கிறோம். இறைமை அனைவருக்கும் பொருந்துவது. ஓர் அரசின் எல்லைக்குள் வசிக்கின்ற அனைத்துக் குடிமக்களும் இறைமையின் அதிகார வரம்பிற்கு உட்பட்டவர்கள்: அதிலிருந்து எவருக்கும் விதிவிலக்களிக்கப்படுவதில்லை. எனவே, அனைவருக்கும் பொருந்தும் தன்மை இறைமையின் முக்கியத் தன்மைகளில் ஒன்றாகிறது. இறைமை பிரிக்கப்படமுடியாத தன்மையையும் பெற்றுள்ளது. இறைமை அரசுக்கு மட்டுமே சொந்தமானது. அதனை அரசிடமிருந்து பிரித்து வேறு எவரும் கையாள முடியாது. இறைமை நிலையானது அரசு இருக்கின்ற வரை இறைமை இருக்கும். இறைமையை உடைத்து துண்டாக்க முடியாது. அது அரசிடம் முழுமையானதாக இருக்கக்கூடியது. அதனைப் பிரித்து உடைத்துப் பிற சங்கங்கள் அல்லது அமைப்புகளிடம் கொடுக்க இயலாது. இவை இறைமையின் சிறப்பான தன்மைகள் ஆகும்.

### 2.3.1. இறைமையின் வகைகள்

இறைமையைச் சில வகைகளாகப் பிரிக்கலாம். அவையாவன் 1. பெயரளவிலான இறைமை; உண்மையான இறைமை 2. சட்ட ரீதியான இறைமை; அரசியல் இறைமை, 3. உண்மை நிலை இறைமை; சட்ட நிலை இறைமை, 4. வெளி இறைமை — உள் இறைமை இவற்றை இறைமையின் பல்வேறு அம்சங்கள் எனவும் குறிப்பிடலாம். இவற்றிடையினுள்ள வேறுபாடுகளைக் காணலாம்.

## பெயரளவிலான – உண்மையான இறைமை

இறைமை ஒரு தனி நபரிடமோ அல்லது நபர்கள் அடங்கிய அமைப்பிடமோ இருக்கலாம். இறைமைச் செலுத்துகின்ற நபர் அல்லது அமைப்பு இறைமையாளர் எனக்கொள்ளப்படும். அவ்வாறு இறைமையாளர் என ஏற்றுக்கொள்ளப்பட்டவர் இறைமையைக் கையாளலாம். அல்லது பெயரளவில் இறைமை அவரிடமிருப்பது போன்று தோன்றும். உண்மையில் இறைமை வேறு நபரிடமோ அல்லது அமைப்பிடமோ இருக்கலாம். இவ்வாறு உண்மையில் இறைமையைச் செலுத்துபவரிடம் உள்ள இறைமை உண்மையான இறைமை எனவும்; அவர் உண்மையான இறைமையாளர் எனவும் அழைக்கப்படுகிறார். பெயரளவில் இறைமை வைத்திருப்பதைப் போன்ற தோற்றமளிப்பவர் பெயரளவிலான இறைமையாளர் எனப்படுகிறார். அவரிடமுள்ள இமைமை பெயரளவிலான இறைமை எனப்படுகிறது. இதனை ஒரு சான்றின் மூலமாக விளக்கலாம். இன்று இங்கிலாந்து அரசின் இறைமை அதிகாரம் அந்நாட்டு அரசியின் கைகளில் இருப்பதுபோல தோன்றும், அந்நாட்டு அரசிற்கு அவர்தான் தலைவர். ஆனால், உண்மையிலேயே அதிகாரங்களைச் செலுத்துபவர் பிரதமமந்திரி. அரசியார் பிரதமரையும், பாராளுமன்றத்தையும் மீறி எதனையும் செய்யமுடியாது. எனவே அரசியாரைப் பெயரளவிலான இறைமையாளர் என்றும் பிரதமரை உண்மையான இறைமையாளர் என்றும் அழைக்கலாம். பெயரளவில் செலுத்தபடுவது போன்ற தோற்றத்தையளிக்கும் இறைமை பெயரளவிலான இறைமை: உண்மையில் செயற்படுத்தப்படுகின்ற இறைமை உண்யைமான இறைமை.

## சட்டரீதியான மற்றும் அரசியல் இறைமை

சட்டத்தின் அணுகுமுறையில் ஒப்புக்கொள்ளப்படும் இறைமையைச் சட்ட ரீதியான இறைமை எனலாம். சட்டமும் சட்டத்தை விளக்கி அதனைக் காக்கின்ற நீதிமன்றங்களும் அங்கீகரிக்கின்ற இறைமையைச் சட்ட ரீதியான இறைமை எனலாம். பிரிட்டனின் பாராளுமன்றம் சட்டரீதியான இறைமையைப் பெற்றுள்ள அமைப்பு. பிரிட்டனின் பாராளுமன்றம் சட்ட ரீதியான இறைமையைப் பெற்றுள்ளது எனலாம். எனினும் சட்டட ரீதியான இறைமைக்குப் பின்னணியாக அரசியல் இறைமையும் உள்ளது. மக்கள் அனைவரும் அரசியல் இறைமையின் பிரதிநிதிகள் எனலாம். அல்லது ஓர் அரசியல் வாக்குரிமை பெற்ற வாக்காளர்கள் அரசியல் இறைமையாளர்ள் எனலாம். சட்ட ரீதியான இறைமை என்பது தெளிவானது. அரசியல் இறைமை தெளிவற்றது. முன்னர் உள்ளதைப் புரிந்துகொள்ளும் அளவுக்கு பின்னர் உள்ளதை உணர்வது கடிதம். சட்ட ரீதியான இறைமையப் தேர்ந்தெடுப்பது அரசியல் இறைமையாகும். அரசியல் இறைமை மக்களால் உருவாக்கப்படுவது.

**உண்மைநிலை மற்றும் சட்டநிலை இறைமை**

உண்மையாகவே அதிகாரங்களைப் பெற்று இறைமையைச் செலுத்துபவர் உண்மைநிலை இறைமையாளர் எனப்படுவார். அவரிடமுள்ள இறைமை உண்மைநிலை இறைமை எனப்படும் சட்டரீதியாக இறைமையைக் கையாளுகின்ற உரிமையைப் பெற்றவர் சட்டநிலை இறைமையாளர் எனப்படுவார். அவர் கையாளவேண்டிய இறைமை சட்டநிலை இறைமை எனப்படும். சட்டரீதியாக இறைமையகைக் கையாளவேண்டியவரின் உரிமையை மற்றொருவர் தட்டிப் பறித்துவிடலாம். பிரான்சின் வரலாற்றில் மிகச் சிறந்த மன்னனாகத் திகழ்ந்த நெப்போலியன் போனபார்ட் அந்த அரியணைக்குச் சட்டரீதியான உரிமையைப் பெற்றிருக்கவில்லை. ஆனால் தன் தோள்வலிமையாலும் வாள்திறனாலும் பிரான்சுநாட்டின் மணிமுடியைச் சூட்டிக் கொண்டான்: அதேபோன்று பால அரசுகளில் சட்டரீதியாக ஆளுகின்ற உரிமை பெற்றவர்களைக் கவிழ்த்துவிட்டு அல்லது கட்டுப்பாட்டிற்குள் வைத்து இராணுவத் தலைவர்களோ அல்லது மற்றவர்களோ அட்சியைக் கைப்பற்றுதல் வரலாற்றில் காணப்படும் நிகழ்ச்சி. அவ்வாறு இராணுவ பலத்தின் மூலம் ஆட்சியைக் கைப்பற்றும் தளபதி உண்மைநிலை இறைமையாளர் ஆகிறார். சட்டரீதியாக அவ்வுரிமையைப் பெற்றிருப்பவர் சட்டநிலை இறைமையாளர் எனப்படுகிறார்.

**உள் இறைமையும் வெளி இறைமையும்**

ஓர் அரசின் எல்லைகளுக்குட்பட்டு அனைத்து மக்கள் மீதும் அந்த அரசு இறைமை அதிகாரத்தைப் பெற்றுள்ளது. இதனை உள் இறைமை எனாலம். அதன் எல்லைக்குள் அதனுடைய அதிகாரத்தை எதிர்க்கின்ற வலிமை எவருக்கும் இருப்பதில்லை. ஒவ்வொரு இறைமை பெற்ற அரசையும் மற்ற அரசுகள் அங்கீகாரம் செய்கின்றன. அந்த அரசின் எல்லைகளை ஒப்புக்கொள்கின்றன. இவ்வாறு பிற அரசுகளால் ஓர் அரசு ஏற்கப்படுவதை வெளிஇறைமை எனலாம். வேற்று அரசின் கட்டளைக்குக் கீழ்படியும் நிலையில் இருக்கும் அரசை இறைமை பெற்ற அரசு எனச் சொல்லமுடியாது. சான்றாக 1947க்கு முன்னர் இந்தியா ஓர் இறைமை பெற்ற அரசாக இருக்கவில்லை. ஓர் அரசின் முழுமையான சுதந்திரமான செயல்பாட்டிற்கு உள் இறைமையும் வெளி இறைமையும் அவசியமாகின்றன.

## 2.3.2. ஆஸ்டின் கோட்பாடு அல்லது ஒருமுகக் கோட்பாடு

ஜான் ஆஸ்டின் என்பவர் இங்கிலாந்தைச் சேர்ந்த நீதி வல்லுநர் மற்றும் அரசியல் சிந்தனையாளர். அவர் இங்கிலாந்தில் 1790 முதல் 1859 வரை வாழ்ந்தவர். பல்வேறு நூல்களைப் படைத்திருந்தார்.

அவற்றுள் சட்டவியல் தொடர்பாக அவரால் படைக்கப்பட்ட நூல்கள் முக்கியமானவை. சட்டவியல் தொடர்பான விரிவுரைகள் எனும் அவரது நூல் மிகவும் பிரசித்தமானது. இறைமை பற்றிய தமது கோட்பாட்டினை அவர் அந்த நூலில் விளக்கியுள்ளார். அவரது இறைமைப் பற்றிய கோட்பாடு ஒருமுகக் கோட்பாடு எனவும் அழைக்கப்படுகிறது.

ஆஸ்டின் இறைமைக் கோட்பாட்டை மிகவும் சுருக்கமாகக் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்; ஒவ்வொரு அரசியல் சமுதாயத்தில் மிகவும் மேலாண்மை பெற்ற அல்லது இறைமைபெற்ற அதிகாரம் உள்ளது. அரசினை உருவாக்கும் கூறுகளுக்குள் மிகவும் முக்கியமானது இறைமை ஆகும். இறைமையின்றி அரசு இல்லை. ஒரு நபரிடமோ அல்லது நபர்கள் அடங்கிய அமைப்பிடமோ இறைமை உறைந்துள்ளது இறைமையை எளிதில் உணர்த்துதல் இயலாது.

அதனைப் பொது விருப்பத்தின் வாயிலாக வெளிப்படுத்த முடியும் என்ற ரூசோவின் கருத்தை ஆஸ்டின் மறுக்கிறார். மக்கள் கருத்து, தேர்தல் மற்றும் மக்கள் கூட்டத்தின் வாயிலாகவும் கூட இறைமையை வெளிப்படுத்த முடியாது என்னும் கருத்தை ஆஸ்டின் ஆணித்தரமாகக் கூறுகிறார்.

இறைமை மிகவும் உயர்ந்தது. அது எவ்விதமான சட்டத்தின் வரையறைக்கும் அல்லது கட்டுப்பாட்டிற்கும் அப்பாற்பட்டது. இறைமையின் அதிகாரம் எல்லைகளற்றது. இறைமையாளர் சொல்பவை அனைத்தும் சட்டங்களே. இறைமையின் உறைவிடம் தவிர வேறெந்த மூலத்திருந்தும் சட்டங்கள் தோன்றமுடியாது. இறைமையை அதனுடைய உறைவிடத்திலிருந்து பிரிக்கமுடியாது. இறைமையைத் துண்டுகளாக்கி ஒன்றுக்கு மேற்பட்ட நபர்கள் அல்லது அமைப்புகட்குப் பகிர்ந்தளிக்க முடியாது. இத்தகைய கருத்துக்களை ஆஸ்டினின் இறைமைக் கோட்பாடு கொண்டுள்ளது. இறைமை ஒரே நபரிடமோ அல்லது ஒரே அமைப்பிடமோதான் உறைந்திருக்க முடியும் என்று இக்கோட்பாடு வலியுறுத்துவதால் இது ஒருமுகக் கோட்பாடு என அறியப்படுகிறது.

ஆஸ்டின் கருத்துப்படி வல்லமை பெற்ற ஒரு நபரிடம் இறைமை உறைந்துள்ளது. ஒருமுகக் கோட்பாடுபற்றிப் பலரும் தங்களது கருத்துக்களை வெளியிட்டுள்ளனர். இக்கருத்தினைப் பலரும் குறை கூறுகின்றனர். ஆஸ்டின் கோட்பாடு தெளிவற்றதாகவும் அதிக அளவில் சட்டம் சார்ந்ததாகவும் இருக்கிறது எனச் சுட்டிக் காட்டப்படுகிறது. சட்டம் பற்றி ஆஸ்டின் கூறியுள்ள கருத்துக்களையும் அனைவரும் ஏற்றுக் கொள்வதில்லை. இறைமையாளர் இடுகின்ற ஆணைகள் அனைத்துமே சட்டங்களைப் பற்றி விளக்கும்போது, வழக்கங்கள், மரபுகள், வழக்காறுகள் போன்றவற்றைப் பிரித்துப் பார்க்க தவறுகிறார் ஆஸ்டின். அவரது

கருத்துப்படி சட்டங்கள் வலிமையை மட்டுமே சார்ந்துள்ளன. ஆனால், நடைமுறையில் வலிமையை மட்டும் சார்ந்தே சட்டங்கள் நிற்கமுடியாது. சட்டங்களுக்குத் தார்மீக அடிப்படையும் அவசியமாகிறது.

முழுமையான இறைமையை ஆஸ்டின் வலியுறுத்துகிறார். முழுமையான இறைமை ஆபத்தானது. முழுமையான இறைமையின் அதிகார வெப்பத்தில் அடிப்படை உரிமைகள் எனும் மலர்ச் செடிகள் கருகிச் சரிந்துவிடும். முழுமையான இறைமை மக்களாட்சிக் கோட்பாட்டிற்கு எதிரானது. இக்கருத்து நாசிசம் பாசிசம் போன்ற சர்வாதிகார நாசக் கொள்கைகட்கு வித்திடும் ஆபத்தும் உள்ளது. ஆஸ்டின் கோட்பாடு "ஒருமுகக்கோட்பாடு எனப்படும். அதற்கு எதிராக எழுந்த பன்முகக் கோட்பாட்டினை ஆதரித்தவர்கள் இறைமையைப் பிரிக்கவும் துண்டுகளாக்கவும் முடியும் என வாதிடுகின்றனர். ஆஸ்டின் கோட்பாடு தற்காலத்தில் அதிகமாக வலியுறுத்தப்படும் மக்கள் இறைமைக் கோட்பாடிலிருந்து மாறுபட்டுள்ளது. தற்கால அரசில் மக்களுக்கே வரையறையற்ற அதிகாரம் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆனால், ஆஸ்டின் கோட்பாடு இறைமையாளருக்கு வரையறையற்ற அதிகாரம் இருப்பதாகக் கூறுகிறது.

ஆஸ்டின் கோட்பாடுபற்றி மேற்கூறிய விதத்தில் பல்வேறு குறைகள் சுட்டிக்காட்டப்படுகின்றன. இறைமை என்பது மேலானது என்ற அவரது கருத்து மறுக்க முடியாதது. இறைமையை நடைமுறைப்படுத்த வலிமையும் அவசியம். ஆஸ்டின் கோட்பாடு இறைமைபற்றிய முக்கியமான கோட்பாடாகத் திகழ்கிறது. சட்டம் பற்றியும் சிறப்பான விளக்கங்களை அளிக்க அவர் முயற்சிகளை மேற்கொண்டுள்ளார். எனவே குறைகள் இருந்த போதிலும் ஆஸ்டினின் கோட்பாடு அரசியல் அறிவியல் ஒரு முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளது என்பதில் ஐயமில்லை. அவரது ஒரு முகக் கொள்கைக்கு எதிரிடையாகப் பன்முகக் கொள்கை எனும் கொள்கை கூறப்படுகிறது. லாஸ்கி லினட்சே, G.D.H கோல், மக் ஐவர் போன்ற எழுத்தாசிரியர்கள் பன்முகக் கொள்கைக்கு ஆதரவான கருத்துக்களைக் கூறியுள்ளனர்.

### 2.3.3. பன்முகக் கோட்பாடு – அடிப்படைக் கருத்துக்கள்

பன்முகக் கொள்கைபற்றிப் பல சிந்தனையாளர்கள் கூறினர். சமுதாயத்தின் மக்கள் தங்கள் நலனைக் காக்கப் பல சமுதாய, அரசியல், பொருளாதாரச் சங்கங்கள் அல்லது அமைப்புகளை அமைக்கின்றனர். அத்தகைய சங்கங்களில் ஒன்றே அரசு, பிற சங்கங்களெல்லாம் அரசால் ஆக்கப்பட்டவையல்ல. அவை தாமாகவே தோன்றுகின்றன. அவற்றிற்கான அதிகாரம் அரசால் வழங்கப்படவில்லை. இச்சங்கங்களுடன் ஒப்புநோக்குகையில் அரசு எவ்வகையிலும்

அவற்றைவிட உயர்ந்ததல்ல. தொழில் சங்கங்கள், தேவாலயங்கள், தொழில் தொடர்பான அமைப்புகள் போன்றவை அரசு எவ்வளவு முக்கியமானதோ அவ்வளவு முக்கியமானவை. ஒருமுகக் கொள்கைகளில் கூறப்பட்டுள்ளது போல் அரசு எல்லாச் சங்கங்களின் மீதும் அமைப்புகளின் மீதும் முழுமையான அதிகாரத்தைச் செலுத்துதல் என்பது இயலாத ஒன்று. அரசின் சட்ட பூர்வமான இறைமை என்பது ஒரு கற்பனையேயன்றி வேறல்ல. அரசின் சட்டபூர்வமான இறைமை எனும் கருத்து எவ்வளவு விரைவில் விடப்படுகிறதோ அந்த அளவு மனித இனத்தின் முன்னேற்றத்திற்கு நன்மை பயக்கும். இத்தகைய கருத்துக்கள் பன்முகக் கொள்கையின் அடிப்படைக் கருத்துக்கள் என மாக்சே கூறுகிறார். பன்முக அரசியல் ஒரேவிதமான அதிகார அமைப்பில்லை. அதில் அதிகார மூலமானது பல பாகங்களாகப் பிரிக்கப்படுகிறது என்னும் கருத்தை சியோ என்பார் கூறுகிறார். மனிதனின் வாழ்க்கைப் பல இதழ்களுடைய மலருக்கு ஒப்பிட்டால் ஒவ்வொரு சங்கமும் அமைப்பும் ஓர் இதழ் எனலாம். ஒரு மலருக்கு எல்லா இதழ்களுமே சமமான அழகைச் சேர்ப்பன போல் மனித வாழ்க்கைக்கு எல்லாச் சங்கங்களுமே முக்கியமானவை. ஒவ்வொரு மனிதனும் அவன் விரும்புகின்ற சங்கங்களுடனோ அல்லது அமைப்புகளுடனோ தொடர்பு கொண்டு செயல்பட அவனுக்குச் சுதந்திரம் அளிக்கப்பட வேண்டும். எந்த ஒரு சங்கத்தையும் அடக்கும் வகையிலோ அல்லது மேலாதிக்கம் செலுத்தும் வகையிலோ அரசு செயல்படக்கூடாது. இவ்வாறு பன்முகக் கொள்கையானது அரசிடம் அதிகாரம் குவிக்கப்படுவதை எதிர்க்கும் கொள்கையாக அமைந்தது. அது அரசின் அதிகாரத்தை எதிர்த்ததேயொழிய அரசை எதிர்க்கவில்லை. அரசு என்பது மற்றச் சங்கங்கட்குச் சமமானது என்னும் இக்கொள்கை வளர்ந்த வரலாறும் முக்கியமானதாகும்.

### 2.3.4. மனிதனும் சங்கங்களும்

அதிகாரம் என்பது கூட்டமைப்பாகத்தான் இருக்கமுடியும் என லாஸ்கி கருதினார். மனிதன் பல அரசியல், பொருளாதார சமுதாய. சமயத் தேவைகளைப் பெற்றுள்ளான். அத்தகைய தேவைகளைச் சந்திக்கப் பல சங்கங்களை அமைக்கிறான். தொழிற்சங்கம் என்பது தொழிலாளியின் பொருளாதார நலனையும் உரிமையையும் காக்கிறது. மனிதனின் ஒழுக்க நிலையை தேவாலயம் காக்கிறது. பாலுணர்வு, இணைந்து வாழும் ஆசை, பெற்று வளர்க்கும் உணர்வு ஆகியவற்றைக் குடும்பத்தின் மூலம் மனிதன் நிறைவேற்றுகிறான். அதைபோன்று மனிதனின் அரசியல் தேவைகளைப் பூர்த்தி செய்யவே அரசு அமைகிறது. ஒவ்வொரு மனிதனும் தனது ஆளுமைக்கேற்ப ஒரு சங்கத்திலோ அல்லது பல சங்கங்களிலோ பங்கு பெறலாம். ஒரு இசைக் கழகத்தில் ஒருவனுக்கு அதிக ஈடுபாடு இருக்கலாம். வேறு ஒருவனுக்கு

அரசியல் கட்சியில் ஈடுபாடு இருக்கலாம். மனிதன் தன் விருப்பத்தின் காரணமாக அவன் சங்கத்திற்குக் கீழப்படிகிறான். அரசு மற்றச் சங்கங்களிலிருந்து இந்த விஷயத்தில் மட்டுமே மாறுபடுகிறது. அது தனது உறுப்பினர்களைக் கீழ்படியுமாறு கட்டாயப்படுத்தும் உரிமையைப் பெற்றிருக்கிறது. அதில்கூட லாஸ்கி தனிமனிதனுக்குச் சாதமாகக் கருத்தினைக் கூறுகிறார். அவரது கருத்துப்படி தனி மனிதன் தனது மனச்சாட்சிப்படி அரசின் ஆணை அல்லது சட்டம் தவறானது என நினைத்தால் அதற்குக் கீழ்ப்படியும் அவசியமில்லை. இவ்வாறு அரசை மற்றச் சங்கங்கட்கும் சமமானது என்பதையும் அதற்கு மனிதர்கள் மீது மறுக்க முடியாத அதிகாரமில்லை என்பதையும் லாஸ்கி வலியுறுத்தினார்.

### 2.3.5. பன்முக அரசின் தன்மை

ஒருமுக அரசின் தன்மையும் அதன் இறைமையையும் குறை கூறியதுடன் பன்முகக் கொள்கையாளர் நின்றுவிடவில்லை. பன்முக அரசு எவ்வாறு இருக்கும் என அதன் தன்மைகளையும் விவரித்தனர். பன்முக அரசில் அது மற்றச் சங்கங்கட்குச் சமமானதாக அமையும்; மற்றச் சங்கங்களுடன் அதன் உறவு கூட்டுறவு அடிப்படையில் தான் அமையுமேயொழிய அதிகாரம் செலுத்தும் வகையில் அமையாது. குடும்பம், தேவாலயம் போன்ற சங்கங்கள் கூறுகின்ற கருத்துக்களைத் தனி மனிதர்கள் அரசின் கருத்துக்கள் அல்லது ஆணைகட்கு எதிராகக் கூட ஏற்றுக்கொள்ளலாம். சட்டமியற்றுதல் என்பது தற்போதைய அரசியல் முறையில் அரசிற்கே சொந்தமாக உள்ளது. பன்முக அரசியலில் இதனை அரசு எல்லாச் சங்கங்களுடன் பகிர்ந்து கொள்ளும். அந்தந்தத் துறைகளில் தொடர்பான விஷயங்களை அவற்றில் செயலாற்றும் சங்கங்கள் அல்லது அமைப்புக்களே முடிவு செய்யும். சான்றாக, தொழிலாளர்களின் குறைந்தபட்ச உழைக்கும் நேரம், ஊதியம் போன்றவற்றை முடிவு செய்வதில் அரசு தலையிடாது. அவ்விஷயங்களில் பன்முகக் கொள்கையாளர்கள் சர்வதேசச் சட்டத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தனர். சர்வதேசச் சட்டத்திற்குக் கட்டுப்படுத்தும் வகையில் அமைந்துள்ளதை அவர்கள் சுட்டிக்காட்டினர். சர்வதேச சட்டம் ஓர் அரசின் சட்டத்தைப் போன்றது என்பது அவர்களது வாதம், முதல் உலகப்போரின் முடிவில் ஏற்பட்ட சர்வதேச சங்கம், இரண்டாவது உலகப்போரின் காலத்தில் ஏற்படுத்தப்பட்ட உடன்படிக்கைகள் போன்றவை சர்வதேச அளவில் அரசுகளைக் கட்டுப்படுத்தும் வகையில் அமைந்தன.

ஐக்கிய நாடுகள் சபையின் சாசனத்தில் காணப்படும் சில உறுப்புகள் அரசுகள் மீதான சர்வதேசச்சட்டத்தின் கட்டுப்பாட்டை அதிகமாக்குகின்றன. ஐ.நா.சபையினால் வெளியிடப்பட்ட மனித உரிமைகள் பிரகடனத்தை சர்வதேச உரிமைகள் மகோதா

எனமதிப்பிடலாம். பன்னாட்டு நீதிமன்றம் அரசுகளின் தவறுகளை ஆராய்ந்து தீர்ப்பளிக்கும் நீதித்துறை அமைப்பாக விளங்குகிறது. இவ்வாறு சர்வதேசச் சட்டம் அரசின் இறைமையைக் கட்டுப்படுத்தும் வகையில் அமைந்துள்ளது. இதனை மேலும் விரிவாக்கும் வகையில் பன்முக அரசு அமையும்.

பன்முகக் கொள்கையினைப் பல சிந்தனையாளர்கள் வெவ்வேறு விதமாக வெவ்வேறு அளவுகளில் விவரித்தனர். சரியான காலக்கட்டத்தில் பன்முகக் கொள்கை தோன்றிச் சில அரசியல் முறை மாற்றங்கட்கு வழி வகுத்தது. ஆஸ்டினின் இறைமைக் கோட்பாடு அரசின் மேலாண்மை நிலையை உறுதிப்படுத்துகிறது. அரசு எத்தகைய அதிகாரத்தயும் செலுத்தலாம் எனும் கருத்து நிலவியது. இவ்வாறு ஒருமுக அரசுக் கொள்கையினை ஆதரித்தவர்கள் அரசின் முழுமையான அதிகாரத்தை ஏற்றுக்கொண்ட நிலையில் பன்முகக் கொள்கை அதற்கு எதிராக சரியான காலக்கட்டத்தில் தோன்றியது என்கிறார் கெட்டல். இடைக்காலந்தொட்டே அரசு தனது அதிகாரத்தை அதிகமாக்கிக்கொண்டே வந்தது. அதனுடைய அதிகாரக் குவிப்பைத் தடுத்தது பன்முகக் கொள்கை. குழுவாக இணைந்த வாழ்க்கைக்கு அக்கொள்கை முக்கியத்துவம் அளிக்கிறது. சங்கங்களின் பங்கு அரசியல் முறையில் அதிகமாக்கப்பட பன்முகக் கொள்கை வாதாடுகிறது. சங்கங்கள் முக்கியத்துவம் பெற்றால் ஒவ்வொரு தனிமனிதனின் மனிவிருப்பமும் முக்கியத்துவம் பெறுவது போன்றதாகும்.

எனவே இக்கொள்கை தனிமனிதனின் ஆளுமைக்கு முக்கியத்துவம் அளிக்கிறது. அரசு தனது அங்கங்களாக விளங்கும் சங்கங்களின் நலனைக் கருத்திற் கொள்ள வேண்டிய அவசியத்தை இக்கொள்கை கூறுகிறது. இத்தகைய நிறைகளைப் பன்முகக் கொள்கை பெற்றிருப்பதாக எம்.பி.பாவட் என்பார் கூறுகிறார். அரசுதான் முடிவு. அரசுக்காகவே மனிதன் எனும் கொள்கை மனிதனை அடிமையாக்கும் உரிமை பெற்றிருந்தது. அதனை எதிர்த்து அரசு முடிவல்லது சமுதாய நலனே முடிவு எனும் கருத்தை நிலைநாட்டியது பன்முகக் கொள்கை.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகள்

அ) அரசின் பொருள் விளக்கம்

ஆ) அரசின் கூறுகள் யாவை?

இ) அரசும் பிற அமைப்பகளையும் எழுதுக.

அரசு என்பதை மற்றச் சங்கங்களுக்குச் சமமானதாக ஏற்றுக்கொள்வது தவறானது. அரசும் மற்றச் சங்கங்களும் சமம் எனும் நிலை வந்தவிட்டால் ஆட்சியற்ற நிலை வந்துவிடும். சமுதாயத்தில் குழப்பமே நிலவும். அரசு என்பது சங்கங்களின் சங்கம் எனும் நிலையினை ஏற்படுத்த அது அதிகமான மேலாண்மை பெற்றிருக்கவேண்டும். அவ்வாறு மேலாண்மை பெற்றிருந்தால் குழப்பங்களைத் தவிர்க்க முடியும். தனி மனிதன் தனது சங்கத்தின் கருத்துகட்கு எதிராக அரசு சட்டமியற்றினால் அதனை மீறலாம் என லாஸ்கி கூறினார். அக்கருத்து நடைமுறைப்படுத்தப்பட்டால் சட்டம் ஒழுங்கு

என்பதே இருக்கமுடியாது. எல்லாச் சட்டங்களையும் எல்லா மனிதர்களும் அல்லது சங்கங்களும் ஏற்றுக்கொள்வதில்லை. சில சட்டங்கள் சில சங்கங்களால் ஏற்றுக் கொள்ளப்படலாம். சில சங்கங்களால் எதிர்க்கப்படலாம். அத்தகைய சூழ்நிலையில் விட்டுக்கொடுக்கும் தன்மையின் அடிப்படையில் விஷயங்கள் சுமூகமாக முடிவு செய்யப்படலாம் எனப் பன்முகக் கொள்கையாளர்கள் கருதுகின்றனர். ஆனால், அத்தகைய விட்டுக்கொடுக்கும் நிலையை ஏற்படுத்தவும் ஒழுங்கு செய்யவும் ஒரு அதிகாரம் பெற்ற சக்தி தேவை. அச்சக்தியாகவே அரசு திகழ்கிறது. ஹெகலின் முழுமையான அரசு தற்போது நடைமுறையில் இருப்பதற்கு சாத்தியமில்லை. எனவே இல்லாத கற்பனைப் பேயை விரட்ட பன்முகக் கொள்கைப் பூசாரிகள் பூஜை நடத்துகிறார்கள். அரசு மற்ற எல்லாச் சங்கங்களையும் விட மேலானது. அது எல்லாச் சங்கங்களையும் உள்ளடக்கியது. எனலாம். எத்தகைய அமைப்பினைத் தாங்கள் அமைக்க வேண்டும் என்பது பற்றி பன்முகக் கொள்கையின் ஆதரவாளர்களிடையில் தெளிவான கருத்து இல்லை. அவர்களிடையில் கருத்து வேறுபாடுகளும் காணப்படுகின்றன. அனைவரும் ஒரேவிதமான கருத்தினைக் கூறவில்லை. அதிகாரம் பெற்ற அரசு இல்லாமல் அமைதியான சமுதாயம் அமையமுடியாது என்ற அடிப்படை உண்மையைப் பன்முகவாதிகள் மறந்துவிட்டனர். இன்றைய சமுதாய அமைப்பு மிகவும் சிக்கலானது. பல அமைப்புகளும் குழுக்களும் பல திசைகளில் இழுக்கின்ற சக்திகளை ஒன்றுபடுத்தி ஒரே திசையில் வாகனத்தைச் செலுத்தும் கருவியாக அரசு திகழ்கிறது. பன்முகக் கொள்கையாளர்கள் சர்வதேசச் சட்டத்திற்கு மிக உன்னதமான இடத்தை அளிக்கின்றனர். ஆனால் சர்வதேச சட்டம் வலிமையான சட்டமே அல்ல. அதனை முழுமையாக நடைமுறைப்படுத்தும் வலுவான அமைப்பு இல்லை. ஒரு நாட்டில் சட்டத்தை மீறுகின்றவனைச் சட்டப்படி தண்டிக்கும் வலிமை சர்வதேச நீதிமன்றத்திற்கு இல்லை. ஐ.நா.சபை இறைமை பெற்ற உலக அரசு அல்ல. எந்த முடிவையும் எந்த அரசு மீதும் அதனால் திணிக்கமுடியாது. உலக அமைதி தொடர்பாகவும் இன்று நிலவுகின்ற பல கேள்விக் குறிகளை நிமிர்த்த முடியாமல் அதுவே ஒரு கேள்விக்குறியாக இருக்கும் அமைப்பாக உள்ளது. ஐ.நா.சபை; எனவே பன்முகவாதிகள் சர்வதேசச் சட்டம் எனும் மணக்குதிரையில் பெரும் வெள்ளத்தைக் கடக்க நினைப்பது தவறு.

பன்முகக் கொள்கையிலும் மற்ற கொள்கைகளில் உள்ளது போல் நிறைகளும் குறைகளும் உள்ளன. ஒருமுக அரசு வாதத்தைப் பூதாகரமாக்கித் தனிமனிதச் சுதந்திரத்தையும் பாதிக்கும் வகையில் சிந்தனையாளர்கள் தங்களது கருத்துக்களைக் கூறியதால் அதனை முறியடிக்க எழுந்தது பன்முகக் கொள்கை. அப்பணியில் அது முழுமையான வெற்றி பெறாவிட்டாலும் ஓரளவு அதன் நோக்கம்

நிறைவேறியது எனலாம். எனினும் இரண்டு உலகப் போர்களுக்கும் இடைப்பட்ட காலத்தில் பன்முகக் கொள்கைக்கு முற்றிலும் எதிரான பாசிசக் கொள்கை தோன்றி விரைவில் வளர்ந்தது. பாசிசக் கொள்கை பன்முகக் கொள்கைக்கு எதிரானது.

## 2.4. தொகுப்புரை

இப்பாடப் பகுதியில் அரசின் தோற்றம், வளர்ச்சி அதன் பொருள் பற்றி விளக்கப்பட்டுள்ளது. அரசின் கூறுகள், அரசையும் பிற அமைப்புகளையும் ஒப்பீடு செய்து விவரிக்கப்பட்டுள்ளது. இறைமையின் பொருள், தன்மை, அதன் பண்புகள் ஆகியவற்றைப் பற்றி விரிவாக விளக்கப்பட்டுள்ளது. ஆஸ்டினின் ஒரு முக கோட்பாடு இந்த பகுதியில் நன்கு விவரிக்கப்பட்டுள்ளது.

## 2.5. முக்கிய வார்த்தைகள்

| | | |
|---|---|---|
| 1. முழு அதிகார வரம்பு | — | ஒரு நிலப்பகுதியில் வாழும் மக்கள் அனைவரையும் குறிக்கிறது. |
| 2. கட்டாய அதிகார வரம்பு | — | குடிமகன் தன் விருப்பப்படி முடிவெடுக்கும் அதிகாரம் |
| 3. இறைமை | — | உச்ச அதிகாரம் |

## 2.6. பரிந்துரைக்கப்பட்ட நூல்கள்


1. R.Dahl, Modern Political Analysis, Single wood cliffs N.J.Prentice Hall -1963
2. H.J. Laski, A.Grammer of Politics, London, Allen and unwin – 1948.
3. N.P.Barry, Introduiction to Modern Political Theory, London Macmillan – 1955.


## 2.7. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகளுக்கான பதில்கள்:

| | |
|---|---|
| கேள்வி எண் : 1 | பதில் எண்: 2.1.2. |
| கேள்வி எண் : 2 | பதில் எண்: 2.1.6. |
| கேள்வி எண் : 3 | பதில் எண்: 2.2. |
| கேள்வி எண் : 4 | பதில் எண்: 2.3. |
| கேள்வி எண் : 5 | பதில் எண்: 2.3.2. |

## 2.8. மாதிரி வினாக்கள்

1. அரசு மற்றும் பிற சமுதாய அமைப்பைப் பற்றி எழுதுக.
2. இறைமை பற்றிய பல்வேறு விளக்கங்களையும் அதன் முக்கியத்துவத்தையும் குறிப்பிடுக.

# அலகு — 3

# உரிமைகளும் கடமைகளும்

## அறிமுகம்

சட்ட விதிகளால் உறுதி அளிக்கப்பட்ட சுதந்திரமே உரிமை என்றாகும். அவ்வுரிமைகளைத் தொடர்ந்து பராமரித்து வருவதே அரசின் நோக்கமாகும். மக்களுக்கு உரிமைகள் மறுக்கப்பட்ட போது அம்மக்கள் கட்டுப்பட்டு நடப்பார்கள் என அரசு நினைக்க இயலாது. மக்களுக்கு அரசிடம் உரிமை வேட்கை உண்டு. உரிமைகள் நடைமுறைப்படுத்த அவர்கள் அரசக்கு கோரிக்கை விடுக்கின்றனர்.

மனிதன் தன்னுடைய ஆளுமையை முழுமையாக வளர்ப்பதற்குத் தேவையான நல்வாழ்வைப் பெறுகின்ற நிலையே உரிமை எனக் கூறலாம். இதனால் உரிமை என்பது சமுதாயத்தால் உருவாக்கப்பட்ட பொருளாகும்.

## நோக்கங்கள்

1. உரிமைகள், கடமைகள் பற்றி கற்றறிதல்
2. அரசியல் உரிமைகளை ஆராய்ந்தளித்தல்
3. அடிப்படை உரிமைகளை தெரிந்து கொள்ளுதல்
4. அடிப்படை கடமைகளை பகுப்பாய்வு செய்தல்
5. சமத்துவத்தின் பொருள், தன்மை வகைகளை புரிந்து கொள்ளுதல்.

## வடிவமைப்பு

**மக்கள் உரிமைகள்**

வாழ்வு மற்றும் பாதுகாப்புக்கான உரிமை

அரசியல் உரிமைகள்

பொருளாதார உரிமைகள்

அடிப்படை உரிமைகள்

அடிப்படை உரிமைகளின் பிரிவு

**அரசியல் அமைப்பினால் பரிகாரம் காணும் உரிமை**

அடிப்படைக் கடமைகள்

**சமத்துவம், சமத்துவத்தின் வகைகள்**

சுதந்திரமும் சமத்துவமும்

சுதந்திரத்திற்கும் சமத்துவத்திற்கும் உள்ள ஆதரவு

அரசியல் சுதந்திரமும், பொருளாதார சமத்துவமும்

தொகுப்புரை
முக்கிய வார்த்தைகள்
பரிந்துரைக்கப்பட்ட நூல்
முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவு சோதனை கேள்விகள், பதில்கள்
மாதிரி வினாக்கள்

## 3.1. மக்கள் உரிமைகள்

1. வாழ்வு மற்றும் பாதுகாப்புக்கான உரிமை.
2. இல்லற வாழ்வு உரிமை.
3. சொத்துரிமை.
4. ஒப்பந்த உரிமை.
5. பேச்சுரிமை.
6. சமயவழிபாட்டு உரிமை.
7. தடையின்றி நடமாட மற்றும் சுதந்திர உரிமை.
8. சமத்துவ உரிமை.
9. கல்வி உரிமை.
10. சங்க அமைப்பு உரிமை.

### 3.1.1. வாழ்வு மற்றும் பாதுகாப்புக்கான உரிமை

தனிப்பட்ட மனிதன் ஒவ்வொருவரின் உயிருக்கும் பாதுகாப்பு அரசு அளிக்கின்றது. அப்பாதுகாப்பினை மக்களுக்கு அளிக்கக் காவல்துறையும், மன்றங்களும் உள்ளன. கொலை செய்ய முயற்சித்தல் என்ற குற்றத்திற்கு அரசியல் அமைப்பு கடுந் தண்டனை வழங்குகிறது. கொலையாளிக்கு தூக்குத் தண்டனை விதிக்கப்படுகின்றது. சில கொலை வழக்கு தண்டனை குறைக்கப்பட்டு, ஆயுள் தண்டனையாகக் கருணை கொண்டு அளிக்கப்படுகின்றன.

**இல்லற வாழ்வு உரிமை**

சாதி சம வேறுபாடின்றி வாழ்வுக்கு உகந்த துணையைத் தேடிக் கொள்ள ஒவ்வொருவருக்கும் உரிமை வழங்கப்பட்டு உள்ளது. கணவனே குடும்பத்தின் தலைவன் ஆவான். கணவன், மனைவி இருவரும் குடும்பச் சுமையை ஏற்றுக் கொள்கின்றனர். மணவாழ்வில் நம்பிக்கையின்மை ஏற்படின் சட்டப்படி மணமுறிவுக்கு நீதி மன்றத்தை நாடலாம்.

**சொத்துரிமை**

சட்டத்தின் நியதிப்படி சொத்து சேமிக்கும் எவரையும் தடுக்கக் கூடாது. ஒவ்வொரு தனி மனிதனும் அவரவர் சொத்தினை நுகர அனுமதிக்கப்படுகின்றது.

**ஒப்பந்த உரிமை**

ஒப்பந்தம் குறித்து கில்கிறிஸ்ட் என்பார் தகுந்ததொரு விளக்கம் அளித்துள்ளார். அவ்விளக்கப்படி ஒப்பந்தம் எனப்படுவது இருவரோ அல்லது அதற்கு மேலே நபர்களாலோ, அல்லது குழுக்களுக்கு இடையேயோ சில வழிமுறைகளைப் பின்பற்றி ஒரு நிலையான செயல்படு பொருளினை எட்டுவதற்காக நிகழும் வாணிப உடன்பாடேயாம். ஒப்பந்த முறை வணிகர்களை ஊக்குவிக்கும். இவ்வொப்பந்த முறையால் சமூகம் மேன்மை அடையவும், வளம் காணவும் உதவி செய்யும். சமுதாயத்தையும், நாட்டையும் அழிவுப்பாதையில் கொண்டு செல்லும் ஒப்பந்தங்களை அரசால் மறுக்க முடியும்.

**பேச்சுரிமை**

பேச்சுரிமையே சமுதாய மக்களுக்கு சுதந்திரமான எண்ண ஓட்டங்களையும், அமைதியான வாழ்வையும் தரும். பிறரை இகழ்ந்து கூறல் அடிப்படை விதிகளுக்கு முரணானது. தன் நாட்டிற்கு எதிராகப் பேசுதல், மக்களைக் கலகம் செய்யத் துாண்டுதல் ஆகியவற்றை ஆதரிக்கக் கூடாது.

**சமய வழிபாட்டு உரிமை**

எந்த ஒரு சமயத்தையும் வழிபடவோ, மக்களுக்கு எடுத்துக் கூறவோ உரிமை அளிக்கப்பட்டுள்ளது. சமயச் சடங்குகள் செய்யவும், விழாக்கள் கொண்டாடவும், சமயத்திற்காக பலி கொடுக்கவும் மக்கள் அனுமதிக்கப்பட்டுள்ளனர். ஆனால் இதன் பெயரால் மற்றவர்க்குத் தொல்லைகள் தருதல் கூடாது.

**தங்கு தடையின்றி நடமாட மற்றும் சுதந்திர உரிமை**

இது மக்களிடையே நட்புறவை வளர்க்கும்: சுதந்திர எண்ணத்தைத் துாண்டும்.

**சமத்துவ உரிமை**

சட்டத்தின் முன்னர் அனைவரும் சமம் என்பதனை உறுதி செய்யும்.

**கல்வி உரிமை**

கட்டாயமாகக் கல்வி பயில வேண்டும். கல்வியைப் புகட்ட அரசு இலவசமாக கல்வி அளிப்பதன் மூலம் ஊக்கம் அளித்திடல் வேண்டும். அதற்குத் தகுந்தாற்போல் சட்டமியற்றி சமுதாயத்தில் பின் தங்கிய நிலையிலும், தாழ்ந்த நிலையில் உள்ளவர்க்குச் சலுகைகள் அளித்திடல் வேண்டும்.

**சங்க அமைப்பு உரிமை**

பொதுக் கூட்டங்கள் நடத்தவும், பொதுநலச் சங்கங்கள் அமைத்துக் கொள்ளவும் உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன. தான் சார்ந்துள்ள இனத்திற்காகவும், தான் புரியும் தொழிலுக்காகவும் இன்னும் இது போன்று பிற வகைக்காகவும் சங்கம் அல்லது குழுக்கள் அமைக்க அனுமதி அளிக்கப்பட்டுள்ளது. ஆசிரியர் சங்கம், வழக்குரைஞர் சங்கம் ஆகியன அவைகளில் சிலவாகும்.

### 3.1.2. அரசியல் உரிமைகள்

குடிமக்கள் வாக்கு அளித்தல், முறையீடு செய்தல், தவறு செய்த காலத்து அரசை குறை கூறுதல் போன்றவற்றால் தங்களது அரசியல் உரிமைகளை அனுபவித்து வருகின்றனர். அவ்வாறு பெறப்பட்டுள்ள அரசியல் உரிமைகளைப் பற்றி இங்கே காண்போம்:

**வாக்குரிமை**

மக்களாட்சி அமைப்புநாடுகள் அனைத்திலும் தங்களுக்கு உகந்த உறுப்பினர்களை மக்களே தேர்வு செய்யும் உரிமையே வாக்குரிமையாகும். ஆனால் வாக்கு அளிப்பதற்கு வயது வரம்பு மட்டுமே நாட்டுக்கு நாடு மாறுபடும். இந்தியாவில் 18 வயது வந்த ஆண், பெண் அனைவருக்கும் வாக்குரிமை அளிக்கப்பட்டுள்ளது.

**வேட்பு உரிமை**

தேர்தலில் மக்கள் வேட்பாளராகப் பங்குபெறுதல் மக்களாட்சியின் மாண்பினை உயர்வடையச் செய்யும். நிருவாக இயல்பினை அறியாப் பாமரர்களும் மக்களின் அளவறிய ஆதரவைப் பெற்று அமைச்சராகவும், உறுப்பினர்களாகவும் பங்கு பெறவும் வாய்ப்புள்ளது.

**அரசுப் பணிக்கடன் உரிமை**

தகுதிபெற்ற யாவரும் அரசுப் பணிகளில் ஈடுபடலாம். சமத்துவம் நிலவுவதற்கு அரசு தமது உரிமையைப் பயன்படுத்தி அரசுப்பணியில் சில இடங்களைத் தாழ்த்தப்பட்ட மக்களுக்காக ஒதுக்கீடு செய்யும்.

**முறையீடு உரிமை**

மக்களாட்சி நாடுகளில் மக்கள் தங்களுக்கு இழைக்கப்பட்ட தீங்குகளை அரசு மனுக்கள் மூலமாக அறிவிக்கும் உரிமை பெற்றுள்ளனர். அவர்கள் முறையீட்டினை மேலதிகாரிகளின் கவனத்திற்குக் கொண்டு வருவர்.

**1. குறைகூறும் உரிமை**

அரசின் நிருவாக முறையினை மேம்பாடு செய்யக் குறை கூறும் உரிமை பயனுள்ளதாய் அமையும். அரசாங்கத்தின் குறைகளை மக்கள் அறியச் செய்வதற்காக செய்தித் தாள்கள், பத்திரிக்கைகள், பொதுக் கூட்டங்கள் மூலமாக மக்கள் வெளிக்கொணரும் உரிமையே இதுவாகும். இதன் சிறப்பான விளைவினை ஆளுங்கட்சியினர் இடைத்தேர்தலிலோ, பொதுத் தேர்தலிலோ சந்திக்க நேரிடும்.

## 3.1.3. பொருளாதார உரிமைகள்

ஒரு வளரும் சமுதாயத்தில் பொருளாதார மேம்பாட்டுத் திட்டங்களே முதகெலும்பாக அமையும்.

1. பணி உரிமை.
2. போதிய வருவாய்க்கான உரிமை.
3. குறிப்பிட்ட நேரத்திற்கு வேலைபார்க்கும் உரிமை.

கடின உழைப்பு அதன் விளைவுகளைக் கொண்டதாக இருக்கும். தகுதிக்கேற்ப எல்லா மக்களும் வேலை பார்க்க சந்தர்ப்பம் அளித்தல் அரசின் கடமையாகும். மறைமுகமாக நாட்டின் பொருளாதாரத்தினைப் பெருக்க சொந்தமாகத் தொழில்களை மக்கள் தொடங்கலாம்.

## 3.1.4. அடிப்படை உரிமைகள்

இந்திய அரசியலமைப்பு சமயச் சார்பின்மை, மக்களின் இறைமைத் தன்மை, பாராளுமன்ற முறை, நாடு முழுமையும் வயது வந்தோர்க்கு வாக்குரிமை, குடியுரிமை, அடிப்படை உரிமைகள், அரசின் நெறிமுறைக் கோட்பாடுகள், நீதிமன்றத்தின் சுதந்திரம், மைய ஆட்சிமுறையுடன் கூடிய கூட்டாட்சி முறை இயல்புகளைக் கொண்டுள்ளது. அரசியலமைப்புச் சட்டம் நாட்டின் உயர்ந்த சட்டமாகும் புதிய அரசியல் அமைப்பு இந்தியக் குடிமக்களுக்குப் பல அடிப்படை உரிமைகளை அளித்துள்ளது. ஏனைய நாடுகளில் உள்ள அரசியல் அமைப்புகளில் உள்ளது போல் இவை இந்திய அரசியலமைப்பில் இடம் பெற்றுள்ளன. ஆயினும் இந்திய அரசியலமைப்பில் இடம் பொற்றுள்ள

அடிப்படை உரிமைகள் மிக விரிவாகவும், மற்ற நாடுகளைவிடச் சிறப்புள்ளதாகவும் உள்ளது.

இந்திய அரசியல் அமைப்பின் மூன்றாம் பகுதியில் இவ்வுரிமைகள் கூறப்பட்டுள்ளன. அவைகளை இந்தியாவின் பேருரிமைப் பத்திரம் எனக் குறிப்பிடலாம். அவை நாட்டின் எதேச்சதிகார சக்திகளிடமிருந்து மக்களைப் பாதுகாக்கும் சக்தி வாய்ந்தவை. மேலும் அவை பொதுவாக மக்களுக்கு அடிப்படை சுதந்திரத்திற்கும், அவர்களது உகந்த நலத்தை அடைவதற்குத் தேவையான இன்றியமையா நிலைக்கும் நிச்சயமளிக்கும்.

அடிப்படை உரிமைகள் மீறப்படும் போதோ, அல்லது உரிமைகளைக் குறைக்கும் போதோ, பொதுமக்கள் அதனை உணர்ந்தபோதே உச்ச நீதி மன்றத்திலோ, உயர்நீதிமன்றத்திலே 'ரிட்' வழக்குத் தொடரலாம்.

## 3.1.5. அடிப்படை உரிமைகளின் பிரிவு

நமது அரசியல் அமைப்பில் 7 தலைப்புகளில் பல உரிமைகளைக் கொடுத்துள்ளனர். அவை பின்வருமாறு:

1. சமத்துவ உரிமை (விதி 14 முதல் 18 வரை)
2. சுதந்திர உரிமை (விதி 19 முதல் 22 வரை)
3. சுரண்டல் ஒழிப்பு உரிமை (விதி 23 முதல் 24 வரை)
4. சமய வழிபாட்டு உரிமை (விதி 25 முதல் 28 வரை)
5. பண்பாடு மற்றும் கல்வி உரிமைகள் (விதி 29)
6. சொத்துரிமை 44 வது திருத்தத்தின் படி தற்பொழுது சாதாரண உரிமையாக மாற்றம் செய்யப்பட்டுள்ளது.
7. அரசியல் அமைப்பினால் தீர்வுக்கான உரிமை (விதி 32)

### 1. சமத்துவ உரிமை

சட்டத்தின் முன்னர் சமமென்ற உரிமையும், சமயம், சாதி, இனம், நிறம், பெண்டிர் ஆகியோருக்கு இழைக்கப்படும் அநீதிகளை எதிர்க்கும் உரிமையும், வேலை வாய்ப்புத் தொடர்பாக அனைத்து மக்களுக்கும் சமவாய்ப்புப் பெறுகின்ற உரிமையும் தரப்பட்டுள்ளன.

தீண்டாமையை ஒழித்து, அரசியல் அமைப்பு சட்டத்தின் உரிமையும் அளிக்கப்பட்டுள்ளது. கடைகளிலும், உணவகங்களிலும், கேளிக்கை நிகழ்ச்சி அரங்குகளிலும், நீர் நிலைகளைப் பயன்படுத்துவதிலும், பொது இடங்கள் மற்றும் சாலைகளும் யாவருக்கும் பயன்படும் வகையிலும் சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. மகளிருக்கும், சிறுவர்களுக்கும் சமுதாயத்திலும், பொருளாதாரத்திலும் பின்

தங்கியுள்ளவர்களுக்கும், தாழ்த்தப்பட்டோருக்கும் சிறப்பான சலுகைகள் வழங்கப்பட்டுள்ளன. இதனால் நமது அரசியலமைப்பு மனித இயல்கொண்ட மக்கள் ஆட்சி முறையினைக் குறிக்கோளாகக் கொண்டு விளங்குகிறது.

## 2. சுதந்திர உரிமை

அரசியல் சட்டத்தின் 19ஆம் விதியில் (1) எல்லா மக்கட்கும் பேசும் உரிமை, கருத்துக்களை எடுத்துக்கூறும் உரிமை (2) அமைதியாக, ஆயுதம் எதையும் ஏந்தாமல் பலர் ஒன்றாகக் கூடியிருக்கும் உரிமை. (3) தொழிற் சங்கங்கள் வைத்துக் கொள்வதற்கும், பணியாளர்கள் சங்கம் வைத்துக் கொள்வதற்கும் உரிமை. (4) இந்தியாவின் எப் பகுதியிலும் தடையின்றிப் பயணம் செய்யும் உரிமை. (5) இந்திய நாட்டில் எப் பகுதியிலும் தங்குகின்ற உரிமை. (6) சொத்துக்கள் சேர்க்கவும், விற்கவும் வழங்கப்பட்டுள்ள உரிமை. (7) அலுவல் எதையும் புரியவும், தொழில்கள் யாவற்றையும் நடத்தவும் உரிமை, வாணிகம் செய்யும் உரிமை ஆகியன புரிவதற்கு உறுதியளிக்கப்பட்டுள்ளது.

சுதந்திர உரிமை என்றதால் மக்கள் முழுமையான சுதந்திரத்துடன் இருப்பார்கள் என்று கூற இயலாது. அவர்களுக்குப் பல கட்டுப்பாடுகளும் இருக்கும். இக்கட்டுப்பாடுகளை பலர் தேவையற்ற மிகுதி என்று கூறுகின்றனர். தடுப்புக் காவல் சட்டத்தை இதற்குச் சிறந்த உதாரணமாகக் கொள்ளலாம். இது அரசியல் சட்டத்தில் இடம் பெற்றுள்ளது. இதன் மூலம் யாதொரு வழக்கும் இன்றி ஒருவரை மூன்று மாத காலமும், பாராளுமன்ற ஒப்புதலுடன் மேலும் காலத்தை நீட்டிக்கவும் வகை செய்துள்ளது. இது மக்களுக்கு வழங்கப்பட்டுள்ள சுதந்திர உரிமைக்கு முரணானது. அரசு தனது அரசியல் எதிரிகளை ஒடுக்குவதற்குப் பயன்படுத்தும் ஓர் ஆயுதமே தடுப்புக் காவல் சட்டம் எனவும் சிலர் கூறுவர். இதனால் அரசியல் எதிரிகள் தங்களின் உரிமைகளை நுகர வாய்ப்பின்றிப் போய் விடுகிறது.

ஆயினும் அரசு நாட்டின் முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ள விரோதிகளை திறமையுடன் கட்டுப்படுத்த தேவையுள்ள ஓர் சிறந்த சாதனம் எனவும் கூறுகின்றது. 1951ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்ட பாராளுமன்றச் சட்டத்தால் பேச்சுரிமைக்கும், கருத்துக்களை வெளிக்கூறும் உரிமைக்கும் மேலும் சில கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டுள்ளன. இதன் மூலம் நாட்டின் பாதுகாப்பு, வெளியுறவுக் கொள்கை, பொது அமைதி, கண்ணியம், அறநெறிகள் ஆகியவற்றைத் தொடர்ந்து பராமரிக்கவும்

நீதிமன்ற ஆணைகளை அவமதிப்போர்களைத் தண்டிக்கவும் பல கட்டுப்பாடுகளை விதித்துள்ளது. இச்சட்டத்தில் அவதூறு கூறுவோர், குற்றம் செய்யத் தூண்டுவோர் ஆகியோரைத் தண்டிப்பதற்கும் வகை செய்யப்பட்டுள்ளது.

இச்சட்டத் திருத்தம் கொண்டு வந்தபோது மக்கள் இதனை மக்களாட்சிக்கு எதிராக மேற்கொண்ட ஒரு போர் என்று குறை கூறினர். இதனை அரசினர் மறுத்து அரசியல் சட்டம் 19(a) பிரிவில் உள்ள விதிகளைக் கொண்டு தங்களைப் பாதுகாத்துக் கொண்டனர். ஆயினும் நீதிமன்றங்கள் இதே சட்டப் பிரிவுக்கு வன்முறையைத் தூண்டுவதால் அரசுக்கு எவ்விதமான ஆபத்தும் ஏற்படக்கூடாதென்றும், ஆபத்து ஏற்படுகின்ற கால கட்டங்களில் அரசினர் இவ்விதியைப் பயன்படுத்த முடியும் எனவும் விளக்கம் அளித்துள்ளனர்.

### 3. சுரண்டல் தடுப்பு உரிமை

பெண்டிரை இழிவான தொழில் செய்யவைத்துப் பணம் பெறுவோர், தொழிலாளர்களை அடிமைகளாக்கி வேலை வாங்குவோர் ஆகியோர் சமுதாயத்தினரைச் சுரண்டிப் பணம் பறிப்போர் ஆவர். அவர்களைத் தண்டிக்க இச்சட்டம் வகை செய்கின்றது. 14 வயதுக்குட்பட்ட சிறுவர்களைத் தொழிற்சாலைகளிலும், சுரங்கங்களிலும், அபாயம் நிறைந்த பணிகளிலும் ஈடுபடுத்தக்கூடாது என இச்சட்டம் கூறுகின்றது.

### 4. சமய வழிபாட்டு உரிமை

அரசியல் சட்டம் விதி 25இன் படி பொது அமைதி ஏற்படுகின்ற வகையிலும், அறநெறிக் கோட்பாடுகளை மக்கள் கடைபிடிக்கின்ற வகையிலும், ஆரோக்கியமாக வாழவும், எல்லோரும் மனசாட்சிப்படி சுதந்திரமாக வாழவும், சமய வழிபாடுகளை நடத்தவும், மக்களுக்கு எடுத்துக்கூறவும், சமயத்தைப் பரப்பவும் உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன.

ஆயினும் அரசுக் கல்விக்கூடங்களில் எந்தவொரு சமயத்தையும் பரப்புவதற்குச் சொற்பொழிவுகள் நடத்தக்கூடாதென்றும் சட்டம் கூறுகின்றது. அரசு உதவியின்றித் தனியார் நடத்துகின்ற, அரசினால் அங்கீகாரம் பெற்ற கல்விநிறுவனங்களில் கட்டாயமாக மாணவர்களுக்கு சமயப் பிரச்சாரம் செய்வதோ, சமய வழிபாடு செய்வதோ கூடாது எனவும் கூறுகின்றது.

சமய வழிபாடு தொடர்பாக உள்ள பொருளாதாரம், அரசியல் மற்றும் சமயச் சார்பின்மை அரசினர் முறைபடுத்தவும், கட்டுப்படுத்தவும் அதிகாரம் பெற்றுள்ளனர். மேலும் இந்து சமய வழிபாட்டு ஆலயங்களை இந்துக்களில் எல்லாப் பிரிவினருக்கும், எல்லா மக்களுக்கும் திறந்து விடவும் வகை செய்யப்பட்டுள்ளது.

### 5. பண்பாடு, கல்வி உரிமைகள்

விதி 26இன் தனிப்பிரிவைச் சார்ந்த மக்களின் மொழி, எழுத்து, பண்பாடு ஆகியவற்றைத் தொடர்ந்து போற்றி வருகின்ற உரிமை அளிக்கப்பட்டுள்ளது. அரசால் நடத்தப்பெறும் எந்தவொரு கல்வி நிலையத்திலும் எந்தவொரு இந்தியக் குடிமகனுக்கும் அவனது விருப்பப் பாடத்திற்கு அனுமதி மறுத்தல் கூடாது. அதிகாரம் 30இன்படி சமயம், மற்றும் மொழி காரணமாக சிறுபான்மை இனத்தவராக இருப்போருக்கு கல்வி நிறுவனங்கள் நிறுவுவதற்கும், தங்களின் விருப்பம் போல் நடத்துவதற்கும் உரிமை அளிக்கப்பட்டுள்ளது. அந்நிறுவனங்களுக்கு நிதி ஒதுக்கீடு செய்கையில் அரசினர் எவ்விதப் பாகுபாடும் இன்றி மொழி, சமயம் காரணமாக இருக்கும் சிறுபான்மையினருக்கு அளித்தல் வேண்டும். இவ்வுரிமைகள் சிறுபான்மையினருக்கு முழு பண்பாட்டு சுதந்திரத்திற்கு உறுதி அளிக்கும்.

### 6. சொத்துரிமை

விதி 31இன்படி எந்த ஒரு குடிமகனிடமிருந்தும் அவர்கள் சட்டப்படி சேமிப்பு செய்து வைத்துள்ள சொத்துக்களைப் பறித்தல் கூடாது. பொதுநலத்திற்காகப் பெறப்படுகின்ற தனியார் சொத்துக்களுக்கு இழப்பீட்டுத் தொகையினை வழங்காமல் பெறக்கூடாது. அரசினர் கட்டாயமாக வலிந்து எடுத்துக் கொள்வதற்கு சட்டப்படி அரசுக்கு உரிமையில்லை. தனியார் சொத்துக்களைப் பறிப்பதற்கு அரசு சட்டமியற்றுமானால் சட்டமாகாது.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக்கான கேள்விகள்

அ) உரிமைகள் என்றால் என்ன?

ஆ) வாழ்வு மற்றும் பாதுகாப்புக்கான உரிமை பற்றி விவரிக்க

இ) அடிப்படை உரிமை பற்றி குறிப்பு வரைக.

## 3.2. அரசியல் அமைப்பினால் பரிகாரம் காணும் உரிமை

மேலே கூறப்பட்டுள்ள உரிமைகள் பாதிக்கப்பட்டால் அரசியல் அமைப்பின் மூலம் தீர்வு காண்பதற்கு அதிகாரம் வகை செய்துள்ளது. இவ்வுரிமைகள் அனைத்தும் நீதியை நிலைநாட்ட உருவாக்கப்பட்டுள்ளது. அரசியல் அமைப்பினால் அளிக்கப்பட்ட உரிமைகள் அனைத்தும் பெற ஒவ்வொரு குடிமகனும் உச்ச நீதி மன்றத்தை நாடி உரிமைகளைப் பெறலாம். குடிமக்கள் உரிமைகளைப் பெற ஹேபியஸ் கார்பஸ், மான்டமாஸ், கோ வாரண்டோ, ஷெர்ஷியோரரி ஆகிய ரிட் மனுக்களைத் தாக்கல் செய்யலாம். அதனை உச்ச நீதிமன்றம் விசாரித்து தக்கதொரு தீர்ப்பினை வழங்கும்.

உரிமைகள் சட்டப்படி மக்களுக்குச் சொந்தமானது; அவர்கள் தங்கள் உரிமைகளைக் காத்துக் கொள்ள நீதிமன்றத்தின் உதவியை நாடலாம். ஆயினும் ஒவ்வொரு உரிமையும் பொதுவான சில கட்டுப்பாடுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது.

அடிப்படை உரிமைகள் மிகவும் விவாதத்திற்கு உரியதாகக் காணப்படும் சில உரிமைகளான பேச்சுரிமை, கருத்துக்களை வெளிப்படுத்தும் உரிமை, கூட்டம் கூடுகின்ற உரிமை, எங்கும், எப்போதும் நடமாடுகின்ற உரிமை ஆகியவற்றை அவசர நிலையைப் பிரகடனம் செய்யும் நேரத்தில் குடியரசுத் தலைவர் அவ்வுரிமைகளை நிறுத்தி வைப்பதற்கும் உரிமை உள்ளவர் ஆகின்றார். அக்கால கட்டங்களில் பொது அமைதியைப் பராமரிக்கவும், நாட்டைப் பாதுகாக்கவும் பெரியதோர் முயற்சியினை அரசு மேற்கொள்வதால் தனியாரின் சுதந்திரம் முக்கியமாகக் கருதப்பட மாட்டாது.

### 3.2.1. அடிப்படைக் கடமைகள்

ஒவ்வொரு இந்தியக் குடிமகனும் கீழ்க்கண்ட அடிப்படைக் கடமைகளைப் பாதுகாப்பவராக இருக்க வேண்டும்.

(அ) அரசியல் அமைப்பையும், அதன் கொள்கைகளையும், நிறுவனங்களையும், தேசியக் கொடியையும், தேசிய கீதத்தையும் மதித்துப் போற்றுதல்.

(ஆ) தேசிய விடுதலைப் போராட்டத்திற்காகப் பின்பற்றப்பட்ட கொள்கைகளை நம்பிக்கையோடு உணர்ந்து கடைபிடித்தல்.

(இ) இந்திய தேசிய ஒற்றுமையையும், இறைமைத் தன்மையையும் போற்றிப் பாதுகாத்தல்.

(ஈ) வெளிநாட்டவர் படையெடுப்பின் போது நாட்டைப் பாதுகாக்க தேசியப் படையில் சேரல்.

(உ) மக்களிடம் சகோதரத்துவத்தையும், மன அமைதியையும் ஏற்படுத்த வேண்டும். சமயப்பற்று, மொழிப்பற்று, மாநிலப்பற்று, இன வேற்றுமைகளைக் கடந்து இருத்தல்.

(ஊ) தொன்றுதொட்டு நிலவிவரும் நமது பழமையான கூட்டுக் கலாசார மரபுகளை மதித்துப் பாதுகாத்தல்.

(எ) காடுகள், ஏரிகள், ஆறுகள், விலங்குகள், ஆகியன உள்ளிட்ட அனைத்து இயற்கைச் சூழ்நிலைகளை மேலும் பெருக்கத் திட்டமிடல் மேலும் உயிர்கள்பால் இரக்கம் கொள்ளல்.

(ஏ) சமுதாய மறுமலர்ச்சி, ஆராய்ந்து அறியும் மனநிலை, மனிதாபிமானம், அறிவியல் நோக்கு ஆகியவற்றை வளர்த்தல்.

(ஐ) பொது சொத்துக்களைப் பாதுகாத்தல், வன்முறையைத் தூண்டாதிருத்தல்.

(ஒ) நாடு பல தொழில்கள் தொடங்கவும், சாதனை புரியவும், உயர்நிலை அடையவும், தனியாகவும், மக்கள் கூட்டாகவும் சேர்ந்து பல வழிகளில் முன்னேற்றம் அடைய ஒத்துழைப்புத் தருதல் ஆகியன அடிப்படைக் கடமைகளாக கருதப்படுகின்றன.

## சமத்துவம்

சமத்துவம் என்னும் பொதுவானதொரு சொல் மக்கள் அனைவரையும் பொதுவானதொரு ஒரே சீரான பண்பு முறைகளுடன் நடத்துதல். தகுதி வாய்ந்த அனைவருக்கும் ஒரே விதமான பரிசுகள் வழங்குதல் என்ற பொருளில் உள்ளதாகும். ஆனால் இது சமத்துவம் என்ற சொல்லுக்குக் குறைபாடுள்ள விளக்கமேயாகும். இயற்கையாகவே மனிதர்கள் சமமின்றிக் காணப்படுகின்றனர். எனவே, உண்மையான சமத்துவம் என்பது ஓர் நிறைவேற்றமுடியாத கோட்பாடேயாம். சமத்துத்திற்கு செய்யத்தக்க – செய்யத்தகாத பண்புகள் உள்ளன. செய்யத்தகாத பண்புகளைக் கூறுமிடத்து வரலாற்றின் தொடக்கக் காலம், இடைக்காலம், தற்காலம் ஆகியவற்றில் காணப்படும் சமுதாயத்தின் ஏற்றத்தாழ்வுகளை எதிர்க்கின்ற நோக்கத்துடன் சமத்துவக் கொள்கை தோன்றியது. எல்லாவித வகுப்பினருக்கும் எவ்விதச் சிறப்புச் சலுகைகளும் இல்லாமல் இருக்கச் செய்வதே சமத்துவக் கோட்பாட்டின் விளக்கமாகும். எல்லா மக்களும் சமமான உரிமைகளைப் பெற்று நுகரவேண்டும். “ஒரு நாட்டின் குடிமகன் என்ற முறையில் என்னென்ன உரிமைகளை அவர்கள் நுகர்தல் போன்றே என்னிடமும் அமைதல் வேண்டும் என லாஸ்கி கூறுவார். செய்யத்தகுவன பகுதியில் சமத்துவம் என்பது அனைவருக்கும் போதுமான வாய்ப்புக்ககளை அளித்தல் வேண்டும். மக்களின் ஆற்றலைப் பெருக்க அவர்களுக்கான பயிற்சிகளை அரசு அளித்து அப்பயிற்சியை முழுமையாகப் பெற்றிட வசதிகள் அளித்திட வேண்டும்.

எனவே சமுதாயத்தில் சமத்துவம் நிலவவேண்டுமாயின்:

(1) மக்கள் தங்களின் ஆளுமையை வளர்த்துக் கொள்ளப்போதிய வாய்ப்புக்களை அனைவருக்கும் அளித்திடல் வேண்டும்.

(2) பிறரால் கோரப்படுகின்ற சிறப்புச்சலுகைகள் ஒரு சில வகுப்பாருக்கும், சில குழுக்களுக்கு மட்டும் கொடுக்கலாகாது.

(3) உரிமைகள் அனைவருக்கும் சமமாகப் பகிர்ந்து அளித்திடல் வேண்டும்

(4) அதிகாரத்தைநோக்கிச் செல்லும் சமமானதொரு வாய்ப்பினை எல்லோருக்கும் அளித்திடல் வேண்டும்.

## 3.3. சமத்துவம், சமத்துவத்தின் வகைகள்

நான்கு வகையான சமத்துவ நிலைகள் உள்ளன. அவைகளாவன மக்கள் சமத்துவம், அரசியல் சமத்துவம், பொருளாதார சமத்துவம், சமுதாய சமத்துவம் ஆகும்.

### (அ) மக்கள் சமத்துவம்

உரிமைகள் நுகர்தலில் எல்லா மக்களையும் சமமாகக் கருதுதல் வேண்டும் என்பதே மக்கள் சமத்துவம் எனப்படும். மக்கள் உரிமைகள் நுகர்தலில் மக்களுக்கு மக்கள் வேறுபாடு இருக்கக்கூடாது. ஒரு வகுப்பாளருக்காக மட்டும் சலுகைகள் செய்வதாக சட்டங்கள் இயற்றப்பட்டால் அங்கு சமத்துவம் காண இயலாது.

### (ஆ) அரசியல் சமத்துவம்

மக்கள் தங்களுக்கு உகந்தவர்களைத் தேர்ந்தெடுக்க அவர்களுக்குச் சமமான வாய்ப்புக் கிடைக்கச் செய்வதே அரசியல் சமத்துவம் எனப்படும். எல்லா மக்களுக்கும் கருத்துக்கள் எடுத்துக் கூறுவதற்கு வாய்ப்பளிக்க வேண்டும். அரசுப்பணிகள் ஆற்ற சம உரிமைகள் வழங்குதலும், அரசியல் சமத்துவம் ஆகும். மக்களாட்சி முறையும், வயது வந்தோர்க்கு வாக்குரிமை அளிப்பதும் அரசியல் சமத்துவத்தின் குறிக்கோளாகும். இவ்வுரிமைகள் பல நூற்றாண்டுகளாகப் பல்வேறு வகுப்பைச் சார்ந்த மக்களுக்கு வழங்கப்படாமல் இருந்தது.

### (இ) பொருளாதார சமத்துவம்

நில நிபந்தனைகளைப் பொருளாதார சமத்துவம் விதிப்பதாக உள்ளது.

(அ) மக்களது குறைந்தபட்சத் தேவைகள் தன்னிறைவு பெற அரசு உறுதியளிக்க வேண்டும்.

(ஆ) மக்களின் வருவாயுள் வேற்றுமை இருக்க வேண்டியது அவசியமாயின் அவ்வேற்றுமைகள் நியாயப்படுத்துகின்ற அளவிற்கு அவர்களின் பணி நாட்டு மக்களுக்கு அமைதல் வேண்டும்.

### (ஈ) சமுதாய சமத்துவம்

சாதி, நிறம், சமயம் சமுதாயநிலை ஆகியவற்றில் சமுதாய அந்தஸ்து பெற்றவர்களுக்காகச் சிறப்பான உயர்வு காட்டப்பெறாமல் இருத்தலே சமுதாய சமத்துவம் ஆகும். சம அந்தஸ்து நிலையே சமுதாய சமத்துவத்தின் அடித்தளம் ஆகும். சமுதாய ஏற்றத்தாழ்வுகளை நீக்க சட்டங்கள் இயற்றினால் மட்டும் போதாது. பல வகுப்பைச்

சார்ந்தவர்களைப் பொருளாதார நிலையில் மேம்பாடுறச் செய்தல் வேண்டும்.

### 3.3.1. சுதந்திரமும் சமத்துவமும்

லார்டு ஆக்டன் மற்றும் டாக்குவில் ஆகியோர் சமத்துவமும், சுதந்திரமும் ஒன்றை ஒன்று எதிர்க்கும் குணம் படைத்தது என்கிறார்கள். சுதந்திரம் எனப்படும் தடையற்ற வாணிகம் சமத்துவத்தை அழிக்கும். வலிமையுள்ளவர்களும், அறிவாளிகளும் வாணிபத்தைத் தங்கள் திறத்தால் ஏகபோகமாக்கி அதிகாரத்தையும், பணத்தையும் அதிகமாகச் சேர்த்துவிடுவர்.

**சமத்துவம் இல்லாத சுதந்திரம் பயனற்றது**

சமத்துவம் இல்லையெனில் சுதந்திரம் என்ற சொல் பொருள் அற்றதாம். ஒவ்வொருவரும் தன்னை வளர்த்துக்கொள்ள செய்வதற்காக வாய்ப்புக்கள் அளிக்கப்படல் வேண்டும். வாய்ப்பளிக்காமல் ஒருவரின் திறமையை வீணாக்க அனுமதிக்கக் கூடாது. அதிகாரமும், செல்வமும் தனியாரிடம் குவிப்பதைத் தடுப்பதனையே சமத்துவத்தின் நோக்கமாகக் கொண்டுள்ளது. அதன் மூலமாக சுதந்திரத்திற்கு அடித்தளம் அமைக்கலாம். சுதந்திரம் இல்லாத சமத்துவம் சமுதாயத்தைப் பின் தங்கச் செய்துவிடும். சமத்துவம் இல்லாமல் சுதந்திரம் நிலைத்து இருக்காது.

### 3.3.2. சுதந்திரத்திற்கும் சமத்துவத்திற்கும் உள்ள ஆதரவு

சமத்துவம் எனப்படுவது தனித்து செயல்படும் கோட்பாடு அல்ல. அது சுதந்திரத்தின் அருகில் எப்போதும் இருக்கும். இரண்டுக்கும் பொதுவான இலக்க உண்டு. அதுவே தனி மனிதனின் ஆளமையை வளர்த்தல் ஆகும். மேலும் அவனது ஆற்றலையும் வளாக்கும் அற்புதத் திறம் பெற்றது. இவை இரண்டையும் தனித்துப் பார்க்க இயலாது. ஒவ்வொன்றும் மற்றதற்கு உதவி செய்யும். சுதந்திரம் இல்லையேல், சமத்துவம் இல்லை. சமத்துவம் இல்லையேல் சுதந்திரம் பயனற்றதாகும். எனவே இரண்டும் இணைந்து செல்லும்.

### 3.3.3. அரசியல் சுதந்திரமும், பொருளாதார சமத்துவமும்

மக்களாட்சியினர், மக்கள் சதந்திரம் நாட்டில் உள்ள எல்லா மக்கட்கும் பரவினால் அதுவெ அவர்களது தேவைகளைத் தீர்க்க உதவும் அருமருந்து என நம்பிக்கை கொண்டுள்ளனர். இருந்தபோதிலும் எதிர்பார்த்த நன்மைகள் கிடைக்கவில்லை. தொழிற்புரட்சியின் விளைவாக இங்கிலாந்தில் செல்வங்கள் சிலரிடம் குவிந்து ஏற்றத் தாழ்வுகள்

அதிகமாயின. தொழில் மற்றும் பொருளாதார ஆதாயம் தேட முயற்சிப்போரை அடிக்கடி அரசு மேற்பார்வை செய்து தடுக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. சமுதாயத்தில் உள்ள ஒவ்வொருவருக்கும் அவர்களின் அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்தல் சமுதாயத்தின் கடமையாகும். மேலும் மனிதன் தனது ஆளமையை வளர்த்தக்கொள்ளப் போதிய வாய்ப்புகளும் உள்ளன. பொருளாதார சமத்தவம் இல்லையேல் அரசியல் அதிகாரம் என்பது பொருளாதார அதிகாரத்தின் கைபாவையாக விளங்குமென லாஸ்கி கருத்துத் தெரிவித்து உள்ளார். எனவே அரசியல் சுதந்திரம் உண்மையாகவும் பொருள் பொதிந்ததாகவும் இருக்கவேண்டமாயின் சமுதாயமும் அரசும் மக்களுக்குப் பொருளாதார சமத்துவம் ஏற்பட உறுதி அளித்திடல் வேண்டும்.

அங்கு எல்லோருக்கும் போதிய வாய்ப்புகள் அளித்திடல் வேண்டும். இதனால் தனி மனிதர்கள் தங்களை சுதந்திரமாக வளர்த்துக்கொள்ள ஏதுவாக இருக்கும். சமத்துவமும், சுதந்ததிரமும் வெவ்வேறு கோணங்களில் ஒரே கொள்கை என்பதை யாரும் மறுக்கமுடியாது. எனவே அதனைப் பிரிக்கவும் முடியாது.

### 3.3.4. சமத்துவம் பெறுவதில் தடை

சமத்துவத்தில் பல வகைகள் இருப்பினும் அவை யாவும் செயல்படத்தப்படுவதில்லை. ரபேல் கூறுவதுபோல, “அனைவரும் சமம்” என்பது ஓர் ஆணித்தரமான உண்மையைக் கூறுவதற்காக அல்லாமல் உரிமையைப் பற்றிய ஒரு கூற்றே ஆகும். எல்லோருக்கும் சமமாக பாவிக்கப்பட உரிமையுண்டு. இதன் பொருள் என்னவெனில் மனிதர்கள் சமமானவர்கள்தாம் என்றாலும் அவர்களிடையே பல ஏற்றுத்தாழ்வுகள் உள்ளன. அவர்களுக்கென்று சில அடிப்படைத் தேவைகளும் திறமைகளும் உண்டென்றாலும், அவையாவும் சமமில்லாதவையே ஆகும்.

மனிதர்களின் சம உரிமைகள் குறித்து ரபேல் பின்வரும கருத்துக்களைக் கூறுகிறார்.

1) சமத்துவ உரிமையென்பது சமமாய்ப் பாவிக்கப்படுவதற்கான உரிமையாகும். அதாவது ஒவ்வொருவர் மீதும் அரசு அக்கறை கொள்ளவேண்டும். யாவரையும் புறக்கணிக்கக் கூடாது.

2) அது சமவாய்ப்புக்கான உரிமையாகும். சிறப்பாக கல்வியில் சமவாய்ப்பு அளிக்கப்பட வேண்டும். ஆனால் இவ்வுரிமையை ஒரு சிலரே நன்கு பயன்படுத்திக் கௌ்வர். எனவே சமவாய்ப்பு எனும்

3) பொழுது சமூகப் பின்னணியைச் சாராது திறமையினடிப்படையில் கல்வி வசதிகள் வழங்கப்படவேண்டுமென்றாகிறது.

4) அடிப்படைத் தேவைகளை முழுமையாக நிறைவேற்றிக் கொள்வதற்கான உரிமையே சமத்துவ உரிமையாகும். இதன் பொருள், பொருட்களைச் சமமாகப் பகிர்ந்து கொடுப்பதல்ல. ஒருவன் தான் உயிர் வாழத் தேவையானவற்றைத் தானே சம்பாதித்துக் கொளளாவிட்டாலும், அதனைப பெறுவதற்கு அவன் உரிமை படைத்தவன். ஒவ்வொருவனுக்கும் அவனது குறைந்தபட்சத்

5) தேவைகள் பூர்த்தி செய்யப்படும் உரிமை உள்ளதாக பொது நல அரசு கருதுகின்றது. இதற்கு மாறாக, தேவைகளின் அடிப்படையில் வளங்கள் பகிர்ந்தளிக்கப்பட வேண்டுனெ பொதுவுடமைக் கோட்பாடு கூறுகின்றது. "ஒவ்வொருவனுடைய திறமைக்குத் நகுந்தாற்போல் உழைப்பினைப் பெற்று, தேவைகள் நிறைவேற்றப்படும் என அக்கோட்பாடு கூறுகின்றது. அதாவது, ஒரு பொதுவுடைமைச் சமுதாயத்தில் மக்கள் பொது நலனுக்காக உழைப்பர், தமது சம்பாதியத்தை முழமையாகப் பெறாமல், தமது தேவைகளை மட்டும் பெறுவதில் மகிழ்வர் என்று அக்கோட்பாடு கருதுகின்றது. தேவைகள் ஆளுக்கு ஆள் மாறலாம். ஓர் அறிஞருக்கு நூல்கள் மட்டும் போதும், விஞ்ஞானிக்கு ஆய்வுக்கூடம் போதும் அப்படியெனில், அவர்களுடைய உழைப்புக்கேற்ற சம்பாத்தியம் அவர்களுக்கு அளிக்கப்பட வேண்டியதில்லை என்று பொருளாகி விடும்.

உண்மையான வாய்ப்புச் சமத்துவம் போன்ற ஒன்றை அடைவது மிகக்கடினமாகும். எல்லா பொதுக்கொள்கைகளையும் போன்றே வாய்ப்புச் சமத்துவம் என்று பொதுப்படையாக கூறிவிடுவது அதனை நடைமுறையில் அடைவதைக் காட்டிலும் மிக எளிதான ஒன்று என டோரதி பிக்கிள்ஸ் கூறுகின்றார். வர்யப்புச் சமத்துவத்தை அடைவது ஏன் கடினமென்றால் அது மாறுபட்ட கொள்கைகளைச் சார்ந்துள்ளது. முதலாவதாக ஒருவனுக்குப பிறருக்குள்ளது போல நல்லதொரு சந்தர்ப்பம் வழங்குவதுதான் வாய்ப்புச் சமத்துவம் என்று பொருறாகின்றது. இரண்டாவதாக, அது மனிதர்களைத் தனித்தனியாகப் பிரித்துக் காண்கிறது. ஆனால் அரசியல் நிறுவனங்களோவென்றால் மக்களைப் பல்வேறு வகையினராகவே காண்கிறது. உதாரணமாக எல்லா பெண்கள் அல்லது எல்லா கர்ப்பதிவதிகளுக்கும் இரவு நேர வேலையை அரசாங்கம் தடைவிதிக்கலாம். பதினைந்து வயது வரை எல்லா குழந்தைகளுக்கும் கல்வி கற்க வேண்டுமென்றால் அதற்கான விதிவிலக்குகளும் ஒரு குறிப்பிட்ட சாராருக்கென்றே

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகள்

ஈ) சமத்துவத்தின் பொருள் தன்மை பற்றி விளக்குக.

உ) சுதந்திரத்திற்கும் சமத்துவத்திற்கும் உள்ள ஆதரவை விளக்குக.

ஊ) சமத்துவத்தை பெருவதில் ஏற்படும் தடைகளை விவரிக்க.

அளிக்கப்பட வேண்டும். அரசால் செய்யமுடிவதை விட தனிப்பட்ட சூழ்நிலைகளே வாய்ப்புகளை நிச்சயிப்பதில் முக்கிய பங்கு வகிக்கலாம்.

ஒரு சிலர் கூறுவதென்னவெனில் சமத்துவமின்மையைக் களைய முடியுமென்றால் அது அரசியலைச் சார்ந்து இல்லை: நாளாவட்டத்தில் கொஞ்சமாய் நிகழ வேண்டும். வேறு சிலரோவென்றால் சமூக ஏற்றத்தாழ்வுகளை அரசியல் வழிமுறைகள் மூலம் அகற்றிவிடலாமென்று நம்புகின்றனர். இதுகாறும் தற்காலத்திய ஜனநாயக முற்போக்கு அரசு மேற்கொண்டுள்ள வழிமுறைகள் சரியான மாற்றாக அமையும் எனவும் அவர்கள் கருதுகின்றனர்.

## 3.4. தொகுப்புரை

இப்பாடத்தில் மக்கள் உரிமைகள் கடமைகள் விளக்கப்பட்டுள்ளது. உரிமைகளின் வகைகள், அடிப்படை உரிமைகளின் பிரிவு பற்றியும், சமத்துவத்தின் பொருள், தன்மை, மற்றும் சமத்துவத்தை பெறுவதில் ஏற்படும் தடைகளையும் இப்பாடம் நன்கு விளக்குகிறது.

## 3.5. முக்கிய வார்த்தைகள்

1. பரிகார உரிமை — அரசியலமைப்பில் வழங்கப்பட்ட பாதுகாப்பு, உரிமை
2. சுரண்டல் — இழிவான செயல் செய்ய தூண்டுதல்.

## 3.6. பரிந்துரைக்கப்பட்ட நூல்கள்


1. C.B. Macpherson, Democratic Theory, Eassy in Retrieveal, Dyford, The Claredon press -1977.
2. D.Easto – The Political system, An Inquiry into the state of Political science, New Yark, willey – 1953.
3. R.Dahl, Modern Political Analysis, Englewood Cliffs. W.J.Prentice Hall, 1963.


## 3.7. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவு சோதனை கேள்விகள் பதில்கள்

| | |
|---|---|
| கேள்வி எண்: 1 | பதில் எண்: 3.1 |
| கேள்வி எண்: 2 | பதில் எண்: 3.1.1 |
| கேள்வி எண்: 3 | பதில் எண்: 3.1.4 |
| கேள்வி எண்: 4 | பதில் எண்: 3.3 |
| கேள்வி எண்: 5 | பதில் எண்: 3.3.2 |
| கேள்வி எண்: 6 | பதில் எண்: 3.3.4 |

## 3.8. மாதிரி வினாக்கள்

1. இந்தியக் குடிமக்களின் உரிமைகளையும், கடமைகளையும் விளக்கி எழுதுக.

2. சமத்துவத்தின் பொருள் விளக்கி அதைப் பெறுவதில் ஏற்படும் தடைகளை விவரி.

3. அடிப்படை உரிமைகளை பாதுகாக்க அரசியலமைப்பில் கூறப்பட்டுள்ள பரிகார உரிமையை விளக்கி எழுதுக.

## அலகு — 4

# சட்டம்: நடக்கையியல், பின்தோன்றிய நடக்கையியல் கோட்பாடு

### அறிமுகம்

அரசால் ஆக்கப்பட்டு நடைமுறைப்படுத்தப்படும் கட்டுப்பாடுகள், உரிமைகளின் பாதுகாப்பு ஆகியவற்றின் தொகுப்பே சட்டம் எனப்படும் என்று கிரீன் கூறுகின்றார். நாட்டில் நடைபெறும் மக்களின் நல்வாழ்விற்கும், வளமான மேம்பாட்டிற்கும், அமைதியான வாழ்விற்கும், பாதுகாப்பிற்கும் அரசு சட்டத்தின் மூலமாக முக்கியப் பாதுகாப்பு அளிப்பது கடமையாகிறது. மக்களின் மீது கட்டுப்பாடுகளை விதித்து, ஒழுங்குபடுத்துவதன் மூலம் அரசு மக்களின் அமைதியான வாழ்விற்கு வலுவூட்டுகிறது: முறையான செயல்களுக்கு முக்கியத்துவமளிக்கிறது: சமூக விதிகளுக்கு உயிரூட்டி முறைப்படி கடைப்பிடிக்க வழி வகுக்கின்றது.

சட்டம் சமூக வாழ்வில் அடிப்படையில் காணப்படும் பழைய மரபுகளுக்கு முக்கியத்துவம் அளிக்க இயற்றப்படுகிறது. அவ்வாறு ஏற்படுத்துவதால் நாட்டின் பழைய மரபுகளுக்கு மதிப்புத் தரப்படுகிறது. நாட்டின் அமைப்பு மாநிலங்களுக்கு இடையே அல்லது இடத்திற்கு இடம் அல்லது ஊர்களுக்கிடையே வேறுபாடு காணும். அவ்வாறு ஏற்படும்போது சமூக பழக்க வழக்கங்களில் மாறுபாடுகள் தோன்றலாம். ஆகவே சட்ட அமைப்புகளில் மாறுபாடுகள் தோன்றலாம். ஆகவே சட்ட அமைப்புகள் ஒரே வகையில் வடிவினில் இருந்தால்தான் நாட்டில் ஏற்படும் மக்களின் பிரச்சினைகளைத் தீர்க்க முடியும்.

சமூக விதிமுறைகள் முறையாகப் பின்பற்றப்பட்டால் முன்னேற்றப்பாதைக்கு முட்டுக்கட்டை தோன்றாது: சமூக விதிமுறைகளைச் சில சமயம் முறைப்படி நடைமுறைப்படுத்த முடியாமல் போகலாம். அதனால் அநீதிக்குப் புகழ் மாலை போடப்படும். நியாயத்திற்கு கைவிலங்கு போடப்படும். தர்மத்தின் கண்கள் மூடப்படும். ஆகவே சமூக விதிகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து, உணமையான உருவம் கொடுக்கப்பட வேண்டும் என்றால், சட்டத்தின் வடிவினில் அரசின் கையில் அது இருந்தால் அங்கு பாகிக்கப்பட்டவர் தன் குறைகளைக் கொட்டித் தீர்க்கக் காலம் கிடைக்கும்: முறைப்படி நீதி கிடைக்கும். தவறுகள் திருத்தப்படும். கரையைத் தாண்டா கடலலைகள் போல கட்டுப்பாடுகள் வரம்புக்குள் இருக்கும். மக்களிடம் பயம் இருக்கும். அது மட்டுமின்றி எதிர்காலத்தில் குற்றங்கள் குறையும். இத்தகைய குற்றத்திற்கு எத்தகைய தண்டனை உண்டு என்பதை அறிவதால் மக்களிடையேய

அமைதியான வாழ்வு பெற வழி பிறக்கும். சட்ட அமைப்பு ஒரு நாட்டில் ஒரே சீராகவும், ஒரே மாதிரியாகவும் இருப்பதால் மக்களின் தன்னம்பிக்கையும், செயல்முறைகளும் பாதுகாக்கப்படும்.

## நோக்கங்கள்

சட்டத்தின் பொருள், ஆதாரங்கள் அதன் வகைகளை பகுப்பாய்வு செய்தல்.
நடக்கை கோட்பாட்டின் தோற்றம் மற்றும் அதன் வளர்ச்சியை கற்றறிதல்.
பின்தோன்றிய நடக்கை கோட்பாட்டைப் பற்றி அறிதல்.

## வடிவமைப்பு

சட்டத்தின் ஆதாரங்கள்
சட்டத்தின் வகைகள்
ஆட்சித்துறை சட்டம்
நடக்கையியல் கோட்பாடு தோற்றமும் வளர்ச்சியும்.
பாரம்பரிய அணுகுமுறையும் நடக்கையியல் அணுகுமுறையும்.
பின்நிலை நடக்கையியல்
பொருத்தமான நம்பிக்கைகள்
தொகுப்புரை
முக்கிய வார்த்தைகள்
பரிந்துரைக்கப்பட்ட நூல்கள்
முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகளுக்கான பதில்கள்
மாதிரி வினாக்கள்

## 4.1. சட்டத்தின் ஆதாரங்கள்

வழக்கத்திலும் நடைமுறையிலும், பண்பாட்டின் அடிப்படையிலும் கடைபிடிக்கப்பட்ட வழக்கங்களே சட்டங்களுக்கு ஆதாரம் என்று கூறலாம்.

சட்டத்திற்கு ஆறு ஆதாரங்கள் காணப்படுகின்றன என்று ஹாலந்து என்பவர் கூறுகின்றார். அவையாவன: 1. வழக்காறு 2. நீதிமன்ற முடிவுகள் 3. சமயம் 4. நியாய முறையிலான நீதி 5. அறிவியல் கருத்துக்கள் 6. சட்டமியற்றுதல்

(1) மக்களிடையே நிலவும் சில வழக்கங்கள் சட்டங்களாக ஏற்படுகின்றன. சமுதாயத்தில் தந்தைக்குரிய சொத்துக்கள் முறைப்படி அவரது புதல்வர்களுக்கும், புதல்விகளுக்கும் சுமமாகப் பிரித்துக் கொடுக்கப்பட வேண்டும் என்று வழக்கம் நிலவினால், அதுவே பிற்காலத்தில் அனைவராலும் கடைபிடிக்கப்படும். அந்த

வழக்காற்றினை அடிப்படையாகக் கொண்டு சட்டம் ஏற்படுத்தப்படுகின்றன.

(2) இரண்டாவதாக, வழக்குகள் நடைபெற்று அதன் விளைவாக தீர்ப்பு வழங்கு நீதிமன்ற முடிவுகளும் சட்டங்களுக்கு ஆதாரமாக அமைகின்றன. நீதிமன்றங்களில் பல விவாதங்களுக்குப் பிறகு அளிக்கப்படும் தீர்ப்புகளும் சட்டத்திற்கு ஆதாரங்களாக அமைகின்றன.

(3) சமுதாயத்தின் அடிப்படையிலும் சட்டங்களின் தொகுப்பு ஏற்படுகிறது.

(4) நியாய முறையில் நீதி கொடுக்கவும் சட்டத்திற்கு ஆதாரம் ஏற்படுகிறது. கொலைக் குற்றத்திற்கு தண்டனை ஒரே வகையில் அமையவேண்டிய தேவையில்லை. ஒரு பெண் தன் கற்பைப் பாதுகாக்க கொடியவரின தீய செயலுக்கு கொலைக் குற்றம் புரிய நேர்ந்தால் அதற்கு தண்டனை குறைக்கப்படலாம். நெகிழும் தன்மை உடைய நியாயத் தீர்ப்புகளால் குற்றவாளிகள் மன்னிக்கப்படலாம். திருத்த வழி செய்யலாம்.

(5) திறமைமிகு நீதிபதிகளின் புதிய கருத்துக்களும், சட்ட நிபுணர்களின் அரிய ஆலோசனைகளும் சட்டத்திற்கு ஆதாரமாக அமைக்கப்படுகின்றன.

(6) நாட்டின் கலாச்சாரம், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றிற்கும் முக்கியததுவம் கொடுத்து சட்டமன்றங்களின் மூலமும் சட்டங்கள் அமைக்கப்படுகின்றன.

சட்டங்கள் இயற்றப்படுவதால் தனி மனிதனின் உரிமைகள் பாதிக்கப்படும்: உயரிய லட்சியங்கள் கட்டுப்படுத்தப்படும்: பொதுவாக மக்களின் சுதந்திரம் பாதிக்கப்படும் என்று பயப்பட வேண்டியதில்லை. அரசின் சட்டங்களை மீறுவோர்க்குத் தண்டனை உண்டு. அதே சமயம் மக்களின் சுதந்திரத்திற்குப் பாதுகாப்புத் தருவதற்காகவே சட்டம் அமைக்கப்பட்டுள்ளது. மக்களின் சுதந்திரத்திற்கு முழு உத்திரவாதம் தருவது போல சட்டம அமைக்கப்படுகிறது. உதாரணமாக, இந்தியாவில் அடிப்படை உரிமைகள் (Fundamental Rights) மக்களுக்கு முழுச் சுதந்திரம பலவகைகளிலும் அளிக்க முற்படுவதோடு, உரிமைகள் பறிக்கப்பட்டால் மீண்டும் அதனைப் பெறுவதற்கும் வழிவகை செய்கிறது.

### 4.1.1. சட்டத்தின் வகைகள்

**அரசியலமைப்புச் சட்டம்**

தேசிய சட்டத்தின ஓர் உட்பிரிவே அரசியலமைப்புச் சட்டமாகும். இச்சட்டம் அரசனி அதிகாரத்தை அளவிட்டுக் காட்டுகிறது. அரசியலமைப்புச் சட்டம் எழுதப்பட்டதாகவும், எழுதப்படாததாகவும் அமைந்திருக்கும். இங்கிலாந்து அரசியலமைப்புச் சட்டம் எழுதப்படாதது என்பது குறிப்பிடத்தக்கது. அரசியலமைப்புச் சட்டம் அதற்கென அமைக்கப்படும் வல்லுநர்களால் உருவாக்கப்படும். அரசியலமைப்புச் சட்டம் எப்பொழுதும் ஒருவுகையாக நிலையாக மாற்றப்படாமல் இருக்க வேண்டும் என்பது அவசியமில்லை. நாட்டின் தேவைக்கேற்பவும், அவசியத்திற்கேற்பவும் திருத்தப்படலாம். திருத்தி அமைக்கும் முறையினால் பல மாற்றங்கள் கொண்டு வருவதுடன், மக்களின் சுதந்திரத்திற்கு மேலும் சலுகைகள் கொடுக்க வாய்ப்பு ஏற்படும்: உரிமைகள் பறிக்கப்படாமல் பாதுகாக்கப்படும்.

**சாதாரணச் சட்டம்**

சட்டமன்றத்தால் இயற்றப்படும் இவ்வகைச் சட்டம் பொது மக்களின் வாழ்விற்குப் பாதுகாப்புத் தரும் வகையில் அமைக்கப்படும். இச் சட்டத்தை பொதுச் சட்டம், நேர்முகக் கட்டுப்பாட்டின் கீழோ அல்லது மறைமுகக் கட்டுப்பாடின் கீழோ இருக்கும். தனி மனிதனின் தொடர்புடையது தனியார் சட்டமாகும். அரசு மக்களின் உரிமைகளைப் பறிக்க முற்பட்டாலும் தின மனிதன் வழக்காடித் தன் உரிமையை மீண்டும் பெற வழிவகைகள் உண்டு.

**அவசரச் சட்டங்கள்**

நாட்டில் ஏற்படும் நெருக்கடிக் காலத்திலும், அல்லது வன்முறை முறைகேடுகள் அதிகமாகும் காலத்திலும் நாட்டின் பாதுகாப்புக் கருதியும் நலன் கருகியும் அவசரச் சட்டங்கள் இயற்றப்படலாம். சட்டமன்றம் கூடாமலிருக்கும் பொழுது இதனை நாட்டின் தலைவராக விளங்குபவர் (இந்தியாவில் குடியரசுத்தலைவர்) பிரகடனப்படுத்தலாம். அச் சட்டம் மிகக் குறுகிய காலம்தான் நடைமுறையிலிருக்கும். அதனை நீடிக்க வகை செய்ய வேண்டும் என்றால் குறிப்பிட்ட காலத்திற்குள் சட்ட மன்றம் ஒப்புதல் தர வேண்டும். இல்லையெனில் அது செல்லுபடியாகாது.

**உள் நாட்டுச் சட்டம்**

இது ஒரு நாட்டின் எல்லைக்குள் செல்லுபடியாகும் சட்டமாகும். பிற நாட்டினரையோ பிற நாட்டையோ கட்டுப்படுத்தும் வகையில் இருக்காது.

**வழக்குத் தொடர்புடைய சட்டம்**

வழக்குத் தொடர்புகளை அடிப்படையாகக் கொண்டோ அல்லது நீதிபதிகளின் தீர்ப்புகளைக் கொண்டோ சட்டம் உருவாகுவதற்கு ஒரு முக்கியக் காரணம் உண்டு. அதாவது தெளிவற்ற சட்டங்களுக்கு நீதிபதிகள் பல்வேறு கோணங்களில் விளக்கம் அதாவது தெளிவற் ற சட்டங்களுக்கு நீதிபதிகள் பல்வேறு கோணங்களில் விறக்கம் அளிப்பது; அதன்மூலம் புதிய சட்டங்கள் உருவாகின்றன. இங்கிலாந்தில் இதனைக் காணலாம். இத்தகைய சட்டங்கள் பிற்காலத்திற்கு வழிகாட்டிகளாக அமைகின்றன.

## 4.1.2. ஆட்சித் துறைச் சட்டம்

இது நிருவாகத் தொடர்புடைய சட்டமாகும். பொது நிருவாகிகளின் அதிகாரமும், நடவடிக்கைகளும் இச்சட்டத்தினால் ஒழுங்கு செய்யப்படுகின்றன. அதே நேரத்தில் ஆட்சித துறையினரின் ஆணவப்போக்கினால் தனியார் சுதந்திரம் பறிக்கப்பட்டால் அதனைப் பாதுகாக்க எத்தகைய நடவடிக்கை எடுப்பது என்பதும் குறிக்கப்படும். ஆட்சித்துறையின் செயல்முறைகளை சாதாரண நீதிபதியால் புரிந்து கொள்ள இயலாது. நிருவாக நுட்பங்களுக்கு ஏற்ப நீதி வழங்க ஏற்படும் சிக்கல்களைச் சரிசெய்யத் தனியே ஆட்சித்துறைச் சட்டம் இயற்றப்படுகிறது.

**பன்னாட்டுச் சட்டம்**

பல நாடுகளுக்கு இடையே ஏற்படும் போரைத் தடுத்து அமைதி ஏற்படுத்த பன்னாட்டுச் சட்டம் ஏற்படுத்தப்பட்டது. ஒரு நாட்டின் சட்டம் அந்நாட்டில் அனைவரையும் கட்டுப்படுத்தும்: அதுபோல மக்களும் கட்டுப்படுவர். ஆனால் பன்னாட்டுச் சட்டத்தில், நாட்டினரின் வலிமைக்கேற்ப சட்டம் மாறுபடும்.

# நடக்கையியல், பின்தோன்றிய நடக்கையியல் கோட்பாடு

அரசியல் படிப்பினை அறிவியல் சார்ந்ததாக ஆக்குவதற்கான முயற்சிகள் தற்கால அரசியல் சிந்தனையாளர்களால் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. அரசியல் ஆய்வில் அறிவியல் கருவிகளும் வழிமுறைகளும் பின்பற்றப்படுகின்றன. நடக்கையியல் கோட்பாடு என்பது

அத்தகைய அறிவியல் சார்ந்த ஒரு கோட்பாடாகும். இதன் நிறை குறைகளை இங்கு காணலாம்.

பாரம்பரியமாக அரசியல் ஆய்வில் பின்பற்றப்பட்டு வந்த முறையிலிருந்து மாறுபட்ட ஒரு முறையாக எழுந்ததே நடக்கையியல் கோட்பாடாகும். பாரம்பரியமான முறையில் அரசு மற்றும் அரசாங்கம் போன்ற நிறுவனங்கள் ஆய்வுக்கு உரியவையாக எடுத்துக் கொள்ளப்பட்டன. இந்நிறுவனங்களின் அமைப்பு மற்றும் பணிகளை அரசியல் ஆய்வாளர்கள் ஆய்வு செய்தனர். ஆனால் இந்நிறுவனங்களின் தோற்றத்திற்கு காரணமாகவும், செயற்பாட்டிற்கு அடிப்படையாகவும் திகழ்கின்ற மனிதர்களை அவர்கள் கருத்திற் கொள்ளவில்லை. ஓர் அரசியல் முறையமைவில் வாழுகின்ற மக்கள் அரசியல் அம்முறையமைவின் செயற்பாடு அமைகிறது. எனவே மனிதர்களின் அரசியல் நடக்கையை அடிப்படையாக்க கொண்டு அமைகின்ற ஆய்வினை வலியுறுத்தி இக்கோட்பாடு எழுந்தது.

இக்கோட்பாட்டினைப் பற்றி விளக்குகின்ற வகையில் ராபர்ட்டால் இதனை அரசியல் அறிவியலில் எழுந்துள்ள ஒரு வகையான எதிர்ப்பு இயக்கம் எனக் குறிப்பிடுகிறார். பாரம்பரியமான அரசியல் கோட்பாட்டிற்கு எதிராக இது தோன்றியுள்ளது. இது உண்மைகளையும் அவற்றிற்கு இடையேயான உறவுகளையும் அடிப்படையாகக் கொண்டுள்ள அறிவியல் சார்ந்த அணுகுமுறை ஆகும். நடக்கையியல் அரசியல் அறிவியலை மேலும் அறிவியல் சார்ந்ததாக ஆக்க முயலுகிறது.

### 4.1.3. நடக்கையியல் கோட்பாடு தோற்றமும் வளர்ச்சியும்

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சில அமெரிக்க மற்றும் ரஷ்ய அரசியல் அறிவியலாளர்கள் உளவியல் சார்ந்த அரசியல் ஆய்வுக் கருத்துக்களை வெளியிட்டார்கள். அக்கருத்துக்கள் நடக்கையியல் தோன்றக் காரணமாயின. பென்ட்லி, கிரகாம் வாலஸ், சார்லஸ், மரியம் போன்றவர்கள் அரசியல் நடக்கையியல் கோட்பாட்டின் தந்தைகள் என அழைக்கப்படுகிறார்கள். 20ஆம் நூற்றாண்டின் முதற்கால் பகுதியில் இவர்கள் எழுதிய பல்வேறு நூல்கள் அரசியல் நடக்கையியலை விவரிக்கும் வண்ணம் அமைந்தன. எனினும் ஹெரால்டு லாஸ்வெல் என்பவர் இரு முக்கியமான நூல்களை எழுதி இக்கோட்பாட்டிற்கு முக்கியத்துவம் அளித்தார். அவற்றுள் "அரசியல் யார் — என்ன— எப்போது – எங்கே பெறுகிறார்கள்?" என்ற 1936ல் வெளியிடப்பட்ட நூல் மிகவும் முக்கியமானது. தொடர்ந்து பல்வேறு ஐரோப்பிய அரசியல் அறிவியலாளர்களும் நடக்கையியல் கோட்பாட்டிற்கு முக்கியத்துவம் அளித்தார்கள். இன்று தற்கால அரசியல் பகுப்பாய்வில் அது மறுக்க முடியாத இடத்தைப் பெற்றுள்ளது.

**தன்மைகள்**

நடக்கையியல் கோட்பாட்டின் சில குறிப்பிடத்தக்க தன்மைகளைப் பல்வேறு அரசியல் அறிவியலாளர்களும் விவரித்துள்ளார்கள். இவற்றை நடக்கையியலின் நோக்கங்கள், இயல்புகள், கூறுகள் மற்றும் அனுமானங்கள் என்றும் சிலர் குறிப்பிடுகின்றனர். டேவிட் ஈஸ்டன் இவற்றை நடக்கையியல் கோட்பாட்டின் அறிவார்த்தமான அடித்தளக் கற்கள் என அழைக்கிறார்.

**1. உருவொழுங்குகள்**

அரசியல் நடக்கையியலில் ஒரு குறிப்பிட்ட அனுமானிக்கக் கூடிய செயல் வடிவம் இருக்கிறது என இக்கோட்பாட்டாளர்கள் கருதுகிறார்கள். ஒரே விதமாக மக்கள் நடந்து கொள்கிறார்கள். அத்தகைய ஒரே விதமான நடகைகளை உருவொழுங்குகள் எனலாம். உருவொழுங்குகளைக் கொண்டு பொதுவான முடிவுகளை மேற்கொள்ளுகிற கோட்பாடுகளை வடிக்க முடியும். இக்கோட்பாடுகள் அரசியல் முன்னறிவித்தல்களைச் செய்வதற்குக் கூடப்பயன்படும் என்கின்றனர்.

**2. மெய்ப்பிப்பு**

எந்த விதமான ஆய்விலும் முன்மொழிவுரைகள் (propositions) அமைதல் அவசியம். அத்தகைய முன்மொழிவுரைகள் அறிவியல் புலனாய்வுக்கு உட்பட வேண்டும். புலனாய்வு செய்வதற்கு தொகக்கப்பட்டுள்ள சான்றுகளை சரியானவையா என்று சரிபார்க்கின்ற செயலும் நடைபெற வேண்டும். அரசியல் நடக்கையியலில் தொகுக்கப்படும் உண்மைகள் சரியானபைதானா என மெய்ப்பித்துப் பார்த்தலையே மெய்ப்பிப்பு எனலாம்.

**3. செய்முறைகள்**

எந்தவொரு ஆராய்ச்சியும் சேகரிக்கப்படும் புள்ளிவிவரங்களின் அடிப்படையில்தான் செய்யப்பட முடியும். ஆராய்ச்சியாளர்கள் புள்ளி விவரங்களைச் சேகரிக்க பல்வேறு முறைகளைப் பின்பற்றுகிறார்கள். நடக்கையியலில் புள்ளிவிவரங்களைச் சேகரிக்க அறிவியற்பூர்வமான செயல்முறைகள் பரிந்துரைக்கப்படுகின்றன. மாதிரிக் கூறு திறனாய்வு கணித முறை மாதிரி வடிவங்கள் உருப்போலி பல்யவகை முரண் பகுப்பாய்வு ஆகியவை இக்கோட்பாட்டில் பின்பற்றப்படும் செயல்

முறைகளாகும். இவை அனைத்தும் அரசியல் ஆராய்ச்சியின் அறிவியல் தன்மைக்கு அடிப்படையாக அமைந்துள்ளன.

### 4. தகவு சாராநிலை

தகவுகள் என்பவை அறம் சார்ந்தவை, ஒன்று எப்படி இருக்க வேண்டும் என்ற இலட்சிய வரையறைகள் தகவுகளுக்குக் காரணமாகின்றன. உதாரணமாக ஓர் அரசியல் முறையமைவில் மக்கள் மிகவும் அரசியல் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும் என்பதனையும் தகவுகள் எனலாம். அரசியல் பகுப்பாய்வில் அறம் சார்ந்த கருத்துக்களுக்கோ, தகவுகளுக்கோ இடமில்லை. இது உண்மைகளை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு அமையக் கூடியது என அவர்கள் கருதுகிறார்கள்.

### 5. அளவை செய்தல்

ஆராய்ச்சிக்குப் புள்ளி விவரங்கள் சேகரித்தல் அடிப்படையானது. அவ்வாறு சேகரிக்கப்படும் புள்ளிவிவரங்களைச் சரிபார்த்தலைச் சரியாகச் செய்ய அவற்றை அளவிட்டு பிரித்து வைத்தல் அவசியம். அவ்வாறு புள்ளிவிவரங்களை அளவிடுதலை அளவை செய்தல் என்பர்.

### 6. முறைமைப் படுத்துதல்

ஆராய்ச்சி முறையானதாக இருக்க வேண்டும். முறையான ஆய்வு முழுமையான வெற்றிக்கு வழி வகுக்கும். அரசியல் ஆய்வில் முறைமைப் படுத்துதல் என்பது பகுத்தாய்வு, விளக்கம் மற்றும் முன்னறிவித்தல் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டது.

### 7. செயல் முறை கருதா அறிவியல்

நடக்கையியல் ஆராய்ச்சி தூய்மையானதாக இருக்க வேண்டுமென இக்கோட்பாட்டாளர்கள் கருதுகிறார்கள். அதாவது கோட்பாட்டுக்கான விளக்கம் அளிப்பது என்பது வேறு என அவர்கள் சுட்டிக் காட்டுகிறார்கள். நடக்கையியல் அரசியல் நடக்கையின் யதார்த்ததைப் புரிந்து கொண்டு விளக்கம் அளிப்பது அடிப்படையானது. கோட்பாட்டைச் செயல்முறைப்படுத்துதல் என்பது இரண்டாம் தரமானது. இக்கருத்து வலியுறுத்தப்படுகிறது.

### 8. ஒருமைப்பாடு

அரசியல் அறிவியல் ஒரு முற்றிலும் தனித்துவம் வாய்ந்த படிப்பாகச் செயல்பட முடியாது. மனிதர்கள் சமுதாயத்தின் பல்வேறு அம்சங்களால் பாதிக்கப்படுகிறார்கள். அத்தகைய பாதிப்புக்களை விளக்கி ஆய்வ செய்கின்ற படிப்புப் பிரிவுகளுடன் தொடர்பு கொண்ட படிப்பாகவே அரசியல் அறிவியல் அமையும். சமூக அறிவியல்களான உளவியல்,

சமூகவியல், பொருளாதாரம், மக்கள் இன இயல் போன்றபற்றைச் சார்ந்தே அரசியல் அறிவியல் செயல்பட முடியும். எனவே பிற இயல்களுடனான ஒருமைப்பாட்டினை நடக்கையியல் கோட்பாட்டாளர்கள் வலியுறுத்துகிறார்கள்.

## 4.2. பாரம்பரிய அணுகுமுறையும் நடக்கையியல் அணுகுமுறையும்

மரபு சார்ந்த பாரம்பரியமாக பின்பற்றப்பட்டு வந்த அணுகுமுறையைக் குறை கூறுகின்ற வகையில் நடக்கையியல் அணுகுமுறை எழுந்தது. எனவே நடக்கையியல் அணுகுமுறையில் சொல்லப்பட்ட அடித்தளக்கற்கள் என்ற கருத்துக்களை மரபு சார்ந்த கோடபாட்டாளர்கள் எதிர்த்தார்கள். இவ்விரு பிரிவினருக்கும் இடையில் கடுமையான விவாதங்கள் எழுந்தன. மரபு சார்ந்த அணுகுமுறையை ஆதரித்தவர்கள் கீழ்கண்ட விவாதங்களைக் கூறி நடக்கையியல் அணுகுமுறையை எதிர்த்தார்கள்.

1. அரசியல் நிகழ்ச்சிகளில் உருவொழுங்குகள் என்பவை இடம் பெறுவதில்லை. ஒரு மனிதனின் அரசியல் நடக்கை மற்றொரு மனிதனின் அரசியல் நடக்கையிலிருந்து மாறுபட்டதாய் அமைகிறது. மனிதனின் நடக்கையைச் சரியான நடுநிலை நோக்குடன் ஆய்வு செய்வது கடினம். மேலும் மனிதனின் அரசியல் நடக்கை பரிசோதனைக்கு உட்படக்கூடியதல்ல.

2. அரசியலில் கூர்ந்து கவனித்து சேகரிக்கப்படக்கூடிய சான்றுகள் குறைவானவையே எந்த ஒரு மக்கள் கூட்டமும் வெற்றிடத்தில் செயல்படுவதில்லை. அவர்களது செயற்பாட்டின் மீது சமுதாய மற்றும் பண்பாட்டுத் தாக்கங்கள் அதிகம். எனவே மெய்ப்பிப்பு என்பது நடைமுறையில் சாத்தியமானதல்ல.

3. சமூக அறிவியல்களில் புள்ளி விவரங்கள் நடுநிலை நோக்குடன் அமைவதில்லை. செய்முறைகளுக்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுத்தாலும் ஆராய்ச்சியின் நோக்கம் தோற்றுப் போகலாம்.

4. அளவை செய்தல் என்று செயற்படுத்தப்பட முடியாதது. அது அளக்க முடியாதவற்றை அளவை செய்ய மேற்கொள்ளப்படும் முயற்சி, முடியாதவற்றை செய்ய இயலும் வீணாண முயற்சியில் நடக்கையியல் கோட்பாட்டாளர்கள் ஈடுபடுகிறார்கள்.

5. தகவுகள் சாராத அரசியல் அம்சம் எதுவும் இருக்க முடியாது. எல்லா அரசியல் பிரச்சினைகளிலும் அறம் சார்ந்த மற்றும் தகவு சார்ந்த கருத்துக்கள் எழுவது இயல்பு. தகவுகள் சரியானவையா என்பதை வேண்டுமானால் கணிக்கலாம். எனவே தகவுகள் தொடர்பான நடக்கையியல் கோட்பாட்டுக் கருத்தும் சரியானது அல்ல.

6. முறைமைப் படுத்தலின் மூலமாக மிகப்பெரும அளவிலான பொதுமைப்படுத்துதல் என்பது சமூக அறிவியலில் இயலாதது என்பதும் சுட்டிக் காட்டப்படுகிறது.

7. செயல்முறை கருதா அறிவியல் எனும் கருத்து நடக்கையியல் கோட்பாட்டாளர்களின் பகற்கனவு. செயல்முறை இல்லாத கோட்பாடு எவ்விதப் பயனும் அற்றது. ஒரு கோட்பாடு நடைமுறைப் படுத்தலின் மூலம் பிரச்சினைகளுக்கு தீர்வு காண வகை செய்ய வேண்டும்.

8. ஒருமைப்பாடு என்பதற்கும் அளவிற்கதிகமான முக்கியத்துவத்தை நடக்கையியல் கோட்பாட்டாளர்கள் அளித்துள்ளனர். இத்தகைய குறைகளைச் சுட்டிக் காட்டி நடக்கையியல் கோட்பாட்டின் அடித்தளங்களை ஆட்டிப் பார்த்தார்கள் ாரம்பரியக் கோட்பாட்டாளர்கள். எனினும் இவ்விரண்டு கோட்பாடுகளும் சமாதானச் சகவாழ்வு மேற்கொள்ள வழி வகுத்துக் கொண்டன.

**நிறைகள்**

1. நடக்கையியல் கோட்பாட்டாளர்கள் கோட்பாட்டை உருவாக்குவதில் குறிப்பிடத்தக்க வெற்றி கண்டுள்ளார்கள்.

2. அறிவு அறிவதற்காக என்ற கொள்கையில் அவர்கள் செயற்பட்டு ஓரளவு வெற்றி கண்டுள்ளனர்.

3. ஆராய்ச்சிக் கருவிகளும், செய்முறைகளும் மேம்பாடடைந்துள்ளன.

4. உள்ளடக்கப் பகுத்தாய்வு, பேட்டி காணல். புள்ளி விவரப் பகுத்தாய்வு போன்ற அறிவியற் பூர்வமான ஆராய்ச்சி வழிமுறைகள் பின்பற்றப்படுகின்றன.

5. அரசியல் ஆராய்ச்சியில் நடுநிலை நோக்கு குறிப்பிடத்தக்க அளவு பின்பற்றப்படுகிறது.

6. புள்ளி விபரச் சேகரிப்பிற்கும், பகுத்தாய்விற்கும் முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது.

7. அரசியல் உண்மைகளுக்கிடையிலான உறவுகளைப் புரிந்து கொள்ள இவ்வணுகுமுறை வகை செய்கிறது.

**குறைகள்**

நடக்கையியல், கோட்பாட்டில் சில குறைகள் அல்லது வரையறைகள் காணப்படுகின்றன. வான்பீ, சிபிலி மற்றும் கிருஸ்டியன் பே ஆகியோர் இதன் குறைகளையும், வரையறைகளையும் சுட்டிக் காட்டுகின்றனர்.

1. நடக்கையியல் கோட்பாட்டில் பரப்பு மிகவும் குறுகியது. அது தனிமனித அல்லது குழுவின் அரசியல் நடக்கையைப் பற்றி மட்டுமே கவனம் செலுத்துகிறது. எனவே அரசியல் நிறுவனங்கள் முக்கியத்துவம் இழக்கின்றன.

2. நடக்கையியல் அளவிற்கு அதிகமாக பிற சமூகவியல்களின் தாக்கத்தைப் பெற்றுள்ளது. இதன் காரணமாக மேக்ஸ் வெபர் மற்றும் டால்காட் பார்சன்ஸ் ஆகியோர் வலியுறுத்தும் சமுதாய அணுகுமுறை பின்தள்ளப்படுகிறது. நடைமுறையில் நடக்கையியல் கோட்பாட்டாளர்கள் செய்முறை முன்னேற்றத்திற்கு அளித்ததை விட கோட்பாடு உருவாக்கத்திற்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. ஆனால் அது அரசியலில் ஒரு பகுதி மட்டுமே.

3. அரசியல் நிறுவனங்கள் உதாசீனம் செய்யப்பட்டது போன்று அரசியல் மாற்றம், முரண்பாடு, வன்முறை போன்றவற்றைப் பற்றிய ஆய்வும் பின்தள்ளப்பட்டுள்ளது.

4. நடக்கையியல் அணுகுமுறை தகவுசாரா அணுகுமுறை என்பது ஏற்றுக்கொள்ள முடியாதது. ஆராய்ச்சியாளர் தனது ஆய்விற்கான பொருளைத் தேடும்போதே தகவுகளுக்கு முக்கியத்துவம் அளிக்கிறார்.

5. வளரும் நாடுளில் காணப்படும் அரசியல் முறையமைவுகள் பற்றிய ஆய்வுக்கு உரிய முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை.

### 4.2.1. பின்நிலை நடக்கையியல்

நடக்கையியல் கோட்பாடு நடைமுறைக்கு வந்த பின்னர் பல்வேறு அரசியல் அறிவியலாளர்கள் அக்கோட்பாட்டின் மீதான அதிருப்திகளை வெளியிட்டார்கள். இவ்வாறு நடக்கையியலுக்கு மாறுபட்டு எழுந்த கோட்பாட்டை நடக்கையியலுக்குப் பின்நிலை என்று கூறலாம். இத்தகைய இயக்கத்திற்கு ஆதரவளித்த அரசியல் அறிவியலாளர்கள் அரசியலை ஒரு தீவிரமான அறிவியல் பாடமாக மாற்றமேற்கொள்ளப்பட்ட முயற்சியை

எதிர்த்தார்கள். அமெரிக்கப் பல்கலைக்கழகங்களில் மேற்கொள்ளப்பட்ட பல்வேறு நடக்கையியல் ஆராய்ச்சிகள் கடுமையாக விமர்சிக்கப்பட்டன. ஏற்கனவே நடக்கையியல் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்த ஆராய்ச்சியாளர்கள் தாங்கள் பொருத்தமற்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டிருப்பதாக நினைத்தார்கள். அவர்களில் பலரே நடக்கையியல் கோட்பாட்டிற்கு எதிராகத் திரும்பினார்கள். எனவே நடக்கையியலில் ஒரு புரட்சி ஏற்பட்டது அல்லது ஒரு சீர்திருத்த இயக்கம் ஏற்பட்டது எனச் சொல்லலாம்.

### 4.2.2. பொருத்தமான நம்பிக்கைகள்

டேவிட் ஈஸ்டன் ஒரு முக்கியமான நடக்கையியல் கோட்பாட்டு அறிவியலாளராக இருந்தார். நடக்கையியல் ஆய்வில் ஏற்பட்ட அனுபவங்களின் காரணமாக அவர் ஒரு பின்நிலை நடக்கையியலாளராக மாறினர். நடக்கையியலைச் சீர்திருத்த வேண்டும் என்று உணர்ந்து அதற்கேற்ற மாற்றங்களை ‘பொருத்தமான நம்பிக்கைகள்’ என்ற கோட்பாடாக வெளியிட்டார். அவரது கருத்துப்படி பின்நிலை நடக்கையியல் என்பது அரசியல் அறிவியலை முன்னோக்கி கொண்டு சென்றுள்ளது. அது எதிர்காலத்தை கவனத்தில் கொண்டுள்ள கோட்பாடாகும். பின்நிலை நடக்கையியல் பொருத்தம் மற்றும் செயல் ஆகியவற்றிற்கு அதிகமான முக்கியத்துவம் அளிக்கிறது. ‘பொருத்தமான நம்பிக்கைகள்’ என்பதில் அவர் கூறியுள்ள கருத்துக்கள் பின் வருமாறு:

1. ஆராய்ச்சியில் ஆராய்ச்சிக் கருவிகளை விட ஆராய்ச்சியின் நோக்கமே முக்கியமானது. ஆராய்ச்சி பொருள் உள்ளதாகவும், பொருத்தமானதாகவும் இருக்க வேண்டும்.

2. ஆராய்ச்சியில் சமுதாய மாற்றத்திற்கு முக்கியத்துவம் அளிக்கப்பட வேண்டும்.

3. அரசியல் அறிவியல், அரசியலில் உள்ள உண்மை நிலைகளைக் கருத்தில் கொள்ள வேண்டுமேயொழிய தெளிவில்லாத கருத்துக்களின் மீது கவனம் செலுத்தக் கூடாது.

4. அரசியல் படிப்போடு பிரிக்க முடியாவண்ணம் இணைந்திருப்பவை தகவுகள். அத்தகவுகளுக்கு உரிய அங்கீகாரம் அளிக்கப்பட வேண்டும்.

5. அரசியல் அறிவியலாளர்கள் நடுநிலை நோக்கு என்ற பெயரில் சமுதாயப் பிரச்சினைகளிலிருந்து ஒதுங்கி இருக்கக் கூடாது. நடப்புச் சமுதாயப் பிரச்சினைகளை அரசியல் பின்னணியில் ஆய்வு

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகள்

அ) சட்டத்தின் பொருள் அதன் ஆதாரங்களை விளக்கி எழுதுக.

ஆ) ஆட்சித்துறை சட்டம் என்றால் என்ன?

இ) நடைக்கையில் கோட்பாடு பற்றி ஒரு சிறுகுறிப்பு வரைக.

ஈ) பின்நிலை நடக்கையில் என்றால் என்ன?

செய்வதன் மூலமாகப் பல பொருத்தமான விஷயங்களை அவர்கள் பகுத்தாய்வு செய்ய முடியும்.

6. அரசியல் அறிவியலாளர்கள் தங்கள் அறிவைச் செயல்முறைப் படுத்த முடியும்.

7. பல்கலைக் கழகங்கள் போன்ற அமைப்புகள் சமுதாயத்தைச் சரியான வழியில் இட்டுச் செல்கின்ற பணியினை மேற்கொள்ள வேண்டும்.

நடக்கையியல் 20ஆம் நூற்றாண்டின் முக்கியமான அரசியல் கோட்பாடாக எழுந்தது. அரசியல் படிப்பை ஒரு முழுமையான அறிவியலாக ஆக்க அது முனைந்தது. அமெரிக்க பல்கலைக் கழகங்களும், பேராசிரியர்களும் அதற்கு அதிகமான முக்கியத்துவம் அளித்தனர். மிகக் குறுகிய காலத்தில் நடக்கையியல் கோட்பாட்டை ஆதரித்தவர்களே அதில் உள்ள சில குறைகளை சுட்டிக் காட்டிச் சில மாற்றங்களைப் பரிந்துரைத்தனர். இதுவே பின்நிலை நடக்கையியல் எனக் கூறப்படுகிறது. இதன் எதிர்காலம் காலத்தால் முடிவு செய்யப்படும்.

## 4.3. தொகுப்புரை

இப்பாடத்தில் சட்டம் அதன் ஆதாரங்கள் மற்றும் சட்டத்தின் வகைகள் விளக்கப்பட்டுள்ளது. நடக்கையியல் கோட்பாடு, பின் தோன்றிய நடக்கையின் கோட்பாடும் அதன் அணுகுமுறைகளும் விவாதிக்கப்பட்டுள்ளது.

## 4.4. முக்கிய வார்த்தைகள்

1. நடக்கையியல் — நடத்தையை பற்றிய இயல்
2. உருவொழுங்குகள் — ஒரேவிதமான நடத்தை
3. மெய்ப்பிப்பு — ஒரு விஷயத்தை நிரூபித்தல்
4. தகவு — அறம் சார்ந்தது.

## 4.5. பரிந்துரைக்கப்பட்ட நூல்கள்

1. A.Brech, Political Theory, The Times of India Press – 1965.

2. C.B. Macpherson, Democratee theory, Essay in Retrieval, Oxford, The Clarendon Press – 1977.

3. S.Ramaswamy – Political Ideas and concepts, Delhi Macmillan – 2007.

## 4.6. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவு கேள்விகளுக்கான பதில்கள்

| | |
|---|---|
| கேள்வி எண் 1 | பதில் எண். 4.1 |
| கேள்வி எண் 2 | பதில் எண். 4.1.1 |
| கேள்வி எண் 3 | பதில் எண். 4.1.2 |
| கேள்வி எண் 4 | பதில் எண். 4.1.3 |
| கேள்வி எண் 5 | பதில் எண். 4.2.1 |

## 4.7. மாதிரி வினாக்கள்

1. சட்டத்தின் வகைகள் பற்றி விளக்கி கூறுக.
2. நடக்கையியல் தோற்றம் மற்றும் வளர்ச்சி பற்றி எழுதுக
3. பின் தோன்றிய நடக்கையியல் பற்றி ஒரு கட்டுரை எழுதுக.
4. நடக்கையியல் தன்மைகளைப் பற்றி விளக்குக.

# அலகு — 5
# அரசியல் கலாச்சாரம்

## அறிமுகம்

தற்கால அரசியல் அறிவியலில் பல்வேறு கோட்பாடுகள் இடம் பெறுகின்றன. அவற்றுள் அரசியல் கலாச்சாரம் என்பதும் ஒன்றாகும். கலாச்சாரம் அல்லது பண்பாடு என்பது சமுதாயம் மற்றும் வரலாற்றுடன் தொடர்புடைய சொல்லாகும். ஆனால் ஒரு நாட்டின அரசியலுடன் தொடர்புடையதாக இங்கு பயன்படுத்தப்பட்டுள்ளது. அரசியல் கலாச்சாரம் எனும் சொற்றொடரை 1956இல் G. அல்மாண்ட் என்பார் பயன்படுத்தினார். சாமுவேல் பீர் மற்றும் ஆதம் உலாம்ஸ் ஆகியோரும் இதனைப் பயன்படுத்தினர். ஒவ்வொரு நாட்டின் அரசியல் கலாச்சாரமும் சில குறிப்பிட்ட தன்மைகளுடன் சார்ந்து அமைகிறது. அரசியல் கலாச்சாரம் என்பதன் பொருள், வகை மற்றும் பிற அம்சங்களையும் இங்கு காணலாம்.

## நோக்கங்கள்

1. அரசியல் காலச்சாரம் அதன் வகைபாடுகளை அறிதல்
2. சமூக மயமாதல் அதன் முகாண்மைகளை கற்றறிதல்.

## வடிவமைப்பு

அரசியல் கலாச்சாரம் அதன் பொருள்
அரசியல் கலாச்சாரத்தின் வகைப்பாடுகள்
அரசியல் சமூகமயமாதல்
அரசியல் சமூகமயமாக்குதலின் முகாண்மைகள்.
சமூகமயமாக்குதலும் மாற்றமும்
அரசியல் சமூகமயமாக்கலும், சமுதாய முறையமைவுகளும்
தொகுப்புரை
முக்கிய வார்த்தைகள்
பரிந்துரைக்கப்பட்ட நூல்கள்
முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவு கேள்விகளுக்கான பதில்கள்
மாதிரி வினாக்கள்

## 5.1. அரசியல் கலாச்சாரம் அதன் பொருள்

சமுதாய நோக்கங்கள் பற்றிய பயிற்சியே அரசியல் கலாச்சாரம் என அல்மாண்ட் மற்றும் வெர்பா ஆகியோர் விளக்கம் அளிக்கின்றனர். சமுதாயத்தை உருவாக்கும் அங்கமாக ஒவ்வொரு மனிதனும்

திகழ்கின்றான். எதைச செய்யலாம் எதைச் செய்யக்கூடாது என்று சில வரையறைகள் வடிக்கப்படுகின்றன. இவற்றைப் பயில்வதன் மூலம் மக்களின் மனப்பாங்கின் ஆற்றுப்பயிற்சியை அறிந்து கொள்ளலாம். கலாச்சாரம் என்பது சமூகவியல் அறிவியலாளர்கட்கு ஆர்வமூட்டும் விஷயமாகும்.

அரசியல் கலாச்சாரம் என்பது மக்களுக்கு அரசியல் முறையமைவு மற்றும் அதன் செயற்பாடு தொடர்பான ஆற்றுப் பயிற்சியைக் குறிக்கும். ஆற்றுப் பயிற்சி என்பது உறவு பற்றிய அறிவைக் குறிக்கும். உளவியல் ஆற்றுப்பயிற்சி என்பது தனிமனிதனுக்கும் இடையிலான உறவு பற்றிய அறிவைக் குறிக்கும். அரசியல் ஆற்றுப்பயிற்சி என்பது தனி மனிதர்களுக்கு அரசியல் முறையமைவிற்கும் இடையிலான உறவைப் பற்றிய அறிவைக் குறிப்பதாகும். ஒவ்வொரு அரசியல் முறையமைவிலும் அதன் உறுப்பினர்களாக விளங்கும் தனி நபர்கள் தங்களது கலாச்சாரம் எனலாம். இத்தகைய விளக்கத்தினை அல்மாண்ட் மற்றும் போர்வெல் ஆகியோர் கூறுகின்றனர்.

மேற்கத்திய அரசியல் சிந்தனையாளர்கள் அரசியல் கலாச்சாரம் சில கூறுகளைக் கொண்டது என்கின்றனர். தகவுகள் நம்பிக்கைகள் மற்றும் உணர்வுப் பூர்வமனப்பாங்குகள் ஆகியவையே அக்கூறுகளாகும். மேற்யுகூறப்பட்டுள்ள கூறுகள் ஓர் அரசியல் முறையமைவில் எவ்வாறு அமைந்துள்ளன என்பதைப் பொறுத்து அரசியல் கலாச்சாரம் உருவாகிறது. ஒவ்வொரு முறையமைவிலும் சில தகவுக்ள உள்ளன. சான்றாக, பிரிட்டனின் அரசியல் முறையமைவில் சுதந்திரமான தேர்தல்கள், அமைச்சரவையின கூட்டுப் பொறுப்பு மற்றும் சுதந்திரமான நீதித்துறை ஆகியவற்றைத் தகவுகள் எனலாம். சுவிட்சர்லாந்தின் அரசியல் முறையமைவில் நேரடி மக்களாட்சி, தனி நபருக்கு முக்கியத்துவம் அளிக்காத நிர்வாகத்துறை மற்றும் முறைப்படுத்தப்பட்ட அரசியல் கட்சிகள் ஆகியவை தகவுகள் எனலாம். இதுபோன்று ஒவ்வொரு முறையமைவிலும் சில தகவுகள் அமைந்துள்ளன.

ஒவ்வொரு நாட்டிலும் மக்களிடம் சில அரசியல் நம்பிக்கைகள் இடம் பெறுகின்றன. இங்கிலாந்தின் மகக்ள் அரசியல் பழமைவாதத்தில் நம்பிக்கையுடையவர்கள். சுவிட்சர்லாந்தின் மக்கள் நடுநிலைக் கொள்கையில் நம்பிக்கையுடையவர்கள். அமெரிக்க மக்கள் தங்கள் அரசியல் சுதந்திரம் தொடர்பான நம்பிக்கைகளைக் கொண்டுள்ளனர். சுட்டிக்காட்டுவது கடினம். தகவுகள் நம்பிக்கைகளின் அடித்தளத்தில்தான் எழுகின்றன.

ஒவ்வொரு அரசியல் முறையமைவிலும் வாழுகின்ற மக்கள் தங்களுக்கெனச் சில உணர்வுகளைப் பெற்றுள்ளனர். ஒரு

முறையமைவிலும் வாழும் மக்கள் அரசியலில் மற்றும் சமுதாய பிரச்சினைகளில் சகிப்புத்தன்மையுடன் நடந்து கொள்வர். வேறுசில முறையமைவுகளில் மக்கள் பொதுப் பிரச்சினைகளில் உடனடியான எதிர்ப்பை அல்லது எழுச்சியைக் காட்டுபவர்களாக இருக்கலாம். உளப்பாங்கான உணப்வுகள் காலத்திறக்க காலம் மாறுபட்டும் அமையலாம். இவை மக்களுக்கு மக்கள் மாறுபடுகின்றன.

மேற்கூறப்பட்ட மூன்று கூறுகளும் அரசியல் கலாச்சாரத்தை உருவாக்குகின்றன. இக்கூறுகள் வரலாற்று, புவியியல், சமுதாய மற்றும் பொருளாதார அம்சங்களைச் சார்ந்து அமைகின்றன. இங்கிலாந்தின் வரலாற்றுப் பாரம்பரியத்தைச் சார்ந்து அங்கு வரையறுக்கப்பட்ட முடியாட்சி நிலவுகிறது. அமெரிக்க மக்களின் பொருளாதார மற்றும் சமுதாய அம்சங்கள் அவர்களது அரசியல் நம்பிக்கைகள் மற்றும் தகவுகளில் எதிரொலிக்கின்றன. அரசியல்ட கலாச்சாரத்தை உருவாக்குவதில் வரலாற்று வளர்ச்சி முக்கியப் பங்கு வகிக்கின்றது. ஒரு நாடடின் புவியியல் பண்புகளும் பொருளாதார நிலையும் அம்மக்களின் அரசியல் கலாச்சாரத்தை நிர்ணயிப்பதில் முக்கியப் பங்கு வகிக்கிறது. இந்தியாவில் நிலவும் ஏழ்மை மற்றும் எழுத்தறிவின்மை ஆகியவை இந்திய மக்களின் அரசியல் கலாச்சாரத்தை மிகவும் பாதிக்கின்றன.

### 5.1.1. அரசியல் கலாச்சாரத்தின் வகைபாடுகள்

அரசியல் கலாச்சாரத்தைச் சில வகைகளாக வகைப்பாடு செய்கின்றனர். அல்மாண்ட் மற்றும் வெர்பா அதனை மூன்று வகைகளாகப் பிரிக்கின்றனர். அவையாவன:

**குறுகிய அரசியல் கலாச்சாரம்**

ஒவ்வொரு அரசியல் முறையமைவிலும் தனிமனிதனின் பங்கு முக்கியமானது. ஒவ்வொரு தனிமனிதனும் முதலில் தன்னை அறிந்து கொள்ளவேண்டும். அரசியல் முறையமைவில் தனது பங்கினை அறிந்து கொள்ள வேண்டும். ஒரு மனிதருக்குப் பல பங்குகள் இருக்கலாம். ஒரு சாதாரண மனிதன வெறும் வாக்காளர் என்ற பங்கினை மட்டும் பெற்றிருக்கலாம் ஓர் அரசியல் தலைவர் தனது கட்சியின் தலைவர், சட்ட மன்ற உறுப்பினர் மற்றும் அமைச்சர் ஆகிய பல பங்குகளை வகிக்கலாம். ஒவ்வொரு பங்கிலும் அவர் செய்ய வேண்டிய பணிகளை அவர் அறிந்திருக்க வேண்டும். ஒவ்வொரு அரசியல் முறையமைவிலும் உள்ளீட்டு வடிவமைப்பு உள்ளது. சட்டமியற்றச் சட்டமன்றம், சட்டத்தை நடைமுறைப்படுத்த நிர்வாகத்துறை, நிதிபரிபாலனம் செய்ய நீதித்துறை ஆகிய மூன்று வடிவங்களை மட்டுமே சிலர் அறிந்திருப்பர். உள்ளீட்டு அமைப்பு பற்றிக் கூட அறிந்திராத மக்கள் உள்ள கலாச்சாரத்தைக் குறுகிய கலாச்சாரம் எனலாம். குடியேற்றப் பகுதிகளின் மக்களிடையே

இத்தகைய அரசியல் கலாச்சாரமே நிலவுகிறது. சட்டங்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும் என்பதைத்தவிர வேறு எதனையும் இத்தகைய மக்கள் அறிந்திருப்பதில்லை.

**கீழ்ப்படிந்து செல்லும் அரசியல் கலாச்சாரம்**

இத்தகைய கலாச்சாரத்தில் வாழுகின்ற மக்களிடையே அரசியல் ஆற்றுப் பயிற்சி என்பது குறுகிய அரசியல் கலாச்சாரத்தில் வாழுகின்ற மக்கள் பெற்றுள்ளதைவிடச் சற்று அதிகமாக இருக்கும். அரசியல் முறையமைவைப் பற்றி இத்தகைய மக்கள் ஓரளவு அறிந்திருப்பர். அரசாங்கம் தங்களுக்கு என்னவெல்லாம் செய்யவேண்டும் என்ற எதிர்பார்ப்புகள் இவர்களிடையே காணப்படும். ஆனால் அரசியல் முறையமைவில் எவ்வகையில் தங்களது எதிர்பார்ப்புகள் தொடர்பான தாக்கத்தை உருவாக்கி அரசியல் செயல்முறையைத் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொள்வதை இவர்கள் அறிந்திருக்க மாட்டார்கள். இடப்படும் ஆணைகட்கு கட்டுப்பட்டுக் கீழ்ப்படிந்து செல்லும் நிலையில் இம்மக்கள் இருப்பர். இரண்டாவது உலகப்போருக்குப் பின்னர் விடுதலை பெற்ற பல நாடுகளில் இத்தகைய கீழ்ப்படிந்து செல்லும் அரசியல் கலாச்சாரமே காணப்படுகிறது.

**பங்கேற்பு அரசியல் கலாச்சாரம்**

ஓர் அரசியல் முறையமைவில் பங்கேற்கும் மக்கள் அதன் வடிவம், உள்ளீட்டு – வெளிப்பாட்டுச் செயற்பாடுகள் ஆகியவற்றை விரிவாக அறிந்துள்ள மக்கள் இருக்கும் கலாச்சாரத்தைப் பங்கேற்ற அரசியல் கலாச்சாரம் எனலாம். இதிலுள்ள மக்கள் அரசாங்கத்தின் செயற்பாடுகளை அறிந்திருப்பதோடு மட்டுமின்றி அதன் செயல்முறையில் பங்கேற்றுத் தங்களது செல்வாக்கின் தாக்கத்தை உருவாக்கவும் செய்கின்றனர். பிரிட்டன், அமெரிக்க ஐக்கிய நாடுகள், சுவிட்சர்லாந்து மற்றும் பிரான்சு போன்ற நாடுகளில் இத்தகைய பங்கேற்ற அரசியல் கலாச்சாரம் உள்ளது எனலாம்.

**கலவை அரசியல் கலாச்சாரங்கள்**

மேற்கூறப்பட்ட மூன்று விதமான அரசியல் கலாச்சாரங்களும் தூய்மையானவை. இவற்றில் ஒன்றுடன் ஒன்று கலந்த கலவை அரசியல் கலாச்சாரங்களும் காணப்படுகின்றன. குறுகிய மற்றும் கீழ்ப்படியும் அரசியல் கலாச்சாரம் என்பதில் மக்களுக்கு அரசியல் முறையமைவு மற்றும் வெளிப்பாட்டு வடிவமைப்பு பற்றிய ஆற்றுப்பயிற்சி மட்டும் அமைந்துள்ளது. இது ஒரு மாறிவரும் நிலை எனலாம். தொடக்கநிலைப் பழங்குடிச் சமுதாயம் எனும் நிலையிலிருந்து மையமாக்கப்பட்ட அரசியல் அதிகாரத்துவம் எனும் நிலை நோக்கி வளர்கின்ற சமுதாயத்தில் இது காணப்படும். கீழ்ப்படிதல் பங்கேற்பு

அரசியல் கலாச்சாரம் என்பது முந்தையதிலிருந்து மாறுபட்டது. இதில் உள்ளீட்டு அமைப்பு பற்றிய ஆற்றுப் பயிற்சி மக்களிடம் காணப்படுகிறது. இதில் சில பிரிவு மக்கள் ஓரளவு ஆற்றுப்பயிற்சி பெற்றுத் திகழ்தல் இயல்பு குறுகிய பங்கேற்பு அரசியல் கலாச்சாரம் என்பதும் ஒரு கலவை அரசியல் கலாச்சாரம் ஆகும். இது சில முன்னாள் குடியேற்றங்களில் காணப்படுகிறது. பொதுவாக, பாரம்பரியமான அரசியல் சமுதாயத்தைக குறுகிய அரசியல் கலாச்சாரம் என்றும், மையமாக்கப்பட்ட அரசியல் அதிகாரத்துவத்தைக் கீழ்ப்படிதல் கலாச்சாரம் என்றும், நன்கு வளர்ந்த மக்களாட்சி அமைப்பைப் பங்கேற்புக் கலாச்சாரம் என்றும் கூறலாம். கலவைக் கலாச்சாரங்கள் இடைநிலைகளில் உள்ளன.

## மதிப்பீடு

### நிறைகள்

1) அரசியல் பகுத்தாய்வில் அரசியல் கலாச்சாரம் என்பது ஒரு முக்கியமான கோட்பாடாகும். 2) அரசியல் கலாச்சாரத்திற்கும் அரசியல் சமூகமயமாக்கு தலுக்கிடையில் நெருங்கிய தொடர்பு உள்ளது. 3) அரசியல் கலாச்சாரம் தேசிய வரலாற்றைச் சரியாகப் புரிந்துகொள்ள உதவுகிறது. 4) அரசியல் கலாச்சாரம் அரசியல் கொள்கை உருவாக உதவுகிறது. 5) நுண் பகுத்தாய்வு மற்றும் பெரும் பகுத்தாய்வு ஆகியவற்றை இது இணைக்கிறது. 6) ஒப்பீட்டு அரசாங்கங்கள் பற்றிய படிப்பில் இது ஒரு நல்ல கருவியாகப் பயன்படுகிறது. பல்வேறு அரசியல் முறையமைவுகளை ஒப்பிட்டுப் படிக்க இது பெரிதும் உதவுகிறது. 7) அரசியல் நடக்கையியல் ஒரு தனி மனிதன் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதனை இது வழிகாட்டுகிறது. 8) தனி மனிதன் மீதான கவனத்திலிருந்து ஒரு சமுதாயம் மீதான கவனம் உருவாக இது உதவுகிறது. 9) வெவ்வேறு அரசியல் சமுதாயங்கள் வெவ்வேறு திக்குகள் நோக்கிச் செல்கின்றன என்பதைப் புரிந்து கொள்ள இது உதவுகிறது. இதனால் எவை அழிவை நோக்கிச் செல்கின்றன என்பதையும் அதற்கான காரணங்களையும் பகுத்தாய்வு செய்ய வாய்ப்புக் கிடைக்கிறது. 10) அரசியல் கலாச்சாரம் அரசியல் நடக்கையில் பகுத்தறிவு சார்ந்த மற்றும் பகுத்தறிவு சாராத அம்சங்களை ஆய்வு செய்ய இது உதவுகிறது.

### குறைகள்

1) அரசியல் கலாச்சாரம் எனும் கோட்பாடு பழைமைவாதம் மற்றும் பிற்போக்குத் தனத்தின் அடிப்படையில் அமைந்துள்ளது. 2) இது முற்போக்குவாதத்தை எதிர்க்கிறது. 3) தனிமனிதனின் நடக்கையை அளவிடும் பாராமீட்டராக இதனைப் பயன்படுத்த முடியாது என்பதை அல்மாண்ட் மற்றும் பொவெல் ஆகியோர் சுட்டிக் காட்டுகின்றனர். 4) இக்கோட்பாட்டில் பயன்படுத்தப்பட்ட கலைச்சொற்களும் சொற்றொடர்களும்

தெளிவாக இல்லை. ஒப்பீட்டு அரசாங்கத்தைப் பயில்வோர் இதனால் குழப்பமடைய வாய்ப்புள்ளது. 5) இக்கோட்பாடு நுண்ணாய்வு மற்றும் பேராய்விற்கு இடையிலுள்ள இடைவெளியை முற்றிலும் இட்டு நிரப்பவில்லை.

அரசியல் கலாச்சாரம் எனும் கோட்பாட்டில் நிறைகளும் குறைகளும் உள்ளன. இதில் குறைகளைக் காட்டிலும் நிறைகள் அதிகம் உள்ளன. மற்ற கோட்பாடுகளை விட இது அறிந்து கொள்ளச் சற்றுக் கடினமானது. எனினும் இதன் பயன்பாடு காரணமாக இதனை ஏற்றுக் கொள்ளலாம் எனும் கருத்துக் கூறப்படுகிறது. தனிநபர்களிடையே குழுப்பொறுப்பு மனப்பாங்கை வளர்க்க அரசியல் சமுகமயமாக்குதல் அவசியமாகும். அதன் பல்வேறு அம்சங்களை இங்கு காணலாம்.

## சமுகமாயமாக்குதல்

ஒவ்வொரு மனிதனும் பிறந்தவுடன் அவனது சமுகமயமாக்குதல் என்பது தொடங்குகிறது. மழலைநிலையில் குழந்தை தன்னுடைய தாயின் மடியை உலகம் என நினைக்கிறது. அன்னை அந்தக் குழந்தைக்கு உறவுகளை அடையாளம் காட்டுகிறாள். குழந்தை வளர்ந்து பெரியவனாகும் போது அன்னை மற்றும் தந்தையைவிட்டுப் பிரிந்து சமுதாயத்தின் ஓர் அங்கமாகின்றான். சமுதாயத்தின் தனது மகன் அல்லது மகள் மேம்பாடு அடைய வேண்டும் எனப் பெற்றோர் விழைகின்றனர். சமுதாயப் பழக்க வழக்கங்களை அவனுக்குக் கற்றுக் கொடுக்கின்றனர். குடும்பத்தில்தான் மனிதனின் சமூகமயமாக்குதலின் முதல் நிலை தொடங்குகிறது. சமூகமயமாக்குதலை அவனுக்குள் வளர்க்கும் சக்திகளை அதிகாரத்துவச் சக்திகள் மற்றும் சமநிலைச் சக்திகள் எனலாம். நண்பர்கள், விளையாட்டுத் தோழர்கள் போன்றோரைச் சமநிலை சக்திகள் எனலாம். சமுதாயத்தில் தனிமனிதன் தன்னை ஐக்கியமாக்கிக் கொள்ளச் சமூகமயமாக்குதல் உதவுகிறது. இதனைச் சரியாகச் செய்ய மேற்சொல்லப்பட்ட சக்திகள் உதவுகின்றன.

### 5.2. அரசியல் சமூகமயமாக்குதல்

ஒரு சமுதாயத்தில் அரசியல் நோக்கங்கள் பற்றிய ஆற்றுப்பயிற்சி நடைபெறுதலை அரசியல் சமூகமயமாக்குதல் எனலாம். அரசியல் கலாச்சாரத்தைப் பராமரிக்கவும் மாற்றவும் அரசியல் சமூகமயமாக்குதல் அவசியம். ஓர் அரசியல் சமுதாயத்தில் தனிநபர்களை முழுமையான உறுப்பினர்களாக்குதலை இக்கோட்பாடு நோக்கமாகக் கொண்டுள்ளது. இது அமைதியாக நடைபெறும் ஒரு செயயல்முறையாகும். இத்தகைய மாற்றம் தங்களுக்குள் நிகழ்கிறது என்பதை மக்கள் அறிந்துணரா வண்ணம் இது நடைபெறுகிறது. அரசியல் தகவுகளை ஒரு சந்ததி தனக்குப் பின்னர் வரும் சந்ததிக்கு மாற்றுகிறது. இவ்வாறு தொடர்ந்து

அரசியல் தகவுகள் ஒரு சந்ததியால் தொடர்ந்து வரும் சந்ததிகட்கு மாற்றப்படுவதால் அரசியல் முறையமைவு நிலைத்தன்மையை உருவாக்குதல் அரசியல் சமூகமயமாக்குதலின் முக்கியமான நோக்கமாகும். தனிநபர்களிடையே தகவுகளை வளர்த்த், ஆற்றுப்பயிற்சி அளித்தல் ஆகியவற்றின் வாயிலாக அரசியல் சமூகமயமாக்குதல் தனிநபர்கள் மனங்களில் அரசியல் முறையமைவின் மீதான நம்பிக்கையை வளர்க்கிறது. அரசியல் சமூகமயமாக்குதல், சமுதாய மற்றும் அரசியல் முறையமைவுகளிடையே இணைப்பாக அமைந்துள்ளது.

### 5.2.1. அரசியல் சமூகமயமாக்குதலின் முகாண்மைகள்

அரசியல் சமூகமயமாக்குதல் என்பது திடீரென்று நிகழ்ந்து விடக்கூடிய நிகழ்ச்சியல்ல. அது மெதுவாகப் பல வழிமுறைகளில் ஏற்படக்கூடியது. அரசியல் சமூகமயமாக்குதலைச் செய்கின்ற சில முகாண்மைகள் உள்ளன. குடும்பம் அத்தகைய முகாண்மைகளில் முதன்மையானது. குடும்பத்தின் செல்வாக்கு ஒருவனின் குழந்தைப் பருவத்திலேயே தொடங்குகிறது. ஒரு மனிதனின் ஆளுமையை உருவாக்குவதில் குடும்பத்தின் பங்கு அடிப்படையானது. அதிகாரத்துவத்துடன் ஒருவன் கொள்ளுகின்ற மனப்பாங்கு, ஆணைகட்குக் கீழ்ப்படியத் தயாராக உள்ள நிலை, ஒத்துழைக்க உளவிருப்பம், அதிகாரத்துவத்தை மீறினால் அம்மீறலின் தன்மை மற்றும் விசை போன்ற விஷயங்களில் ஒருவனது குடும்பம் அவனுக்குக் கற்றுத்தரும் விஷயங்கள் முக்கியப்ப பங்கு வகிக்கின்றன. ஒரு குடும்பம் அரசியல் முறையமைவுடன் கொண்டுள்ள மனப்பாங்கு மனிதனின் மனதில் குழந்தைப்பருவத்திலேயே பெரும் தாக்கத்தை ஏற்படுத்துகிறது.

குடும்பத்திற்கு அடுத்தபடியாக அரசியல் சமூகமயமாக்குதல் தொடர்பான முகாண்மையாக அமைவது பள்ளிக்கூடம் எனலாம். குழந்தையின் மனதில் ஆழமான தாக்கத்தை ஏற்படுத்துவது பள்ளி. பள்ளியும் கல்வி முறையும் மனிதனின் மனப்பாங்கினை உருவாக்குவதில் முக்கியப் பங்கு வகிக்கின்றன. சமநிலைக் குழுவினர் அடுத்த முகாண்மையாக அமைகின்றனர். பள்ளியில் உடன்பயிலும் மாணவர்கள் இத்தகைய சமநிலைக்குழுவினர் ஆகின்றனர். ஒருவனின் வயது வளர்ச்சிக்கேற்ப அவனது சமநிலைக்குழுவினரும் மாறுகின்றனர். ஒரு பணியிற் சேர்ந்ததும் பணிபுரியும் இடத்தில் புதிய குழுவினைப் பெறுகிறான். அக்குழு உறுப்பினர்களுடன் பல்வேறு பிரச்சினைகள் அதாடர்பான விவாதங்களைச் செய்கிறான். இத்தகைய விவாதங்கள் அவனது மனப்பாங்கில் மாற்றத்தை விளைவிக்கின்றன. பணியில் ஏற்படும் அனுபவங்களும் அவனுள் சில மாற்றங்களைச் செய்கின்றன. பல்வேறு மதங்களையும் சாதிகளையும் சேர்ந்த வேறுபட்ட நபர்களுடன்

பழகும் வாய்ப்புக் கிடைக்கிறது. ஒருவருக்குப் பணிவாய்ப்புக் கொடுத்த நபர் அல்லது நிறுவனத்தின் தாக்கத்தையும் அவன் பெறுகிறான். அரசியல் சமூகமயமாக்குதலின் பிற முகாண்மைகளாகத் திகழ்பவை மக்கள் செய்தித்தொடர்புச் சாதனங்களாகத் திகழும் செய்தித்தாள், வானொலி, தொலைக்காட்சி போன்றவையாகும். இவை ஒவ்வொரு தனிமனிதனின் மீதும் செல்வாக்குப் பெற்றுள்ளன. அரசியல் கட்சிகளும் அரசியல் சமூகமயமாக்குதலின் சிறந்த முகாண்மைகளாகத் திகழ்கின்றன.

### 5.2.2. சமூகமயமாக்குதலும் மாற்றமும்

அரசியல் சமூகமயமாக்குதல் என்பது ஒரே சீரான செயற்பாங்கு மற்றும் முரணான செயற்பாங்கு என இருவகைகளில் நடைபெறலாம். சீரான செயற்பாங்கு தொடர்ச்சியானதாகும். முரணான செயற்பாங்கு தொடர்ச்சியானதல்ல. சீரான செயற்பாங்கில் தனிநபர்கள் ஒருவருக்கொருவர் ஒத்துழைப்பு அளிக்கின்றனர். அவர்கள் தங்களது அரசியல் முறையமைவின் மீது நம்பிக்கை கொண்டுள்ளனர். முரணான செயற்பாங்கில் தனிநபர்கள் தங்களது அரசியல் முறையமைவின் மீது சந்தேகமும் வெறுப்பும் கொண்டவராயிருக்கின்றனர். அவர்கள் தங்கள் அரசியல் முறையமைவின் மீது நம்பிக்கையில்லாமல் இருக்கின்றனர்.

அரசியல் சமூகமயமாக்குதல் அரசியல் நிலைத்தன்மையை விரும்புகிறது. ஆனால், அது மாற்றத்திற்கு எதிரான கோட்பாடல்ல. இக்கோட்பாடு விரைவான புரட்சிகரமான மாற்றத்தை விரும்புவதில்லை. எனவே இதனைப் பழமைவாதக் கோட்பாடு எனலாம். இது மெதுவான மாற்றத்தை வலியுறுத்துகிறது. காலத்தின் மாற்த்திற்கேற்ப மக்களின் மனப்பாங்குகள், தகவுகள் மற்றும் ஆற்றுப்பயிற்சி ஆகியவை மாறுகின்றன. இவற்றின் மாற்றத்திற்கேற்ப அரசியல் கலாச்சாரமும் மாற வேண்டும். அவ்வாறு அரசியல் கலாச்சாரம் மாறவில்லையெனில் அரசியல் முறையமைவு சிதைந்து விடும். சான்றாக பிரான்சில் பதினாறாம் லூயியின் காலத்தில் அந்நாட்டு மக்களின் தகவுகள், மனப்பாங்குகள் மற்றும் ஆற்றுப்பயிற்சி ஆகியயைவ மாறிவிட்டன. ஆனால், அதற்கேற்ப அரசியல் கலாச்சாரம் மாறவில்லை. எனவேதான், 1789ஆம் ஆண்டின் பிரெஞ்சுப் புரட்சி ஏற்பட்டது. இங்கிலாந்தில் மக்களின் மனப்பாங்குகள், தகவுகள் மற்றும் ஆற்றுப்பயிற்சிகள் ஆகியவற்றின் மாற்றங்களுக்கேற்ப இங்கிலாந்தின் அரசியல் முறையமைவில் மெதுவான அமைதியான மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகள்

அ) அரசியல் கலாச்சாரம் பொருள் விளக்குக.

ஆ) அரசியல் கலாச்சாரத்தின் வகைகளை விவரிக்க.

இ) சமூகமயமாதல் என்றால் என்ன?

## 5.2.3. அரசியல் சமூகமயமாக்கலும் சமுதாய முறையமைவுகளும்

அரசியல் சமூகமயமாக்குதல் நடைபெறும் செயற்பாங்கு சமுதாயத்திற்குச்

சமுதாயம் மாறுபடலாம். ஒரு மக்களாட்சிச் சமுதாயம் என்பது திறந்த சமுதாயம் எனலாம். அதில் பல்வேறு முகாண்மைகள் பல்வேறு நோக்கங்களுடன் செயற்படுகின்றன. சான்றாக, ஒரு மக்களாட்சி அமைப்பில் ஓர் அரசியல் கட்சி தீவிரமான வலது சாரிக் கொள்கையையும் மற்றொரு அரசியல்கட்சி இடதுசாரிக் கொள்கையைக கொண்டிருக்கலாம். ஒவ்வொரு கட்சியும் தனது அரசியல் கருத்துக்களையும், கொள்கையையும் மக்கள் மத்தியில் பரப்ப முயலுகிறது. இம்முயற்சியில் அதன் வெற்றி அக்கட்சியின் திறமையைப் பொறுத்தது. ஒரு சர்வாதிகார சமுதாயம் மூடப்பட்ட அமைப்பாகத் திகழ்கிறது. இவ்வமைப்பில் அதிகாரத்தில் இருப்பவர்கள் தங்களது அரசியல் கருத்துக்களையும், கொள்கைகளையும் மக்களின் மீது திணிக்கின்றனர். மூத்த தலைமுறையினர் ஏற்கனவே அறிந்ததை அழிக்கவும் அடுத்த தலைமுறையினர் ஏற்கனவே அறிந்ததை கற்றுக்கொள்ளவும் சர்வாதிகாரச் சமுதாயம் முயலுகிறது. சர்வாதிகாரச் சமுதாயத்தில் அரசியல் சமூகமயமாக்குதல் சுதந்திரமாக நடைபெற அனுமதிக்கப்படுவதில்லை. அரசு மக்களின் மனங்களை வலுக்கட்டாயமாகத் தன் விருப்பப்படி நடக்கச் செய்கிறது. நாஜிக் கட்சியின் கீழிருந்த ஜெர்மனி, பாசிச இத்தாலி மற்றும் கம்யூனிச சோவியத் ஒன்றியம் ஆகியவற்றைச் சான்றுகளாகக் கூறலாம். அரசியல் சமூகமயமாக்குதல் என்பது இதுகாறும், இருந்த நிலையைத் தொடரச் செய்வதை நோக்கமாகக் கொண்டது.

அரசியல் நிலைத்தன்மை மற்றும் வளர்ச்சி தொடர்பாகப் பயிலுவதற்கு அரசியல் சமூகமயமாக்குதல் முக்கியமான அணுகுமுறை எனலாம். அமெரிக்க ஐக்கிய நாடுகளைச் சேர்ந்த அரசியல் விஞ்ஞானிகள், சமூகவியலாளர்கள் மற்றும் உளவியல் வல்லுநர்கள் ஆகியோர் இக்கோட்பாட்டின் மீது நாட்டம் கொண்டுள்ளனர். வளரும் நாடுகளில் காணப்படும் அரசியல் முறையமைவுகளைப் பற்றிப் பயில அவர்கள் முனைந்தனர். இத்தகைய காரணத்திற்காகவே மார்க்சியத்தைப் பின்பற்றிய நாட்டினர் இக்கோட்பாட்டை வெறுத்தனர். மார்க்சியத்தைப் பின்பற்றிய சிந்தனையாளர்களும் அரசியல்வாதிகளும் விரைவான மாற்றங்களை விரும்பினர். அரசியல் சமூகமயமாக்குதல் என்பது முன்னேற்றத்திற்குத் தடையான ஒரு கோட்பாடு என்று மதிப்பிடப்படுகிறது.

### 5.3. தொகுப்புரை

அரசியல் கலாச்சாரம் அதன் வகைகள் தெளிவாக விரிவாக்கப்பட்டுள்ளது. இப்பாடத்தில் மேலும் சமூகமயமாதல் அதன் முகாண்மைகள் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

### 5.4. முக்கிய வார்த்தைகள்

1. கலாச்சாரம் — மக்களின் பண்பாடு, மனப்பாங்கு
2. சமூகமயமாதல் — சமுதாயத்தோடு இணைதல்

### 5.5. பரிந்துரைக்கப்பட்ட நூல்கள்

1. Sir E.Barker, Principles of Social and Political Theory, Calcutta, Oxford, University Press – 1976.
2. Easton, The Political System An Inquiry into the State of Political Science New York, Wilay – 1953.

### 5.6. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவு கேள்விகளுக்கான பதில்கள்

| | |
|---|---|
| கேள்வி எண். 1 | பதில் எண். 5.1. |
| கேள்வி எண். 2 | பதில் எண். 5.1.1 |
| கேள்வி எண். 3 | பதில் எண். 5.2. |

### 5.7. மாதிரி வினாக்கள்

1. அரசியல் கோட்பாட்டு நெறிகளில் அரசியல் கலாச்சாரத்தின் முக்கியத்தை விரிவாக எழுதுக.
2. அரசியல் சமூகமயமாதலை உருவாக்கும் காரணிகளை விளக்குக.

அலகு – 6

# பொதுமுறையமைவுக் கோட்பாடு: டேவிட் ஈஸ்டனின் உள்ளீடு – வெளியீடு பகுப்பாய்வு

## அறிமுகம்

நடக்கையியல் கோட்பாட்டில் ஏற்பட்ட புரட்சி அல்லது சீர்திருத்தத்தின் காரணமாக எழுந்தது பொது முறையமைவுக் கோட்பாடு. ஒவ்வொரு தனியான படிப்பிலும் மேற்கொள்ளப்படும் ஆராய்ச்சிகளின் பலனாக அறியப்படும் உண்மைகளைக் கூட்டி வைக்கவும் அதன் பயன்களைப் பல்வேறு படிப்புப் பிரிவுகள் பெறவும் வாய்ப்பளிக்க வேண்டும் என்ற எண்ணம் எழுந்தது. சமூகவியல், உளவியல், பொருளாதாரம், மக்கள் இன இயல் போன்ற சமூக அறிவியல்களின் ஒருமைப்பாடு மேம்பட்ட அறிவுக்கு வகை செய்யும் என்றும் எதிர்பார்க்கப்பட்டது. இதன் காரணமாக பொது முறையமைவுக் கோட்பாட்டை உருவாக்கினர்.

## நோக்கங்கள்

பொது முறையவைவுக் கோட்பாடு தோற்றம் பற்றி புரிந்து கொள்தல்

பொது முறையமைவுக் கோட்பாட்டின் அடிப்படைகளை அறிந்து கொள்ளுதல்

டேவிட் ஈஸ்டனின் உள்ளீடு வெளிப்பாடு கோட்பாடு பற்றி பகுத்தாய்தல்

## அலகின் வடிவமைப்பு

கோட்பாட்டின் தோற்றம்

இராபர்ட் டால் கூறும் அம்சங்கள்

பொது முறையமைவுக் கோட்பாட்டின் அடிப்படைக் கோட்பாடுகள்

ஒழுங்கு செய்தல் மற்றும் பராமரித்தல் தொடர்பான கோட்பாடுகள்

மாற்றங்கள் தொடர்பான கோட்பாடுகள்

பொதுமுறையமைவுக் கோட்பாட்டின் தாக்கம்

டேவிட் ஈஸ்டனின் உள்ளீடு

தொகுப்புரை

முக்கியவார்த்தைகள்

பரிந்துரைக்கப்பட்ட நூல்கள்

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவு கேள்விகளுக்கான பதில்கள்

மாதிரி வினாக்கள்

## 6.1. கோட்பாட்டின் தோற்றம்

முறையமைவு என்பது பொதுவாக இயற்கை அறிவியலில் பயன்படுத்தப்பட்ட கோட்பாடாகும். அவற்றில் வான் பரடலன்பி என்பவர் இதனை அறிமுகப்படுத்தினார்.பின்னர் இக்கோட்பாடு மக்கள் இன இயலில் எடுத்தாளப்பட்டு அதிலிருந்து சமூகவியல், உளவியல் மற்றும் அரசியல் ஆகிய பிரிவுகளுக்கும் சென்றது. வியன்னா அரசியல் அறிவியலாளர்கள் எனப்பட்டவர்களும் இக்கோட்பாட்டினை வலியுறுத்தினார்கள். தர்க்கரீதியான அணுகுமுறையும் இதுபோன்ற கருத்துக்கு ஆதரவளித்து, இக்காரணங்களால் பொதுமுறையமைவுக் கோட்பாடு எழுச்சி பெற்று வளர்ந்தது.

முறையமைவு என்பதை அடிப்படையாகக் கொண்டது முறையமைவுக் கோட்பாடு. தமிழில் முறை என்று சொல்வது வழிமுறை என்பதைக் குறிக்கும். முறையமைவு என்பது முறையிலிருந்து மாறுபட்டதாகும். வான் பரடலன்மி, முறையமைவு என்பதை ஒன்றுக்கொன்று தொடர்புடைய கூறுகளின் அமைப்பு என்கிறார். ‘அக்காப்’ என்பவர் முறையமைவை சுதந்திரமான ஒன்றுக்கொன்று தொடர்புடைய பகுதிகளின் ஒருங்கிணைப்பு என்கிறார். முறையமைவு என்பதை பல பகுதிகள் இணைந்துள்ள அமைப்பு எனலாம். அதிலுள்ள பகுதிகள் சுதந்திரமானவையாகவும் ஒன்றுடனொன்று தொடர்புடையனவாயும் அமைந்துள்ளன. பகுதிகட்கிடையில் உருவ அமைப்பு தொடர்பான உறவுகள் அமைகின்றன. அவற்றிற்கிடையே தொடர்புடையச் செயல்கள் நடைபெறுகின்றன. சட்டமன்றத்தை ஒரு முறையமைவு எனச் சொல்லலாம். சட்டமன்றத்தில் சில பகுதிகள் உள்ளன. அவை ஒன்றுடனொன்று தொடர்பு கொண்டு செயற்படுகின்றன. அரசை ஒரு முறையமைவு எனச் சொல்லலாம். அதில் சில பகுதிகள் உள்ளன. ஒரு கால்பந்தாட்ட அணியைக் கூட ஒரு முறையமைவு எனலாம்.

ஒவ்வொரு முறையமைவிலும் சில சார் முறையமைவுகள் இடம் பெறலாம். ஒரு முறையமைவு மற்றொரு முறையமைவின் சார் முறையமைவாக அமையலாம். சமுதாயம் என்பதை ஒரு முறையமைவு என்றால் அதில் செயல்படும் அரசியல் மற்றும் பொருளாதார நிறுவனங்களைச் சார் முறையமைவுகள் எனலாம்.

### 6.1.1. இராபர்ட் டால் கூறும் அம்சங்கள்

முறையமைவு தொடர்பாக நான்கு அடிப்படையான கூறுகளை இராபர்ட் டால் கூறுகிறார். 1. முறையமைவு எண்ணத்தில் மட்டும்

அனுமானிக்கப்படும் நிதர்சனமான விஷயங்களின் தொகுப்பு. ஒரு மனிதனின் இரத்த ஓட்ட முறையமைவை (circulatory system) இதற்குச் சான்றாகக் கூறுகிறார். 2. ஒவ்வொரு முறையமைவிற்கும் தெளிவான எல்லைகள் அமைகின்றன. 3. ஒரு முறையமைவு மற்றொரு முறையமைவின் சார் முறையமைவாக அமையலாம். பூமி என்பது ஒரு முறையமைவு. இம்முறையமைவு சூரிய மண்டலம் எனும் முறையமைவின் சார் முறையமைவாக அமைந்துள்ளது. விண்வெளி எனும் முறையமைவில் சூரிய மண்டலம் ஒரு சார் முறையமைவாக அமைந்துள்ளது. விண்வெளி என்பது அண்டத்தின் ஒரு சார்முறையமைவு எனலாம். இந்தியாவில் மக்கள் சபையின் விதிகள் குழு அதன் சார் முறையமைவாக அமைந்துள்ளது. மக்கள் சபை பாராளுமன்றத்தின் சார்முறையமைவாக உள்ளது. இந்திய அரசாங்கம் இந்திய அரசின் சார் முறையமையாகும். 4. ஒரு முறையமைவு ஒரே சமயத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட முறையமைவுகளின் சார் முறையமைவாகச் செயற்படலாம்.

## 6.1.2. பொது முறையமைவுக் கோட்பாட்டின் அடிப்படைக் கோட்பாடுகள்

### 1) விளக்கக் கோட்பாடுகள்

பொது முறையமைவுக் கோட்பாட்டில் அமைந்துள்ள மூன்று விதமான அடிப்படைக் கோட்பாடுகளில் இவ்வகையும் ஒன்று. இவை அமைப்பு பற்றியும் அவற்றின் பகுதிகள் பற்றியும் விளக்கங்களை அளிப்பதால் இவற்றை விளக்கக் கோட்பாடுகள் என்கிறோம். இவ்விளக்கக் கோட்பாடுகள் விவரிக்கும் விபரங்களின் வாயிலாக நாம் பல விஷயங்களை உணர்ந்து கொள்ள முடிகிறது.

அவையாவன: 1) ஒரு முறையமைவு திறந்த முறையமைவா, மூடிய முறையமைவா என்பதை அறிகிறோம். திறந்த முறையமைவு பற்றிய விஷயங்கள் அனைவராலும் அறிந்து கொள்ளப்படக் கூடியவை. மூடிய முறையமைவு வெளிப்படையானதல்ல. 2) ஒரு முறையமைவு மக்களாட்சியின் அடிப்படையில் அமைந்துள்ளதா அல்லது சர்வாதிகாரத்தின் அடிப்படையிலானதா என்பதை அறியவும் இது உதவுகிறது. 3) ஒரு முறையமைவில் இடம் பெறும் பாகங்கள் எத்தகையவை என்பதையும் அவற்றிற்கிடையிலான வேறுபாடுகள், ஒருமைப்பாடு மற்றும் ஒன்றையொன்று சார்ந்த நிலை ஆகியவற்றையும் புரிந்து கொள்ள விளக்கக் கோட்பாடுகள் உதவுகின்றன. 4) முறையமைவின் பன்னாட்டளவிலான அமைப்பினைப் பற்றி அறியவும் இவை உதவுகின்றன. 5) அரசியல் முறையமைவுகட்கிடையில் நிலவும் உருவொழுங்குகளை நிர்ணயிக்க இவை பயன்படுகின்றன.

### 6.1.3. ஒழுங்கு செய்தல் மற்றும் பராமரித்தல் தொடர்பான கோட்பாடுகள்

ஒவ்வொரு முறையமைவும் எவ்வாறு பராமரிக்கப்படுகிறது? ஒவ்வொரு முறையமைவும் எவ்வாறு ஒழுங்கு செய்யப்படுகிறது? இவ்வினாக்களுக்கான விடைகளைக் காண்பது பகுத்தாய்வில் அவசியமானவை. பராமரித்தல் மற்றும் ஒழுங்கு செய்தல் தொடர்பான காரணிகள் எவையெனக் கண்டறியவும் புரிந்து கொள்ளவும் இக்கோட்பாடுகள் உதவுகின்றன.

### 6.1.4. மாற்றங்கள் தொடர்பான கோட்பாடுகள்

ஒவ்வொரு முறையமைவும் காலத்திற்கேற்ப சில மாற்றங்களை அடைகின்றன. புதியனவற்றை அறிதல், மாற்றங்களை ஏற்றுக்கொள்ளுதல் மற்றும் வளர்ச்சி தொடர்பான கோட்பாடுகள், மாற்றங்களின் தன்மைகளையும காரணிகளையும் அறிய உதவுகின்றன. மாற்றங்கள் முறையமைவின் பாதிப்புடன் கூடியவையாகவும் அமையலாம். ஒரு புரட்சி அல்லது கலவரத்தின் மூலமாக ஏற்படும் மாற்றம் முறையமைவில் பாதிப்பை ஏற்படுத்துகிறது. ஒரு முறையமைவில் ஏற்படும் பெருஞ்சிக்கல்கள், சிக்கல்களால் உருவாக்கப்படும் அதிகச் சுமை மற்றும் சில முறையமைவுகளின் சிதைவு ஆகியவற்றை அறியவும் ஆய்வு செய்யவும் இக்கோட்பாடுகள் பெரிதும் உதவுகின்றன.

### 6.1.5. பொது முறையமைவுக் கோட்பாட்டின் தாக்கம்

பொது முறையமைவுக் கோட்பாடு தற்கால அரசியல் பகுப்பாய்வில் குறிப்பிடத்தக்க தாக்கத்தை உருவாக்கியுள்ளது. பல்வேறு அரசியல் அறிவியலாளர்கள் இக்கோட்பாட்டைப் பயனுறும் வகையில் கையாண்டுள்ளனர். இராபர்ட் மெர்ட்டன் என்பார் மிக அதிகமாக இக்கோட்பாட்டிற்கு முக்கியத்துவம் அளித்துள்ளார். டால்காட் பார்சன் முறையமைவைக் கட்டுவித்தவர் எனப் பெயர் பெறும் அளவு இக்கோட்பாட்டிற்குச் சிறப்பிடம் அளித்துள்ளார். இக்கோட்பாட்டின் எழுச்சி காரணமாகப் பல புதிய கோட்பாடுகள் அரசியல் அறிவியலில் தோன்றியுள்ளன.

**நிறைகள்**

1) அரசியல் செயற்பாடுகளை விவரிப்பதிலும் பகுத்தாய்வு செய்தலிலும் முறையமைவு சார்ந்த அணுகுமுறை பயனுடையதாய் அமைந்துள்ளது. 2) ஒரு குறிப்பிட்ட முறையமைவு நீண்ட காலம் நிலைத்திருப்பதற்கான காரணங்களை அது விளக்குகிறது. 3) ஒழுங்கு, மாற்றம் எல்லைகளை அடைதல் போன்றவற்றிற்கு முக்கியத்துவம்

அளிக்கிறது. 4) வளர்ந்து விட்ட நாடுகளில் நடைமுறையிலுள்ள முறையமைவுகளைப் பராமரிப்பது தொடர்பான பிரச்சினைகள் எழுகின்றன. வளரும் நாடுகளில் நடைமுறையிலுள்ள முறையமைவுகளை மேம்படுத்துதல் தொடர்பான விஷயங்களை இக்கோட்பாடு விளக்குகிறது. 5) முறையமைவுகளில் ஏற்படும் மாற்றங்களைக் கண்டறிவதில் இக்கோட்பாடு சிறப்பான பங்கு வகிக்கிறது. 6) எல்லைகளை வகுப்பதற்கும் வகுத்த எல்லைகளை நோக்கி முன்னேறவும் இக்கோட்பாடு தூண்டுகோலாய் அமைகிறது. 7) முறையமைவுகளின் பகுத்தாய்விற்கு இக்கோட்பாடு உதவுகிறது.

**குறைகள்**

பொது முறையமைவுக் கோட்பாட்டில் கீழ்க்கண்ட குறைகள் அல்லது வரையறைகள் காணப்படுகின்றன. 1) சரியான விளக்கங்கள் அளிப்பதற்கான வாய்ப்புகள் இக்கோட்பாட்டில் இல்லை. 2) அதிகாரம், செல்வாக்கு மற்றும் கொள்கை உருவாக்குதல் போன்ற அரசியலில் முக்கியமான பிரச்சினைகளைப் புரிந்து கொள்ள உதவவில்லை. 3) அரசியலில் காணப்படும் சக்திகளின் நுண்ணிய ஆய்விற்கு இது வகை செய்யவில்லை. 4) அரசியல் முறையமைவின் செயற்பாட்டுப் பகுத்தாய்விற்குப் போதுமான முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை. 5) இக்கோட்பாடு பலராலும் வரவேற்கப்படவில்லை. 6) ஓர் ஒருங்கிணைந்த அணுகுமுறைக்கும் இது வகைசெய்யவில்லை.

தற்கால அரசியல் பகுப்பாய்வில் பொது முறையமைவுக் கோட்பாடு முக்கியமான இடம் வகிக்கிறது. ஆராய்ச்சியாளரின் கோட்பாட்டளவிலான உணர்விற்கு அளிக்கின்ற முக்கியத்துவத்தை இது நடைமுறைச் செயல்பாடுகட்கு அளிக்கவில்லை. எனினும், இக்கோட்பாட்டின் வரையறைகளைப் புரிந்து கொண்டு இதனைச் சரியான முறையில் பயன்படுத்த வேண்டும்.

## 6.2. டேவிட் ஈஸ்டனின் உள்ளீடு – வெளிப்பாடு பகுப்பாய்வு

டேவிட் ஈஸ்டனின் உள்ளீடு வெளிப்பாடு பகுப்பாய்வு, பொது முறையமைவுக் கோட்பாட்டியலில் இருந்து தோன்றியதாகும். அரசியல் முறையமைவுகள் எவ்விதம் நெருக்கடிகளுக்கிடையேயும் தங்களைத் தொடர்ந்து தக்க வைத்துக் கொள்கின்றன என்று காண்பது இப்பகுப்பாய்வின் நோக்கமாகும். அரசியல் முறையமைவுகள் இரண்டு பணிகளைச் செய்கின்றன. அவையாவன:

1. சட்டப்பூர்வமாக தகவுகளையும், பணிகளையும் மக்களுக்கு ஒதுக்குதல்

2. சட்டப்பூர்வமாக ஒதுக்கிய தகவுகளையும், பணிகளையும் மக்கள் ஏற்கும்படி செய்தல்.

டேவிட் ஈஸ்டன் அரசியல் முறையமைவு, உள்ளீடுகளை வெளிப்பாடுகளாக மாற்றி வெளிப்பாடுகளைச் சூழல்களுக்குத் திரும்ப ஊட்டும் முறை என்று கருதுகிறார். தனது உள்ளீடு வெளிப்பாடு பகுப்பாய்வை விவரிப்பதற்குப் பலவிதமான கருத்துப்படிவங்களைப் பயன்படுத்துகிறார். அவையாவன: உள்ளீடுகள், கோரிக்கைகள், ஆதரவுகள், வெளிப்பாடுகள், கொள்கைத் தீர்மானங்கள், செயல்கள், திரும்ப ஊட்டுதல், சூழல்கள் முதலியவையாகும். இந்த வரைபடம் ஒரு அரசியல் முறையமைவை நாம் புரிந்துகொள்ள ஓரளவு உதவுகிறது. ஈஸ்டன் உள்ளீடு – வெளிப்பாடு பகுப்பாய்வை ஒரு வரைபடத்தின் மூலமாக விளக்குகிறார்.




உள்ளீடுகளில் கோரிக்கைகளும் ஆதரவுகளும் அடங்கும். கோரிக்கைகள் பொருளாதார கோரிக்கைகளாகவும் இருக்கலாம். அரசியல் கோரிக்கைகளாகவும் இருக்கலாம். கலாச்சார கோரிக்கைகளாகவும் இருக்கலாம் அல்லது சமூக கோரிக்கைகளாகவும் இருக்கலாம். ஊதியத்தை உயர்த்த வேண்டும். வரிகளைக் குறைக்க வேண்டும். அடிப்படை வசதிகளைச் செய்து தர வேண்டுமென்பவை பொருளாதாரக் கோரிக்கைகளில் அடங்கும்.நூலகங்கள் ஏற்படுத்தித் தர வேண்டும். விளையாட்டு அரங்குகள் அமைத்துத் தரவேண்டும் போன்றவை கலாச்சார கோரிக்கைகளில் அடங்கும். பூங்காக்களை அமைத்துத் தர வேண்டும். வீதிகளைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வசதி செய்து தர வேண்டும் போன்றவை சமூகக் கோரிக்கைகளாகும். ஓட்டுரிமை வழங்க வேண்டும். தேர்தல்களை உடனடியாக நடத்த வேண்டும் போன்ற கோரிக்கைகள் அரசியல் கோரிக்கைளில் அடங்கும். எல்லா கோரிக்கைகளையும் அரசியல் முறையமைவு நிறைவேற்றினால் அவ்வரசியல் முறையமைவு நிலைத்தன்மை பெற்று விளங்கும். ஆனால் அரசியல் முறையமைவுகளினால் எல்லா கோரிக்கைகளையும்

நிறைவேற்ற முடிவதில்லை. அதற்கு மூன்று முக்கிய காரணங்கள் உள்ளன.

1. கோரிக்கைகள் மிகப்பலவாக இருத்தல்
2. முரண்பாடான கோரிக்கைகள் எழுதல்
3. புதிய கோரிக்கைகள் எழுதல்

கோரிக்கைகளை அரசியல் முறையமைவால் நிறைவேற்ற முடியாவிட்டாலும் முறையமைவு நிலைத்தன்மை பெறுவதற்கான காரணம் அம்முறையமைவில் சில கலாச்சார நெறிகள் வளர்க்கப்பட்டு மக்கள் குறைந்த கோரிக்கைகளோடு திருப்தி அடைய வகை செய்யப்படுகிறது. கோரிக்கைகள் இருப்பதால்தான் அரசியல் முறையமைவு தேவைப்படுகிறது. மக்களுக்கு கோரிக்கைகளே இல்லாவிட்டால் அரசியல் முறையமைவு அவசியம் இல்லை.

மக்களும், தொகுதிகளும் எழுப்பும் கோரிக்கைகளுக்கு ஆதரவுகள் தேவை. ஆதரவில்லாத கோரிக்கைகள் பெரும்பாலும் அரசியல் முறையமைவால் நிறைவேற்றப்படுவதில்லை. ஆதரவுகளை நான்கு வகையாகப் பிரிக்கலாம்.

1. பொதுவான ஆதரவுகள்
2. திட்டவட்டமான ஆதரவுகள்
3. அரசியல் முறையமைவை ஆதரிக்கும் ஆதரவுகள்
4. அரசியல் முறையமைவை எதிர்க்கும் ஆதரவுகள்

எல்லா ஆதரவுகளும் திட்டவட்டமான ஆதரவுகளாகவும் அரசியல் முறையமைவை எதிர்க்கும் ஆதரவுகளாகவும் இருந்தால் அம்முறையமைவு நிலைக்காது. எல்லா ஆதரவுகளும் திட்டவட்டமாகவும் அரசியல் முறையமைவிற்கு எதிராகவும் இருக்கும்போது அரசியல் முறையமைவில் நிலைத்தன்மை ஏற்படுத்த அடக்கு முறைகள் கையாளப்படுகின்றன. பொதுவாக, அரசியல் முறையமைவு நிலைத்தன்மை பெற்று தொடர்ந்து இயங்குவதற்கான காரணம் அம்முறையமைவிற்கு மக்கள் தரும் பொதுவான ஆதரவுகளே ஆகும்.

கோரிக்கைகள் மற்றும் ஆதரவுகளின் அடிப்படையில் அரசியல் முறையமைவு கொள்கைகளைத் தீர்மானித்து சூழல்களுக்கு அனுப்புகிறது. கொள்கைத் தீர்மானங்களில் மாற்றங்கள் கொண்டுவர மக்களும், எதிர்கட்சி உறுப்பினர்களும் செல்வாக்குக் குழுக்களும் கோருகின்றன. அதன் விளைவாக கொள்கைகளில் மாற்றங்கள் கொண்டு வந்து செயல்களாக செயல்படுத்தப்பட்டுச் சூழல்களுக்கு அனுப்பப்படுகிறது. சூழல்களில் புதிய கோரிக்கைகளும், கோரிக்கைகளுக்கு ஆதரவுகளும்

எழுகின்றன. அரசியல் முறையமைவு கோரிக்கைகளையும், ஆதரவுகளையும் மையமாகக் கொண்டு கொள்கைத் தீர்மானங்களாகவும், செயல்களாகவும் மாற்றுகிறது. இவ்விதமாக அரசியல் முறையமைவு உள்ளீடுகளான கோரிக்கைகளையும் ஆதரவுகளையும் வெளிப்பாடுகளான கொள்கைத்தீர்மானங்களாகவும், செயல்களாகவும் மாற்றிச் சூழல்களுக்குத் திரும்பவூட்டும் முறை என்று டேவிட் ஈஸ்டன் கூறுகிறார்.

திறனாய்வு டேவிட் ஈஸ்டனின் உள்ளீடு வெளிப்பாடு பகுப்பாய்வில் சில குறைபாடுகள் காணப்படுகின்றன. முதலாவதாக, இப்பகுப்பாய்வு முறையில் ஈஸ்டன் பயன்படுத்தியுள்ள கருத்துப் படிவங்கள் மிக எளிதில் புரிந்து கொள்ளக்கூடியதாக இல்லை. இரண்டாவதாக, இப்பகுப்பாய்வு, பொது மக்கள் கருத்து எவ்வாறு உருவாகிறது. வேலை நிறுத்தம், ஊர்வலங்கள், அரசியல் நிகழ்ச்சிகள் முதலியவைகளை ஆய்வு செய்யப்போதுமான கருவியாகத் தெரியவில்லை. மூன்றாவதாக, அரசியல் முறையமைவிலுள்ள உயர்மட்ட நபர்களைப்பற்றி ஆய்வு செய்யக் கூடிய பகுப்பாய்வாகத் தோற்றமளிக்கிறது. நான்காவதாக, இப்பகுப்பாய்வு ஒரு அரசியல் முறையமைவின் உய்வு, உறுதி, பராமரிப்பு, ஆகியவற்றைத் தான் பேணுவதில் அதிக கவனம் செலுத்துகிறதே தவிர, அதன் மாற்றத்தைப் பற்றி எதுவும் சொல்லவில்லை. முதலாளித்துவ சமுதாய அமைப்பைக் காப்பாற்றும் பொருட்டு முதலாளித்துவ மனப்பாங்கு கொண்ட அமெரிக்க அரசியல் விஞ்ஞானிகள் இதை ஒரு புதிய கண்டுபிடிப்பு எனக் கருதுகின்றனர். ஆனால் பொதுவுடைமைவாதிகளின் இப்பகுப்பாய்வு முறையை வன்மையாகக் கண்டிக்கின்றனர். பொதுவுடைமைக் கோட்பாடு பின் தங்கிய ஆசிய – ஆப்பிரிக்க நாடுகளில் பரவுவதைத் தடுப்பதே இப்பகுப்பாய்வின் முக்கிய நோக்கம் என்று அவர்கள் கருதுகிறார்கள்.

மேற்கூறிய குறைபாடுகள் காணப்பட்டாலும், உள்ளீடு வெளிப்பாடு பகுப்பாய்வு முறை வளர்ச்சியடைந்த நாடுகளின் அரசியல் முறையமைவுகளைக் கூர்ந்து பகுப்பாய்வு செய்ய ஒரு சிறந்த முறையாகும் என்பதில் சந்தேகமில்லை.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகள்

அ) பொதுமுறையமைவு என்றால் என்ன?

ஆ) பொது முறையமைவு அடிப்படைகள் பற்றி குறிப்பு எழுதுக?

இ) டேவிட் ஈஸ்டனின் கோட்பாட்டை விளக்குக.

## 6.3. தொகுப்புரை

இப்பாடத்தில் பொதுமுறையமைவுக் கோட்பாடு பற்றிய தோற்றம் அதன் முக்கியத்துவம் பற்றி விளக்கப்பட்டுள்ளது. இராபர்ட் டாலின் கருத்துக்களும் இதில் கூறப்பட்டிருக்கிறது. ஈஸ்டனின் கோட்பாட்டின் முக்கியத்துவம் இதில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

## 6.5. பரிந்துரைக்கப்பட்ட நூல்கள்

1. N.P. Barry, Intoduction to Modern Political Theory, London, Macillan – 1965.
2. H.J. Laski, A.Grammer of Politics, London, Allon and unwin – 1948.
3. S.P. Varma, Modern Political Theory New Delhi, Vikas – 1983.
4. Held, Political Theory Today, Cambridge, Polity Press – 1991.

## 6.6. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவு சோதனை கேள்விகளுக்கான பதில்கள்.

| | |
|---|---|
| கேள்வி எண் 1 | பதில் எண். 6.1. |
| கேள்வி எண் 2 | பதில் எண். 6.1.2 |
| கேள்வி எண் 3 | பதில் எண். 6.2. |

## 6.7. மாதிரி வினாக்கள்

1. பொது முறையமைவுக் கோட்பாடு எவ்வாறு அரசியல் பகுப்பாய்வில் முக்கிய இடம்பெறுகிறது.
2. டேவிட் – ஈஸ்டனின் உள்ளீடு வெளிப்பாடு பகுப்பாய்வினை ஆராய்க.

# அலகு — 7

# ஆல்மண்டின் அமைப்பு – பணிப் பகுப்பாய்வு: திறனும், அதிகாரமும்: அரசியல் செல்வாக்கு

## அறிமுகம்

அமைப்பு — பணிப் பகுப்பாய்வு பொதுவான முறையமைவுக் கோட்பாட்டியலிலிருந்து தோன்றியதாகும். அமைப்பு பணிப்பகுப்பாய்வு முதன்முதலில் சமூகவியலறிஞர்களான டால்காட் பார்சன்ஸ் என்பவராலும் சமூகவியலில் அறிமுகப்படுத்தப்பட்டது. மனித இன இயல் வல்லுநரான ரெட் கிளிப் ப்ரெளன் என்பவரால் மனித இன இயலில் அறிமுகப்படுத்தப்பட்டது. அமைப்புப் பணிப்பகுப்பாய்வு அமைப்புகளையும், பணிகளையும் மையமாகக் கொண்டு எழுந்ததாகும். எல்லா அமைப்புகளுக்கும் சில அடிப்படையான பணிகள் உண்டு. உதாரணமாக, மக்களது அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்வது எல்லா அரசியல் முறையமைவுகளின் அடிப்படையான பணிகளாகும். இப்பணிகள் எவ்வாறு நிறைவேற்றி வைக்கப்படுகின்றன என்பது அமைப்புகளைப் பற்றியதாகும். உதாரணமாக மக்களது அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்யும் பணியை மத்திய அரசாங்கங்களும், மாநில அரசாங்கங்களும், உள்ளாட்சி அரசாங்கங்களும் செய்கின்றன. அமைப்பு பணிப்பகுப்பாய்வு மூன்று விதமான கூறுகளின் அடிப்படையில் எழுந்ததாகும்.

1. பகுப்பாய்வின் அடிப்படை அலகு முழு முறையமைவுகளாகும்.
2. எல்லா முறையமைவுகளும் சில அடிப்படையான பணியினைச் செய்ய வேண்டியுள்ளன.
3. அமைப்புகளும் பணிகளும் மிக நெருங்கிய தொடர்புடையவை. இப்பகுப்பாய்வின் அடிப்படை நோக்கம் எவ்வாறு முறையமைவுகள் சோதனைகளுக்கிடையில் தொடர்ந்து இயங்குகின்றன என்பதை விளக்குவதாகும்.

## நோக்கங்கள்

1. அமைப்பு – பணிப்பகுப்பாய்வு பற்றி அறிதல்
2. அரசியல் திறன், அதிகாரம் பற்றி பகுப்பாய்வு செய்தல்
3. அரசியல் செல்வாக்கு – ஆய்ந்தறிதல்

## வடிவமைப்பு

**அமைப்பு – பணிப்பகுப்பாய்வில் டால்காட் பார்சன்னின் பங்கு**

அரசியல் அமைப்ப பணி பகுப்பாய்வு

அதிகாரம் கோட்பாடு

திறன் மூலங்கள்
திறனின் தன்மைகள்
அரசு பற்றிய வலிமைக்கோட்பாடு
அதிகாரத்துவம்
வெளிப்படையான செல்வாக்குமன் உள்ளார்ந்த செல்வாக்கும்
டாலின் பகுப்பாய்வு
செல்வாக்கை அளவிடல்
செல்வாக்கின் வகைகள்
திறன் நாடிகளும் திறனுடைய தலைவர்களும்
தொகுப்புரை
முக்கிய வார்த்தைகள்
பரிந்துரைக்கப்பட்ட நூல்கள்
முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவு சோதனை கேள்விகளுக்கான பதில்கள்
மாதிரி வினாக்கள்

## 7.1. அமைப்பு – பணிப்பகுப்பாய்வில் டால்காட் பார்சன்னின் பங்கு

ஒரு சமூகம் தொடர்ந்து இயங்க வேண்டுமென்றால் அச்சமூகம் கீழ்க்கண்ட பணிகளைச் செய்ய வேண்டும் என்று டால்காட் கூறுகிறார். அவையாவன:

1. முறையமைவு பராமரிப்பு
2. குறிக்கோளை அடைதல்
3. ஏற்புப் பணி
4. ஒருங்கிணைப்புப் பணி

தகவுகளையும், பணிகளையும், மக்களுக்குப் பகிர்ந்தளித்து அவற்றை மக்கள் ஏற்றுக் கொள்ளும்படிச் செய்தல் முறையமைவு பராமரிப்பு எனப்படும். சமூகமாக்கல் செயலாண்மைகள், முறையமைவு பராமரிப்பில் முக்கிய பங்கை வகிக்கின்றது. செயலாண்மைகள் மனித சக்திகளை ஒன்று திரட்டி சமூகத்தின் இரண்டாவது பணியாகும். சூழல்களுக்குத் தகுந்தபடி முறையமைவு அனுசரித்துச் சென்றால், அது ஏற்புப் பணியில் அடங்கும். தனி மனிதர்களையும் முறையமைவிற்குச் சாதகமாக ஒருங்கிணைப்பது ஒருங்கிணைப்புப் பணியாகும். பார்சன்ஸ் என்பவர் சமூகம் தொடர்ந்து இயங்க வேண்டுமென்றால் மேற்கூறிய நான்கு பணிகளையும் செய்ய வேண்டுமென்கிறார்.

இப்பணிகளைச் செய்வதற்கு முறையமைவுகளில் பல்வேறு அமைப்புகள் உள்ளன. ஒரே அமைப்பு பல பணிகளைச் செய்கிறது. உதாரணமாக, நிர்வாகத்துறை சட்டத்தை நடைமுறைப்படுத்துவதோடு சட்டத்தை உருவாக்கும் பணியையும் செய்கிறது. எல்லாவிதப் பணிகளும்

ஒரு சில அமைப்புகளாலேயே செய்யப்பட்டால் அவ்வமைப்புகள் தங்களது பணிகளை செவ்வனே செய்ய இயலா. பல்வேறு பணிகளைச் செய்வதற்குப் பல்வேறு அமைப்புகள் இருந்தால், அம்முறையமைவில் தனித்துறைப் பயிற்சி ஏற்பட்டுச் சிறந்த முறையில் இயங்க முடியும்.

### 7.1.1. அரசியல் — அமைப்பு பணி பகுப்பாய்வு

அரசியல் அமைப்பு பணிப் பகுப்பாய்வைச் செயல்படுத்தியவர்களில் வில்லியம் மைக்கேல், டேவிட் ஆப்டர் மற்றும் கேபரியல் ஆல்மண்டு ஆகியோர் அடங்குவர். மைக்கேல் என்ற அரசியல் அறிவியல் அறிஞர் அரசியல் முறையமைவு நிலைபெற வேண்டுமானால் கீழ்க்கண்ட முக்கியப் பணிகளைச் செய்ய வேண்டுமென்கிறார்.

1. அரசியல் முறையமைவின் குறிக்கோளை வரையறுத்தல்

   செல்வங்களையும், மனித சக்தியையும் குறிக்கோளை அடைவதற்கு ஒன்று திரட்டுதல்.

   அரசியல் முறையமைவை ஒருங்கிணைத்தல்.

   தகவுகளையும், பணிகளையும் மக்களுக்கு அளித்து, அவைகளை ஏற்கும்படிச் செய்தல்.

2. ஆப்டர் அரசியல் முறையமைவு நிலைபெற ஆவண்டுமானால் மேற்கூறிய பணிகளைக் கீழ்க்கண்ட மூன்று வகையான அமைப்புகளில் செயல்படுத்த வேண்டுமென்கிறார். அவையாவன:

   1. தீர்மானம் செய்யும் அமைப்புகள்
   2. பொறுப்பேற்கும் அமைப்புகள்
   3. சார்பு அமைப்புகள்

அரசியல் அறிவியலில், ஆல்மண்டின் அமைப்பு — பணிப்பகுப்பாய்வு மிகச் சிறந்ததாக கருதப்படுகிறது. 1960ஆம் ஆண்டில் வெளியான ஆல்மண்டின் வளரும் நாடுகளில் அரசியல் என்ற புத்தகத்தில் அமைப்பு — பணிப்பகுப்பாய்வைப் பற்றி விளக்கியிருக்கிறார். இதன் சாரம் எவ்வாறு அரசியல் முறையமைவு மரபார்ந்த அரசியல் முறையமைவிலிருந்து தற்கால அரசியலுக்குத் தகுந்தபடி மாற்றிக் கொள்கிறது என்பதாகும்.

3. ஆல்மணடு அமைப்பு — பணிப்பகுப்பாய்வில் மூன்று வகையான கருத்துப்படிவங்களைப் பயன்படுத்துகிறார். அவையாவன:

   1. அடிப்படையான கருத்துப் படிவங்கள்
   2. அரசியல் பணி சார்ந்த கருத்துப் படிவங்கள்

3. வளர்ச்சி சார்ந்த கருத்துப் படிவங்கள்

அடிப்படையான கருத்துப் படிவங்களில், அரசியல் முறையமைவு, அரசியல் அமைப்புகள், அரசியல் கலாச்சாரம் போன்ற கருத்துப் படிவங்களுக்கும் விளக்கமளிக்கிறார்.

4. அரசியல் பணி சார்ந்த கருத்துப் படிவங்களில், மூன்று வகையான அரசியல் பணிகளைப் பற்றிக் கூறுகிறார். அவையாவன:

1. செயல்வல்லமை பணிகள்
2. செயல்களாக மாற்றும் பணிகள்
3. முறையமைவு பராமரிப்புப் பணிகள்

5. செயல் வல்லமை பணிகளில் நான்கு வகையான பணிகளைப் பற்றிக் கூறுகிறார். அவையாவன:

1. நடக்கையை ஒழுங்குபடுத்தும் செயல்வல்லமை
2. மக்கள் கருத்தை அறிந்து செயல்படும் செயல் வல்லமை
3. பொருள் வளங்களைப் பெறக்கூடிய செயல் வல்லமை
4. பகிர்ந்தளிக்கும் செயல் வல்லமை

அரசியல் முறையமைவிலுள்ள குடிமக்கள் நடக்கையைக் கட்டுப்படுத்துவது ஒழுங்குபடுத்தும் செயல் வல்லமையாகக் கருதப்படுகிறது. மக்களிடமிருந்து அரசியல் முறையமைவு அவர்களுக்குச் செய்ய வேண்டிய பணிகளுக்கென செல்வத்தை பெறும் செயல் வல்லமை, பொருள் வளங்களை பெறக்கூடிய செயல் வல்லமை என்று அழைக்கப்படுகிறது. மக்கள் கொள்கைத் தீர்மானங்களையும் செயல்களையும் எவ்வாறு ஏற்றுக் கொள்கிறார்கள் என்பதை அறிந்து அதற்குத் தகுந்தபடி செயல்படும் செயல்வல்லமை மக்கள் கருத்தை அறிந்து செயல்படும் செயல் வல்லமை எனப்படும். அரசியல் முறையமைவு செல்வங்களையும் பணிகளையும் சமமாகப் பங்கிட்டு அளிக்கும் செயல்வல்லமை பகிர்ந்தளிக்கும் செயல் வல்லமை என்று கூறப்படுகிறது. அரசியல் முறையமைவு தன்னை நிலைநிறுத்திக் கொள்ள வேண்டுமானால் மேற்கூறிய செயல் வல்லமைகளையும் பெற்றிருக்க வேண்டுமென்று ஆல்மண்டு கூறுகிறார்.

6. அடுத்தபடியாக, செயல்களாக மாற்றும் பணிகளில் ஆறு வகையான பணிகளைப் பற்றி ஆல்மண்டு கூறுகிறார். அவையாவன:

1. நலன்களைத் தெளிவுபடுத்தும் பணி

2. நலன்களைத் தொகைபடுத்தும் பணி
3. அரசியல் செய்தித் தொடர்பு பணி
4. சட்ட உருவாக்கும் பணி
5. சட்டத்தை நடைமுறைபடுத்தும் பணி
6. சட்ட விளக்கப் பணி

அரசியல் முறையமைவு எந்த நோக்கத்துடன் பணி செய்கிறது. எந்தப் பணிகளைச் செய்யவிருக்கிறது, எந்த வகையில் மக்கள் தங்கள் கோரிக்கைகளை எழுப்பலாம் என்ற பணிகள், நலன்களைத் தெளிவுபடுத்தும் பணிகளில் அடங்கும்.

மக்களுடைய கோரிக்கைகளையும், ஆதரவுகளையும் மையமாக வைத்துச் செயல்களுக்கு முன்னுரிமை கொடுத்துப் பணிகளைச் செய்வது நலன்களைத் தொகைப்படுத்தும் பணி என அறியப்படுகிறது.

7. அரசியல் முறையமைவு மக்களுக்காக என்ன செய்திருக்கிறது மக்கள் அரசியல் முறையமைவின் பணிகளைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதைப் பற்றி அறிந்து செயல்படும் பணி அரசியல் செய்தித் தொடர்பு பணி எனப்படும்.

சட்டத்தை உருவாக்கும் பணிகளில் நான்கு நிலைகள் இருக்கின்றன. அவையாவன:

1. மசோதாக்களைத் தாக்கல் செய்தல்
2. மசோதாக்களைத் திருத்துதல்
3. மசோதாக்களைச் சட்டமாக்காது தடுத்தல்
4. மசோதாக்களைச் சட்டமாக்குதல்

8. சட்டத்தை நடைமுறைப்படுத்தும் பணியில் ஐந்து விதமான அதிகாரவர்க்கங்கள் செயல்படுகின்றன. அவையாவன:

1. பிரதிநிதித்துவ அதிகார வர்க்கம்
2. இராணுவ ஆதிக்க அதிகார வர்க்கம்
3. கட்சி ஆதிக்க அதிகார வர்க்கம்
4. அதிபர் ஆதிக்க அதிகார வர்க்கம்
5. ஆளும் அதிகார வர்க்கம்

பிரதிநிதித்துவ அதிகார வர்க்கம் உள்ள நாடுகளில் மக்களின் பிரதிநிதிகள் சட்டங்களை செயல்படுத்துவதில் செல்வாக்குப் பெற்றிருப்பார்கள். உதாரணமாக இந்தியாவைக் கூறலாம். இராணுவ ஆதிக்க அதிகார வர்ககம் உள்ள நாடுகளில் சட்டங்களைச் செயல்படுத்துவதில் இராணுவம் ஆதிக்கத்தைச் செலுத்தும். உதாரணமாக, பாகிஸ்தானைக் கூறலாம். கட்சி ஆதிக்க அதிகார

வர்க்கம் உள்ள நாடுகளில் சட்டங்களைச் செயலாக்குவதில் கட்சி மிகச் செல்வாக்குப் பெற்றிரக்கும். உதாரணமாக சோவியத் நாட்டைக் கூறலாம். அதிபர் ஆதிக்க அதிகார வர்க்கம் உள்ள நாடுகளில் சட்டங்களைச் செயலாக்குவதில் முக்கிய பங்கை வகிப்பார். உதாரணமாக அமெரிக்க ஐக்கிய நாட்டைக் கூறலாம். ஆளும் அதிகார வர்க்கம் உள்ள நாடுகளில் அதிகார வர்க்கமே சட்டத்தைச் செயலாக்குவதில் முக்கிய பங்கை வகிக்கும். உதாரணமாக பிரிட்டிஷ் இந்தியாவைக் கூறலாம்.

9. சட்டங்களுக்கு விளக்கமளிக்கும் பணி சட்ட விளக்கப்பணி எனப்படும். எல்லா அரசியல் முறையமைவுகளும், நிலை பெற்றிருக்க மேற்கூறிய ஆறு பணிகளைச் செய்ய வேண்டுமென்று ஆல்மண்டு கூறுகிறார்.

முறையமைவு பராமரிப்பு மற்றும் ஏற்புப் பணிகளில் இரண்டு பணிகள் அடங்கும். அவையாவன:

1. அரசியல் சமூகமாக்கல்
2. அரசியல் ஆட்சேர்ப்பு

அரசியலுக்குத் தொடர்புடைய தகவுகளையும், மனப்பாங்குகளையும், நடக்கை நெறிகளையும் மக்கள் கற்றுக்கொள்வது சமூகமாக்கல் எனப்படும். நல்ல பிரதிநிதிகளை அரசியல் முறையமைவை ஆளுவதற்கு தேர்ந்தெடுப்பது அரசியல் ஆட்சேர்ப்பு எனப்பபடும். இவ்விரண்டு பணிகளும் முறையமைவு பராமரிப்புக்கு மிக அவசியமான பணிகளாகும்.

10. வளர்ச்சிப் பணிகளை ஆல்மண்டு இரண்டு வகையாகப் பிரித்திருக்கிறார். அவையாவன:

1. அமைப்புப் பாகுபாடு சார்ந்த பணிகள்
2. கலாச்சார பேதமின்மை சார்ந்த பணிகள்

அரசியல் முறையமைவு பணிகளைச் செய்வதற்குப் பல்வேறு அமைப்புகள் இருக்கின்றன. இவ்வமைப்புகளைப் பாகுபாடு செய்து ஒரு குறிப்பிட்ட அமைப்பு, குறிப்பிட்ட சில பணிகளைச் செய்வதற்கு வகை செய்ய வேண்டும். அவ்வாறு செய்தால், அமைப்புகளில் தனித்துவ வல்லமை பெறுகி, அம்முறையமைவு வளர்ச்சி பெறும் என்று ஆல்மண்டு கூறுகிறார். அதற்க அடுத்தபடியாக குறுகிய கண்ணோட்டம் கொண்ட அரசியல் பிரச்சனைகளை அணுகாமல், கலாச்சார பேதமின்மையோடு, பிரச்சனைகளை அணுகினால், அரசியல்

பிரச்சனைகள் மிகச் சுலபமாகத் தீர்க்கப்பட்டு அரசியல் முறையமைவில் வளர்ச்சி ஏற்படும் என்று ஆல்மண்ட கூறுகிறார்.

ஆல்மண்டு போவெலும் அரசியல் வளர்ச்சி ஏற்பட வேண்டுமென்றால் நான்கு வகையான பிரச்சனைகளை அரசியல் முறையமைவு தீர்த்து வைக்க வேண்டுமென்கிறார்கள். அவையாவன:

1. அரசைப் பலப்படுத்தும் பிரச்சனை
2. தேசிய உணர்வை வளர்க்கும் பிரச்சனை
3. பங்கேற்கிற பிரச்சனை
4. பகிர்ந்தளிக்கும் பிரச்சனை

அரசியல் முறையமைவில் பல்வேறு அமைப்புகள் ஏற்படுத்தி ஒவ்வொரு அமைப்பும் தனித்தனியான பணிகளைச் செய்யவைக்கும் பிரச்சனை "அரசைப் பலப்படுத்தும் பிரச்சனை எனப்படும். பிரச்சனைகளை குறுகிய கண்ணோட்டம் கொண்டு அணுகாமல் தேசிய உணர்வோடு அணுகும் பிரச்சனை தேசிய உணர்வை ஏற்படுத்தும் பிரச்சனை" யாகும். பிரச்சனைகளைத் தீர்த்து கொள்கைகளை வகுப்பதில் மக்களைப் பங்கேற்கச் செய்யும் பிரச்சனை 'பங்கேற்க வைக்கிற பிரச்சனை'யில் அடங்கும். பொருள் வளங்களையும் பணிகளையும் சமமாகப் பங்கிட்டு அளிக்கும் பிரச்சனை 'பகிர்ந்தளிக்கும் பிரச்சனை' எனப்படும். அரசியல் முறையமைவில் வளர்ச்சி ஏற்பட வேண்டுமானால் மேற்கூறிய பிரச்சனைகளை அரசியல் முறையமைவு தீர்த்து வைக்கவேண்டும்.

**திறனாய்வு**

ஆல்மண்டின் அமைப்பு – பணிப்பகுப்பாய்வில் பல்வேறு குறைபாடுகள் இருப்பதாக அரசியல் விஞ்ஞானிகள் கருதுகிறார்கள். முதலாவதாக, இந்தப் பகுப்பாய்வு முறையின் நோக்கம் தற்போதைய மேற்கத்திய நாடுகளிலும், அமெரிக்காவிலும் நிலவும் முதலாளித்துவ அரசியல் முறையைப் பேணிப் பராமரிப்பதேயாகும் எனப் பொதுவுடைமைவாதிகள் இதைக் கடுமையாக எதிர்க்கிறார்கள். அரசியல் முறையமைவிலுள்ள எல்லா உறுப்புகளிடையேயும் ஒரு சமநிலையை ஏற்படுத்தி அந்த முறையமைவிற்கு உறுதிப்பாட்டை அளிப்தே இந்தப் பகுப்பாய்வின் முக்கிய நோக்கமாகும். ஆனால் சுரண்டும் வர்க்கம், சுரண்டப்பட்ட வர்க்கம் ஆகிய உள் உறுப்புகளிடையே சமநிலை ஏற்பட முடியாது என்பது பொதுவுடைமை வாதிகளின் வாதமாகும்.

இரண்டாவதாக, நடைமுறையிலுள்ள அரசியல் முறைமைவுகளின் உறுதி, பராமரிப்பு ஆகியவை மட்டும் இந்த பகுப்பாய்வில் முக்கிய

கொள்கைகளாக இருப்பதனால், சமுதாய, அரசியல் மாற்றத்தைப் பற்றி அறிய உதவும் பகுப்பாய்வை அடியொடு புறக்கணித்து விட்டது.

மூன்றாவதாக, இந்தப் பகுப்பாய்வு முறை அரசியல், கலாச்சாரம் மொழி ஆகியவற்றில் ஒருமைப்பாடுடைய மேற்கத்திய அரசியல் முறையமைவுகளை ஆய்வு செய்யப்பயன்படுமே தவிர ஒருமைப்பாடு அடையாத ஆப்பிரிக்க, ஆசிய நாடுகளின் அரசியல் முறையமைவுகளை ஆய்வு செய்யப்பயன்படாது. மாறாக மேற்கத்திய அரசியல் முறையமைவு மாதிரிப் படிவத்தை வளர்ந்து வரும் நாடுகளில் புகுத்துவதே இந்த ஆய்வு முறையின் முக்கிய நோக்கமாகும்.

மேற்கத்திய குறைபாடுகள் இருப்பினும் இந்தப் பகுப்பாய்வு முறைக்குள்ள முக்கியத்துவத்தை நாம் குறைத்து மதிப்பிடக்கூடாது. எடுத்துக்காட்டாக, சமூக அரசியல் மாற்றத்தைப் பற்றி இந்தப் பகுப்பாய்வு எதுவும்கூறுவதில்லை எனக் கூற முடியாது. மாற்றத்தை இப்பகுப்பாய்வு எதிர்க்கவில்லை. மாற்றம் அவசியம் தேவை. ஆனால் அம்மாற்றம் காலப்போக்கில் அமைதியான முறையில் ஏற்பட வேண்டுமென்பதே இதன் அடிப்படை நோக்கமாகும். மேலும், அமைப்பு பணிப்பகுப்பாய்வு முறை வளர்ச்சியடைந்த நாடுகளின் அரசியல் முறையமைவைக் கூர்ந்து பகுப்பாய்வு செய்வதற்கு ஒரு சிறந்த முறையாகும் என்பதில் சந்தேகமில்லை.

## திறனும் அதிகாரமும்

ஓர் அரசியல் முறையமைவில் மனித உறவுகளில் அதிகாரம், வலிமை, தலைமை ஆகியவை ஒன்றோடு ஒன்று தொடர்படைய அம்சங்களாக அமைகின்றன. அரசியல் அறிவியலில் அதிகாரம், அதிகாரத்துவம், தலைமை, செல்வாக்கு, கட்டுப்பாடு, அறிவுறுத்தல் போன்ற சொற்கள் அடிக்கடி பயன்பட்டு வருகின்றன. இச்சொற்கள் மிகவும் தெளிவான பொருளை உணர்த்துவதில்லை. இச் சொற்களின் பொருள் விளக்கம் அளிப்பதில் அரசியல் அறிவியலாளர்களிடையே கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. இவ்வத்தியாயத்தில் வலிமை அல்லது திறன் மற்றும் அதிகாரம் பற்றிக் காணலாம். இவ்விரண்டு சொற்களையும் சில எழுத்தாசிரியர்கள் சமமாகப் பாவித்த போதிலும் அவற்றிடையே தெளிவான வேறுபாடுகள் உள்ளன.

திறன் என்னும் சொல்லிற்குத் தெளிவான விளக்கம் அளிப்பதில் கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. அச்சொல் சமுதாய, பொருளாதார, அரசியல், உளவியல் மற்றும் சமய ரீதியான பொருளை உணர்த்துவதாகச் சொல்லப்படுகிறது. திறன் என்பது ஒருவிதமான மனித உறவுமுறை என்கிறார் பிரட்ரிட்ச். ஒரு நபர் அல்லது நபர்களின், குழு

மற்றவர்களின் விருப்பங்களையும் நடத்தையையும் மாற்றி அமைக்கும் வலிமை பெற்றருந்தால் அதுவே திறன் எனும் விளக்கத்தை டால் என்னும் அறிஞர் கூறுகிறார். திறன், செல்வாக்கு ஆகிய இரண்டமே ஒன்று என்னும் கருத்ததை லாஸ்வெல் கூறுகிறார்.

### 7.1.2. அதிகாரக் கோட்பாடு

திறன் பற்றிய கோட்பாடு தேசிய அளவிலும் சர்வதேச அளவிலும் முக்கியத்துவம் பெற்றுவிட்டது. செயலின் மையமே திறன்தான். அரசியல் கட்சிகளும் தலைவர்களும் திறனைப் பெறக் கடினமான முயற்சிகளை மேற்கொள்கின்றனர். பன்னாட்டளவில் நாடுகளிடையே திறனைப் போட்டி நடைபெறுகிறது. பன்னாட்டு அரசியலே நாடுகளிடையிலான வலிமைக்கான போட்டியே எனும் கருத்தை மார்கன்தோ வலியுறுத்துகிறார். அரசியல் என்பது அரசாங்கத்தைப் பற்றிய படிப்பு எனும் கருத்து ஒருகாலத்தில் நிலவியது. இன்று அது திறன் பற்றிய படிப்புக்காகக் கருதப்படுகிறது. திறன் எவ்வாறு பெறபட்டு நடைமுறைப்படுத்தப்பட்டுக் கட்டுப்படுத்தப்படுகிறது என்பவற்றை ஆய்வு செய்வதே அரசியல். எனவே, அரசியலில் வலிமைக் கோட்டுபாடு முக்கியத்துவம் பெறுகிறது.

### 7.1.3. திறன் மூலங்கள்

திறன் எவற்றின் வாயிலாகப் பெறப்படுகின்றனவோ அவற்றை திறன் மூலங்கள் எனலாம். தற்கால தாராள மக்களாட்சிகளில் அரசியலமைப்பிலிருந்து அரசாங்கத்தின் அங்கங்கள் திறனைப் பெறுகின்றன. எனவே அரசியலமைப்பு மேலாண்மை பெற்று திகழ்கிறது. சான்றாக, இந்திய ஜனாதிபதி, பிரதமர் ஆகியோரத அதிகாரங்களும், பாராளுமன்றம் மற்றும் நீதித்துறை ஆகியவற்றின் அதிகாரங்களும் இந்திய அரசியல அமைப்பிலிருந்து பெறப்படுகின்றன. சில அரசியல் முறையமைவுகளில் திறன் துப்பாக்கி முனையிலிருந்து பிறப்பதாக மாசேதுங் குறிப்பிட்டார். ஆனால், உண்மை அன்பு மற்றும் அமைதி வழிமுறை ஆகியவையே வலிமையின் மூலங்கள் என காந்தி கருதினார். இவ்வாறு திறன் மூலங்கள் பற்றி வெவ்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன.

### 7.1.4. திறனின் தன்மைகள்

அதிகாரத்திற்கெனச் சில் குறிப்பிட்ட குணநலக் கூறுகள் காணப்படுகின்றன. போட்டியில வெல்லுகின்ற திறமையை அது பெற்றுள்ளது. பிறருடைய விருப்பம் மற்றும் செயல்களைக் குறிப்பிட்ட விதத்தில் அமைத்துவிடுகின்ற சக்தியையும் திறன் பெற்றுள்ளது. திறனை வைத்திருப்பவர் தமது விருப்பப்படி மற்றோரைச் செயல்படச் செய்யமுடியும்.

திறனைச் சட்டரீதியாக மட்டுமின்றி ஏமாற்று வழிகளிலும் பெறலாம். திறன் முறைசார்ந்ததாகவும் முறை சாராததாகவும் இருக்கலாம். இது ஒரு தனி மனிதனின் செல்வாக்கு அல்லது செயல்பாடுகளின் அடிப்படையில் அவருக்குக் கிடைக்கலாம். வலிமை என்பது உடைக்க முடியாத திட வடிவமான பொருள் என்று கூடச் சிலர் குறிப்பிடுவதுண்டு. இக்கருத்தினைக் கூறுவோர் திறனைக் கூறுபோட முடியாது எனவும் கருதுகின்றனர். ஆனால், கூறுபோட முடியும் எனக் கருதுபவர்களும் உள்ளனர். கூறுபோட முடியாத மொத்த வடிவினது எனக் கருதுவது அபாயகரமானது என அ.ராபர்ட் டால் என்னும் அரசியல் அறிவியலாளர் சுட்டிக் காட்டுகிறார்.

### 7.1.5. அரசுபற்றிய வலிமைக் கோட்பாடு

அரசு வலிமை பெற்றுத் திகழ்கிறது. மிக அதிகமான அளவு திறனைப் பெருக்கிக் கொள்ளுவதே அரசின் நோக்கம் என அரசு பற்றிய வலிமைக் கோட்பாடு கூறுகிறது. தனி நபர்களிடையே எழுகின்ற போட்டிக்கு திறனே அடிப்படைக்காரணம் என தாமஸ் ஹாப்ஸ் குறிப்பிடுகிறார். திறனும் திறன் வேட்கையும் ஹெகலால் உயர்வாகக் குறிப்பிடப்படுகின்றன. பன்னாட்டு அரசியலில் வலிமைக் கோட்பாட்டை முக்கியமானதாகக் கூறுகிறார் மார்கன்தோ. திறன் மோகம் வாழ்க்கையிலிருந்து பிரிக்கமுடியாது என்பதையும் அவர் வலியுறுத்துகிறார். போர் இடைக்காலத்தில் ஜெர்மனியிலும் இத்தாலியிலும் வலிமையுடன் எழுந்த வன்முறைக் கொள்கைகளான நாசிசமும் பாசிசமும் வலிமைக் கோட்பாட்டின் அடிப்படையில் எழுந்தவை. பொதுவுடைமை நாடுகளின் வலிமைக் கோட்பாடு நடைமுறைப் படுத்தப்படுவதாகச் சுட்டிக் காட்டப்படுகிறது.

## 7.2. அதிகாரத்துவம் (Authority)

#### பொருள்

திறனை ஒழுங்குபடுத்துவதே அதிகாரம் எனலாம். சட்ட ரீதியான வழிமுறைகளில் அதிகாரம் நியாயப்படுத்துகிறது. பாரம்பரியம் வரலாற்று ரீதியான நிறுவனங்கள், சமுதாயத்தின் தகவுகள் ஆகியவற்றின் வாயிலாக அதிகாரம் திறனை நியாயப்படுத்தலாம். அதிகாரத்திற்கெனச் சில நுட்பமான வழிமுறைகள் உள்ளன. சட்ட ரீதியான ஆணைகள், நீதிப்பேராணைகள், விதிகள், ஒழுங்குமுறைகள், துணை விதிகள் ஆகியவை அதிகாரத்தைப் பிரதிநிதித்துவப் படுத்துகின்றன. இவற்றின் வாயிலாக அதிகாரம் வெளிப்படுத்தப்படுகிறது. சான்றாக, சாலையில ஓடுகின்ற ஒரு காரைக் காவல்துறை அலுவலர் நிறுத்தி, அந்தக் காரோட்டியின் காரோட்டும் உரிமம் சரியாக இருக்கிறதா எனச் சோதனை செய்கிறார். அதற்கு அவருக்கு அதிகாரம் உண்டு. அந்த அதிகாரத்தைச் சில போக்குவரத்துத் தொடர்பான விதிகளின் வாயிலான அதிகாரத்தின்

மூலம் அரசாங்கம் அவருக்கு வழங்கியுள்ளது. எந்தநபர் வேண்டுமானாலும் காரை ஓட்டிச் செல்பவரை நிறுத்திச் சோதனை செய்யமுடியாது. அதற்கான அதிகாரம் பெற்றவர்கள் மட்டுமே செய்யமுடியும். அந்தத் திறனை நியாயப்படுத்துவது அதிகாரம். அதிகாரமில்லாத திறனிற்கு கீழ்படியவேண்டும் என்ற அவசியமில்லை.

அதிகாரத்தின் வழிமுறை திறன் எனலாம். அதிகாரத்தின் எல்லைக் கோடுகளுக்குள் செயல்படும் போது திறன் நியாயப்படுத்தப்படுகிறது. அது சட்டரீதியாகவும் அமைகிறது. மேற்கூறப்பட்ட உதாரணத்தில் அமைந்துள்ளது போல் காவல்துறை அலுவலர் காரோட்டியின் காரோட்டும் உரிமத்தைச் சோதிக்கும் போது அது முறையாக இல்லை எனக்கண்டபிடித்தால், விதிகளின்படி அந்த நபர் மீது நடவடிக்கை எடுக்க அவருக்கு அதிகாரம் உண்டு. ஆனால், அந்த அலுவலர் அந்த இடத்திலேயே காரோட்டியைக் கட்டிக்போட்டு அடிப்பது அவரது அதிகாரத்தை மீறிய திறன். அவ்வாறு செய்ய அதிகாரத்தின் மூலம் நியாயப்படுத்தப்பட்டால்தான் மக்கள் மன விருப்பத்துடன் அதற்குக் கீழப்படிவர். அதிகாரத்தின் வாயிலாக ஆட்சி செலுத்துவதே பலவிதங்களில் நன்மை பயக்கும் எனலாம்.

**ஒப்பீடு**

திறன், அதிகாரம், ஆகியவை வெவ்வேறான சொற்கள், எனினும், சில சமயங்களில் அவை சமபொருட் சொற்களாக பயன்படுத்தப்படுகின்றன. அவ்வாறு சமபொருட் சொற்களாகப் பயன்படுத்துவதைத் தவறு எனப் பல அறிஞர்கள் சுட்டிக் காட்டுகின்றனர்.ஒருவரிடம் உள்ள ஆளுகின்ற மற்றும் முறைசெய்கின்ற உரிமையே அதிகாரம் என்னும் விதத்தில் வெப்ஸ்டரின் ஆங்கில அகராதி பொருள் கூறுகிறது. பதவியின் காரணமாகப் பிறரைக் கீழ்ப்படியச் செய்யும் உரிமையை அதிகாரம் எனலாம். திறன் அல்லது வலிமை என்பது கட்டாயப்படுத்துதல் அல்லது வன்முறையின் கருவி. ஆனால் அதிகாரம் ஒப்புதலின் அடிப்படையில் அமைவதாகும்.

## அரசியல் செல்வாக்கு

அரசியல் விஞ்ஞானிகள் திறன், செல்வாக்கு, அதிகாரம், கட்டுப்பாடு இணங்க வைத்தல், சக்தி முதலிய சொற்களை பயன்படுத்துகிறார்கள். ராபர்ட் டால் என்பவர் இச்சொற்களைச் செல்வாக்குச் சொற்கள் என்று கூறுகிறார். இந்தச் சொற்கள் அரசியல் பகுப்பாய்வுக்கு மிக முக்கியமானவை.

செல்வாக்கு என்பது மனிதர்களுக்கிடையே ஏற்படும் தொடர்புறவுகளைக் குறிக்கும் செல்வாக்கு என்பது ஒருவர் எதை விரும்புகிறார், மற்றவர் எதை செய்கிறார் என்ற காரண காரிய

தொடர்பைக் குறிக்கும் என்பவர் சிலர். செல்வாக்கு என்பது எவ்வாறு, ஒருவர் தான் விரும்பியதை மற்றவர்களால் ஒரு குறிப்பிட்ட விதத்தில், செயல்படச்செய்து அடைகிறார் என்பதை குறிக்கும் என்பார் சிலர்.

### 7.2.1. வெளிப்படையான செல்வாக்கும், உள்ளார்ந்த செல்வாக்கும்

'A' என்பவர் 'X' என்ற பொருளை விரும்புகிறார். ட என்பவரை ஒரு குறிப்பிட்ட விதத்தில் செயல்செய்யச் செய்து X என்ற பொருளை A பெருகிறார். இது வெளிப்படையான செல்வாக்கு எனப்படும். A அப்பொருளை அடைவதற்கு அவர் சொல்லாமலே B என்பவர் வகை செய்கிறார். இவ்விதமான செல்வாக்கு உள்ளார்ந்த செல்வாக்கு எனப்படும். வெளிப்படையான செல்வாக்கை மிக எளிதாக புரிந்து கொள்ளமுடியும். உள்ளார்ந்த செல்வாக்கை புரிந்து கொள்வது கடினம்.

### 7.2.2. டாலின் பகுப்பாய்வு
**செல்வாக்கின் பரப்பும், நோக்கெல்லையும்**

செல்வாக்கு பரப்பு என்பது ஒருவர் எத்தனை நபர்களை செல்வாக்கு படுத்த முடியும் என்பதை குறிக்கும். நோக்கெல்லை என்பது எந்த எந்த விசயங்களில் ஒருவர் மற்றொருவர்களை செல்வாக்கு படுத்தமுடியும் என்பதை குறிக்கும்.

சிலர் மற்றவர்களைவிட செல்வாக்கு பெற்றவர்களாக இருப்பதற்கு ராபர்ட் டால் மூன்றுவிதமான காரணங்களை கூறுகிறார். அவையாவன.

1. சிலர் மற்றவர்களைவிட அதிக அரசியல் வாய்ப்புகளை பெற்றிருப்பது.
2. இரண்டாவதாக, சிலர் தமக்கு கிடைக்க இருக்கக் கூடிய அரசியல் வாய்ப்புகளில் அதிகஅளவு வாய்ப்புகளை அரசியல் செல்வாக்கு பெற பயன்படுத்துவது.
3. கடைசியாக, சிலர் தமக்கு கிடைத்திருக்கக்கூடிய போதிய வாய்ப்புகளை மிகத்திறமையாக பயன்படுத்துவது.

## 7.3. செல்வாக்கை அளவிடல்

ராபாட்டால் செல்வாக்கை அளவிடவும், ஒப்பிடவும் ஐந்துவகையான அடிப்படை முறைகளை கூறியிருக்கிறார்.

1. ஒருவருடைய தகுதியில் எந்தஅளவு செல்வாக்கை பயன்படுத்தி மாற்றத்தை கொண்டுவர முடியும் என்று கண்டறிதலால்

செல்வாக்கை அளவிடலாம். அதாவது ஒருவர் மற்றவரை சிறிதளவு செல்வாக்கு படுத்த முடிகிறதா, அதிக செல்வாக்கு படுத்த முடிகிறதா அல்லது மிக அதிகமாக செல்வாக்கு படுத்த முடிகிறதா என்பதை கண்டறிதல்.

2. உளவியல் ரீதியான ஒருவர் மற்றொருவரிடம் தாம் சொல்லியதை ஏற்க வைக்கிறார் என்பதை ஒப்புக்கொண்டு அவரது செல்வாக்கை அளவிடலாம். உளவியல் ரீதியாக ஒருவர் நடத்தையில் மற்றொருவர் மாற்றம் கொண்டு வருவது மிகக்கடினமான செயலாகும்.

3. ஒருவருடைய செல்வாக்குக்கு எத்தனை பேர் செவிமடுக்கிறார்கள் என்பதை கண்டறிதல்.

4. எவ்வளவு தூரம் எதிர்பார்த்து, எவ்வளவு தூரத்திற்கு மாற்றத்தை கொண்டுவர முடிந்திருக்கிறது என்பதை அளவிடல்.

5. ஒருவரால் எவ்வளவு தூரம் தன் செல்வாக்கு மற்றவர்களிடம் மாற்றத்தை கொண்டுவர முடிந்திருக்கிறது என்பதை அளவிடல்.

### 7.3.1. செல்வாக்கின் வகைகள்

செல்வாக்கை கீழ்கண்ட வகைகளாக பிரிக்கலாம்.

1. பயிற்சி வழிக்கட்டுப்பாடு
2. இனங்கவைத்தல்
3. தூண்டுதல்
4. திறன்
5. கட்டாயப்படுத்துதல்
6. உடல் ஆற்றல்

முன்பே மக்களை தூண்டி இனங்கவைக்கும் செல்வாக்கு பயிற்சி வழிக்கட்டுபாட்டில் அங்கும் இனங்கவைத்தலை பகுத்தறிவு ரீதியாக இனங்கவைத்தல், செல்வாக்கை பயன்படுத்தி இனங்கவைத்தல் என்று இரண்டு வகைகளாக பிரிக்கலாம்.

### 7.3.2. திறன் நாடிகளும் திறனுடைய தலைவர்களும்

அரசியல் வாழ்வில் சில நபர்கள் மற்றவர்களைவிட அதிகமான சுறுசுறுப்பான திறனை நாடுவதும், சிலர் மற்றவர்களை விட அதிகமான திறனைப்பெறுகிறார்கள் என்பதும் கண்கூடு. இவ்வாறு அரசியல் கலத்தல் திறன் நாடிகளை கொண்ட ஒரு துணைக்களமும், திறனுடைய தலைவர்களைக்கொண்ட ஒரு நுணைக்களமும், அமைந்திருத்தலைக் காணலாம்.

திறனை நாடுவதற்கும், திறனை பெறுவதற்கும் இடையே ஒரு வேறுபாடு இருக்கிறது என்று டால் சுட்டிக்காட்டி இருக்கிறார். இவருடைய கருத்தின்படி, சில திறன் நாடிகள் திறனை பெறுதலில் வெற்றிபெறாமல் போய்விடுவது மட்டுமின்றி, திறனை பெறுகின்ற சிலர் உண்மையிலேயே, திறனை நாடி செல்பவர்களும் அன்று என்பது தெரியவருகிறது. இக்கருத்து, இருவகையான கேள்விகளை ஏற்படுத்துகிறது. ஏன் சில நபர்கள் மற்றவர்களை விட அதிகமான திறனை நாடுகிறார்கள்? ஏன் சில நபர்கள் மற்றவர்களை விட அதிகமான திறனை பெறுகிறார்கள்?

முதலாவது கேள்விக்கு விடையளிக்கும் முகமாக, டால் கீழ்கண்ட காரணங்களை குறிப்பிடுகிறார். ஏன் சில நபர்கள் அதிகமான திறனை நாடுகின்றனர்?

(i) மனிதர்கள் பொது நன்மையை அடையும்பொருட்டு அதிகமான திறனை நாடுகின்றனர்.

(ii) மனிதர்கள் தங்களுடைய சுய விருப்புகளை பூர்த்திசெய்து கொள்வதற்காக திறனை நாடுகிறார்கள்.

(iii) மனிதர்கள் தங்களுடைய உணர்விலா உள்நோக்கங்களின் விளைவாக திறனை நாடுகிறார்கள்.

லாஸ்வெல் கூறியபடி திறன் நாடி என்பவன் திறனை பெறுவதற்கு அதிக மதிப்பு அளிப்பவன். தனக்காக (மற்ற வளங்களையும்) திறனையும் நாடுபவன். தன்னால் அதிக திறனை பெற முடியும் என்பதை நம்புகிறவன், திறனை பெறுவதற்கான ஆற்றல்களை வேண்டிய தேர்ச்சியை பெறுகிறவன் ஆவான்.

டால் தமது இரண்டாவது கேள்விக்கு கீழ்கண்ட காரணங்களை குறிப்பிடுகின்றார். ஏன் சில நபர்கள் மற்றவர்களைக்காட்டிலும் அதிகமான திறனைப்பெறுகி, றன ர.?

(i) முதலாவது காரணம்: சில நபர்கள் மற்றவர்களைக் காட்டிலும் அதிகமான வளங்களை, திறனை பெறுவதற்காகப் பயன்படுத்துகின்றனர். இதற்கு காரணம் என்னவெனில்,

(ii) அவர்கள் இவ்வாறு செய்வதன் மூலம் அதிகமான திறனை பெறலாம் என எதிர்பார்க்கின்றனர்.

(iii) அவர்கள் அதிக வளங்களுக்குரிய வாய்ப்புரிமை பெற்றிருக்கின்றனர். மற்றவையெல்லாம் சமமாக இருக்கும்பொழுது அதிக வளங்களை உடையவர் கூடுதலான திறனை பெறுபவர்கள் என்று எதிர்பார்ப்பதில் நியாயம் இருக்கத்தான் செய்கிறது.

ஆனால் டால் குறிப்பிடுகிறார். 'அவர்களுடைய வளங்கள் யாவும் ஒன்றுபோல் இருந்தால் கூட மற்ற எல்லாக் காரியங்களும் வழக்கமாக சமமாக இருப்பதில்லை' கி என்பவன் வளங்களைப் பயன்படுத்துவதால் கிடைக்கும் விளைவுகள் மீது கி யைக் காட்டிலும் உயர்ந்த மதிப்பை அளித்தால், அவன் திறனைப்பெறுவதற்காக தன்னுடைய வளங்களில் அதிகமான பங்கினை பயன்படுத்தக்கூடும். ஏன்?

(i) A என்பவன் B யிலிருந்து மாறுபட்ட விளைவுகளை எதிர்பார்க்கலாம்.

(ii) A, B இருவருக்கும் ஒரே மாதிரியான விளைவுகளை எதிர்பார்த்தால் கூட இருவரும் வளங்களை மதிப்பீடு செய்ய வெவ்வேறு மதிப்பீட்டு முறையை பயன்படுத்தலாம்.

(iii) இருவரும் ஒரே மாதிரியான விளைவுகளை எதிர்பார்த்தால் கூட, A, B யை விட விளைவின் மீது அதிக நம்பிக்கையை கொண்டிருக்கலாம்.

(iv) இரண்டாவது காரணம்: திறனைப்பெறுவதற்காக வளங்களை பயன்படுத்தும் திறமை அல்லது நுட்பங்களில் காணப்படும் வேறுபாடுதான், சில நபர்கள் மற்றவர்களை விட அதிக திறனை பெறுவதற்கான இரண்டாவது காரணமாகும். சிலர் தங்களுக்கிருக்கும் எந்த வளங்களையும் அதிகத்திறமையுடனும், ஆற்றலுடனும் பயன்படுத்திவிடுகின்றனர். இதற்கு காரணம் என்னவெனில், சிலர் மற்றவர்களைக்காட்டிலும் அதிகமான திறமையை அல்லது ஆற்றுப்படுத்தும் நுட்பங்களை பெற்றிருக்கின்றனர். சிலர் மற்றவர்களைக்காட்டிலும் அதிகமான நுட்பங்களைப் பெற்றிருப்பதற்கு பல்வேறு காரணங்களை குறிப்பிடலாம். அவையாவன: (1) பிறப்பின் அடிப்படையில் ஏற்பட்ட வேறுபாடுகள் (2) கற்பதற்கு கிடைத்த சந்தர்ப்பங்கள் சலுகைகள் ஆகியவற்றில் ஏற்பட்ட வேறுபாடுகள் (3) கற்பதற்கு அளிக்கப்பட்ட தூண்டுதல்களினால் ஏற்பட்ட வேறுபாடுகள். இவைகளில் முதல் இருவகை வேறுபாடுகளும் சுற்றுப்புற சூழல்களில் தோன்றிய வேறுபாடுகளாகவும் மூன்றாவது வகைவேறுபாடுகள் செயல் நோக்கமளித்தலில் தோன்றிய வேறுபாடுகளாகவும் கருதப்படுகின்றன.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகள்

அ) அமைப்பு – பணிப்பகுப்பாய்வு பற்றி குறிப்பு வரைக.

ஆ) திறன் மூலங்களை விவரிக்க.

இ) அதிகாரத்துவம் பொருள் பற்றி விளக்குக.

ஈ) செல்வாக்கு – டாலின் பகுப்பாய்வு பற்றி ஆராய்க.

உ) செல்வாக்கு எவ்வாறு அளவிடப்படுகிறது?

ஊ) செல்வாக்கின் வகைகள் யாவை?

## 7.4. தொகுப்புரை

அமைப்பு – பணிப்பகுப்பாய்வு பாடப்பகுதியில் தெளிவாக விளக்கப்பட்டள்ளது. அரசியல் திறன், அதிகாரம், அரசியல் செல்வாக்கு ஆகியவை எவ்வாறு அரசியல் அறிவியல் முக்கிய பங்கு வகிக்கிறது என்பதையும் இப்பாடம் நன்கு விவரிக்கிறது.

## 7.5. முக்கிய வார்த்தைகள்

1. திறன் — மனித உறவு
2. அதிகாரம் — வலிமை
3. செல்வாக்கு — மனிதர்களுக்கிடையில் உள்ள தொடர்பு

## 7.6. பரிந்துரைக்கப்பட்ட நூல்கள்

1. C.B.Macpherson, Democratic Theory, Essay in Retrieveal, Oxford, The Charendon Press – 1977.

2. S.Ramaswamy, Political Theory, Ideas and Concepts, Delhi Macmillan 2002.

3. D.Held, Political Theory Today, Cambridge, Polity Press – 1991.

## 7.7. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவு சோதனைக் கேள்விகளுக்கான பதில்கள்

| | |
|---|---|
| கேள்வி எண். 1 | பதில் எண். 7.1. |
| கேள்வி எண். 2 | பதில் எண். 7.1.3. |
| கேள்வி எண். 3 | பதில் எண். 7.2. |
| கேள்வி எண். 4 | பதில் எண். 7.2.2 |
| கேள்வி எண். 5 | பதில் எண். 7.3. |
| கேள்வி எண். 6 | பதில் எண். 7.3.1. |

## 7.8. மாதிரிக் வினாக்கள்

1. அமைப்பு பணிப்பகுப்பாய்வில் பயன்படுத்தப்படும் கருத்துக்களைத் திறனாய்வு செய்க.
2. அதிகாரம் — திறன் ஒப்பீடு செய்க
3. அரசியல் வாக்கு பற்றி விவரிக்க.

# அலகு – 8

# அரசியல் குழு – குழக்கோட்பாடு:

# அரசியல் உயர்ந்தோர் குழாம்

## அறிமுகம்

தற்கால அரசியல் பகுப்பாய்வில் குழுக்கோட்பாடு என்பது முக்கியத்துவம் பெற்று வருகிறது. பொதுவாக, இது உளவியல் வல்லுனர்கள், தத்துவஞானிகள், பொருளாதார வல்லுனர்கள், நீதியியல் சார்நதவர்கள் போன்றோரால் சிறப்பாகப் பயன்படுத்தப்பட்டது. இன்று விரிவாகப் பேசப்படும் குழுக்கோட்பாட்டிற்கு அடித்தளம் அமைத்தவர் ஆர்தர் தி.பென்ட்லி என்பாராவார். அரசியல் ஆய்வில் பல்வேறு அணுகுமுறைகள் சமுதாயத்தில் காணப்படும் குழுவை ஆய்வு அலகாக எடுத்துக் கொள்ளுதலை இது வலியுறுத்துகிறது. குழுக்கோட்பாட்டின் அம்சங்களையும் நிறை குறைகளையும் இங்கு காணலாம்.

## நோக்கங்கள்

1. குழுக் கோட்டின் முக்கியத்துவத்தை ஆய்ந்தறிதல்
2. அரசியலில் உயர்ந்தோர் குழாமின் பங்கினை கற்றறிதல்.

## வடிவமைப்பு

## 8.1. குழு அணுகுமுறை

மனிதர்களுடைய அரசியல் நடக்கை அரசியல் அறிவியலில் முக்கிய மானவொன்றாகும். அந்நடக்கையைப் பற்றி விளக்கக் குழுவாக அவர்களது செயற்பாடுகளைப் படித்தல் மிகவும் பயனளிக்கும். தற்கால அரசியல் பகுப்பாய்வில் குழு அணுகுமுறையை வகுத்தளித்தவர் ஆர்தர் பென்ட்லியாவார். சமுதாயத்தில் வடிவமைப்புகளும் தகவுகளும் காணப்படுகின்றன. இவை செயல்களுடன் தொடர்புபடுத்தப்படும் போதுதான் முக்கியத்துவம் பெறுகின்றன. மனிதர்களின் எண்ணங்கள் செயல்களாக மாற்றப்படுதல் அவசியம். அத்தகைய செயற்பாடு பெரும்பாலும் குழு வாயிலாகவே நடைபெறுகிறது. சமுதாயம், நாடு மற்றும் அரசாங்கம் ஆகியவை பல குழுக்களைக் கொண்டுள்ளன. ஒவ்வொரு குழுவும் மற்றப்பல குழுக்களுடன் தொடர்பு கொண்டு திகழ்கின்றன. சமுதாயத்தகவுகள் என்பனவற்றையும் குழுக்களின் வாயிலாகவே அடைய முடியும்.

### 8.1.1. குழுக்களின் வகைகள்

அரசியலில் பங்கேற்கின்ற குழுக்கள் விருப்பக் குழுக்கள் அல்லது தன்னலக் குழுக்கள் என்று அழைக்கப்பெறுகின்றன. இவற்றிற்கென சில தன்மைகள் உள்ளன. ஒரு குறிப்பிட்ட நலனைப் பெற ஒரே விதமான நபர்கள் இணைந்து அமைப்பது தன்னலக் குழுக்கள் ஆகும். இக்குழுக்கள் பெரும்பாலும் தங்கள் உறுப்பினர்களின் நலன்களில் மட்டுமே ஆர்வம் காட்டுகின்றன. இவை அரசியல் கட்சிகள் போல நேரடியான தீவிர அரசியலில் ஈடுபடுவதில்லை. இவற்றிற்கெனச் சில குறிப்பிட்ட வழி முறைகளில் இவை செயல்படுகின்றன. இவ்வழிமுறைகள் சமுதாயத்திற்கு சமுதாயம் மாறுபடலாம். இத்தகைய குழுக்களை அல்மாண்ட் நான்கு வகைகளாகப் பிரிகிக்கிறார். அவைகளைப் பற்றிக் கீழே காணலாம்.

#### (1) சங்கம் சார்ந்த குழுக்கள்

சில குழுக்கள் முறையான அமைப்பு வடிவத்துடன் திகழ்கின்றன. இவற்றின் உறுப்பினர்கள் சில அடிப்படையான விதிமுறைகளுக்கு உட்பட்டு நடக்கிறார்கள். இவற்றிற்கெனத் தலைவர்களும் பொறுப்பாளர்களும் முறைப்படி தெரிவு செய்யப்படுகிறார்கள். இத்தகைய சங்கங்கள் அரசியலில் மேற்கொள்ளப்படும் முடிவுகளின் மீது தங்களது செல்வாக்கைச் செலுத்துகின்றன. அவ்வாறு செல்வாக்கினைச் செலுத்த குறிப்பிட்ட வழிமுறைகளையும் பின்பற்றுகின்றன. பல்வேறு தொழிற்சாலைகளில் காணப்படும் தொழிற்சங்கங்களும் வர்த்தக

சங்கங்களும் இவற்றிற்குச் சான்றுகள் எனலாம். இந்தியாவில் செயல்படும் இந்திய தேசிய தொழிற்சங்க காங்கிரஸ், பல்வேறு இடங்களில் செயற்படும் வர்த்தக சங்கங்கள், ஆசிரியர் சங்கங்கள் போன்றவை இத்தகைய சங்கம் சார்ந்த தன்னலக் குழுக்கள் ஆகும்.

**(2) சங்கம் சாரா குழுக்கள்**

குறிப்பிட்ட வடிவமைப்பு இல்லாமல் செயல்படுகின்ற குழுக்கள் சங்கம் சாராக் குழுக்கள் என்றழைக்கப்படுகின்றன. இத்தகையக் குழுக்களில் உறுப்பினர்களுக்கென விதிமுறைகளோ, தலைவர்களைத் தேர்ந்தெடுக்கும் வழிமுறைகளோ இல்லை. இனம், சமயம், பாரம்பரியம், குலம் போன்றவற்றின் அடிப்படையில் இத்தகையக் குழுக்கள் செயற்படுகின்றன. இந்தியக் கிராமங்களில் காணப்படுகின்ற பல்வேறு சாதிகள் சார்ந்த குழுக்களும், சமயங்கள் சார்ந்த குழுக்களும் இத்தகைய குழுக்களாகும்.

**(3) நிறுவனம் சார்ந்த குழுக்கள்**

ஒவ்வொரு சமுதாயத்திலும் பல்வேறு நிறுவனங்கள் செயல்படுகின்றன. இத்தகைய நிறுவனங்களைச் சார்ந்தும் குழுக்கள் தோன்றி வளரலாம். அத்தகைய குழுக்களை நிறுவனம் சார்ந்த குழுக்கள் என்று அழைக்கலாம். சான்றாக, அதிகார வர்க்கம் என்பது ஒரு நிறுவனம். அதிகார வர்க்கத்தைச் சார்ந்த குழுக்கள் தங்கள் நலம் சார்ந்த பல்வேறு விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ள அரசாங்கத்தின்மீது செல்வாக்கைச் செலுத்துகின்றன.

**(4) முறை விலகிய குழுக்கள்**

இத்தகையச் குழுக்கள் வழிமுறைகளின் அடிப்படையில் உருவானவையல்ல. இவற்றின் பின்னணியாக இனம், மதம், மொழி போன்ற எதுவும் அமைவது இல்லை. இவை எந்த நிறுவனம் சார்ந்தும் செயல்படுபவையல்ல. இவை தற்காலிகமானவை. சான்றாக, ஒரு திரையரங்கினில் இருக்கும் கூட்டம் திரைப்படம் சரியாக ஒளிப்பரப்பப்படாவிட்டால் ஒன்றாக இணைந்து திரையரங்கினைத் தாக்குகிறது. ஓர் அரசாங்க அதிகாரி அத்துமீறிச் செய்யும் செயலை எதிர்த்து திடீரென்று ஒரு கூட்டம் தனது எதிப்பினைத் தெரிவிக்கின்றது. இத்தகைய குழுக்கள் பெரும்பாலும் வன்முறை சார்ந்து செயல்படுகின்றன.

**(5) தன்னலக் குழுக்களின் அரசியல் பணிகள்**

தன்னலக் குழுக்கள் பல்வேறு அரசியல் சார்ந்த பணிகளைச் செய்கின்றன. தங்களின் நலன்கள் எவையென அவை அரசாங்கத்திற்கும், சமுதாயத்திலுள்ள பிற குழுக்களுக்கும் அறிவிப்பது முக்கியமான அரசியல் சார்ந்த பணியாகும். ஒரு மக்களாட்சி அரசு மக்கள் நல அரசாகக் கருதப்படுகிறது. மக்கள் நல அரசில் மக்கள் தங்கள் குறைகளை வெளிப்படுத்தி அவைகளை நிவர்த்தி செய்யுமாறு அரசாங்கத்தை வேண்டுவது இயல்பு. இத்தகைய வேண்டுதலை வெளிப்படையாகச் சொல்லுவதன் மூலம் மற்றவர்கள் மத்தியிலும் தங்கள் தேவைகளைப் பற்றிய வெளிக்கொணர்வுகளை இவை உருவாக்குகின்றன. தன்னலக் குழுக்கள் தங்கள் விருப்பங்களை வெளிப்படுத்தும்போது அரசாங்கம் எதைச் செய்ய வேண்டும் என்பனபற்றிச் சிந்திக்கிறது. ஒரு தன்னலக் குழு தனது கோரிக்கைகளை வென்றடையப் பல்வேறு வழிமுறைகளைப் பின்பற்றுகிறது. தன்னலக்குழுக்கள் அதன் உறுப்பினர்களுக்குப் பணிசார்ந்த பிரதிநிதித்துவம் அளிக்கின்றன. அத்தகைய அமைப்புகளுக்காக அவை செயற்படும்போது அரசியலில் சாதி, சமயம் போன்ற குறுகிய அடிப்படைகள் முக்கியத்துவத்தை இழக்கின்றன. சான்றாக, மருத்துவ சங்கங்களில் பல்வேறு சாதிகள், சமயங்களையும் மறந்துவிட்டு தங்கள் பணிசாராத பிரச்சினைகளுக்காக அரசியலில் குறுக்கிடுகிறார்கள். இக்காரணத்தால் ஒரு நாட்டின் அரசியல் கலாச்சாரம் மேம்பாடு அடைய வாய்ப்பிருக்கின்றது.

தன்னலக் குழுக்கள் சிதறிக்கிடக்கும் பல்வேறு விருப்பங்களைத் தொகுத்தளிக்கின்றன. ஒரு குறிப்பிட்ட பணியினைச் செய்கின்ற நபர்கள் தனித்தனியே தங்கள் நலன்கள் பற்றி வெவ்வேறு கருத்துக்கள் கொண்டுள்ளனர். அவற்றை ஒன்றுதிரட்டி ஒட்டுமொத்தமான கோரிக்கைகளாக அவற்றை வடிக்கத் தன்னலக் குழுக்கள் உதவுகின்றன. சான்றாக, ஓர் ஆசிரியர் சங்கம் ஆசிரியர்களுக்கான கோரிக்கைகள் இவை என தொகுத்தளிக்கிறது. தனி நபர்களாக ஆசிரியர்கள் தங்களுக்குள் வேறுபட்ட விருப்பங்களை கொண்டவர்களாக இருக்கலாம். ஆனால் ஆசிரியர் சங்கத்தின் மூலமாக அவர்களது கோரிக்கைகள் ஒருங்கிணைக்கப்பட்டு அரசாங்கத்தின் முன்னால் வைக்கப்படுகின்றன. இந்த அரசியல் சார்ந்த பணி அரசாங்கத்திற்கும் பயனளிக்கிறது. தன்னலக் குழுக்கள் அரசியல் ஆட்சேர்ப்பிலும் பங்குபெறுகின்றன. தன்னலக்குழுக்களில் தீவிரப்பங்கு பெற்றுத் தலைவர்கள் ஆகிறவர்கள் முழுநேர அரசியல்வாதிகளாக மாறி அரசாங்கத்தில் வங்கேற்கும் வாய்ப்பு கிடைக்கிறது. பல்வேறு அரசியல் முறையமைவுகளிலும் தன்னலக் குழுக்கள் மக்கள் மத்தியில் அரசாங்கத்தின் கொள்கைகளை விமர்சிக்கின்றன. இதன் காரணமாக மக்கள் மத்தியில் அரசியல் விழிப்புணர்வு ஏற்படுகின்றது.

### 8.1.2. குழு மோதல்களும், சமநிலைப்படுத்துதலும்

ஒவ்வொரு சமுதாயத்திலும் பல்வேறு குழுக்கள் செயல்படுகின்றன. இக்குழுக்கள் தத்தமது நலன்களை மிக அதிகமாகப் பெறவேண்டும் என்ற நோக்கத்தில் தங்களுக்குள் போட்டியிடுகின்றன. இத்தகைய போட்டியின் காரணமாக மோதல்கள் ஏற்படுகின்றன. இம்மோதல்களைத் தீர்த்து இக்குழுக்களிடையே சமநிலையை ஏற்படுத்துதல் அவசியமாகும். அத்தகைய சமநிலையை ஏற்படுத்த ஒவ்வொரு சமுதாயத்திலும் வழிமுறைகள் உள்ளன. அரசாங்கம் ஒவ்வொரு குழுவையும் அதன் எல்லைக்குள் வைத்திருக்க சில வழிமுறைகளை பின்பற்றுகிறது. பொதுவாக தன்னலக்குழு உறுப்பினர்கள் பிறகுழுக்களுடன் மோதல்கள் ஏற்படுவதைத் தடுக்க விரும்புகிறார்கள். சில நபர்கள் பல தன்னலக்குழுக்களில் உறுப்பின்களாக இருப்பதால் அவர்கள் மோதல்களை விரும்புவதில்லை. இவ்வாறு குழுக்களிடையே தானாகவே சமநிலை ஏற்படுவதற்கான வழிவகைகள் இருக்கின்றன. தன்னலக் குழுக்களிடையே மோதல்கள் நிகழும்போது அரசாங்கம் ஒரு மத்தியஸ்தராக இருந்து மோதல்களைத் தவிர்க்க விரும்புகின்றது. குழுக்களிடையிலான உறவுகளில் உறவுகளில் ஒழுங்கு மற்றும் அமைதியை உருவாக்குவது அரசாங்கத்தின் கடமை.

### 8.1.3. அரசாங்கங்களும் குழுக்களும்

பென்ட்லி அரசாங்கத்திற்கும், குழுக்களுக்குமிடையே நெருங்கிய தொடர்பு இருப்பதாகக் கருதுகிறார். “அரசியல் என்பதே பெருமளவிலான குழுக்களின் செயல்பாடு” என்பது அவரது கருத்து. அரசியல் குழுக்கள் அதிகாரத்தை மையமாகக் கொண்டு செயற்படுத்துகின்றன. எனவே அரசியல் பகுப்பாய்வில் குழு அணுகுமுறை முக்கியத்துவம் பெறவேண்டும். பென்ட்லியின் கருத்துப்படி குழுக்கள் முறைசார்ந்தவை மற்றும் முறை சாராதவையேன இரு வகைகளாகப் பிரிக்க்ப்படுகின்றன. சட்டமன்றங்கள், நீதிமன்றங்கள் பிற சபைகள் போன்றவை முறைசார்ந்த குழுக்கள் என்று அழைக்கப்படுகின்றன. இவை முறையான அரசியல் முறையமைவுடன் தொடர்பு கொண்டுள்ளவை. இவை மக்களுக்குப் பொறுப்பானவை. முறைசாராக் குழுக்கள் என்பவை அரசியல் முறையமைவுடன் தொடர்பில்லாதவை. இவை மக்களுக்குப் பொறுப்பானவையும் அல்ல.

குழுக் கோட்பாடு என்பது பல்வேறு குறைகளைக் கொண்டிருப்பதாகச் சுட்டிகாட்டப்படுகின்றது. குழுநலன், செல்வாக்கு போன்ற கலைச்சொற்கள் தெளிவாக விளக்கப்படவில்லை. சமநிலைப்படுத்துதல் என்பதும் குழப்பமாக உள்ளது. சிந்தனைகள்,

உணர்வுகள், சட்டம், நீதி, பொதுவிருப்பம், பொதுநலன் போன்றவை உதாசீனம் செய்யப்பட்டுள்ளன. இக்கோட்பாடு நபர்களின் தனித்துவத்திற்கு எதிரானது. இக்கோட்பாடு எல்லாயெற்பாடுகளும் குழுக்களின் அடிப்படையில் நிகழ்வதாகச் செய்கின்ற அனுமானம் தவறானது. தனிநபருக்கும், சமுதாயத்திற்குமிடையில் ஏற்படுகின்ற முரண்பாடுகளை இதில் கருத்தில் கொள்ளவில்லை. குழுக்களின் இலட்சிய எல்லைகளை நிர்ணயிப்பது யார் என்பதையும் இக்கோட்பாடு விளக்கவில்லை. இது அமெரிக்க ஐக்கிய நாடுகள் போன்ற வளர்ந்துவிட்ட சமுதாயத்திற்கு ஏற்றத்தல்ல. இதனை உருவாக்கிய பென்ட்லி இதனை ஒரு பெரிய கோட்பாடு எனச் சொல்லிக் கொள்ளவில்லை. இத்தகைய குறைகள் இக்கோட்பாட்டில் இருந்தாலும் மனிதனின் நடக்கையை பயில இது பயனளிக்கும் என்பதில் ஐயமில்லை.

## அரசியல் உயர்ந்தோர் குழாம்

அரசியலில் ஓர் அரசியல் முறையமைவிலுள்ள அனைவரும் பங்கு பெறுகின்றனர். அரசியல் முடிவுகளாலும் செயல்களாலும் அனைவரும் பாதிக்கப்படுகின்றனர். ஒருவர் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அரசியல் அவரது வாழ்வில் தாக்கத்தை ஏற்படுத்துகிறது. ஓர் அரசியல் முறையமைவிலுள்ள அனைவரும் சமமான அரசியல் மற்றும் சமுதாய அந்தஸ்தைப் பெறுவதில்லை. ஒவ்வொரு சமுதாயத்திலும் குறிப்பிட்ட சிலர் கூடுதலான தகுதியைப் பெற்று உயர்ந்தோர் என அறியப்படுகின்றனர். இத்தகையோர் உயர்ந்தோர் குழாம் எனக் கூறப்பட்டு அவர்களது அரசியல் பங்கு ஒரு கோட்பாடாக வடிவமைக்கப்பட்டுள்ளது. தற்கால அரசியல் பகுப்பாய்வில் உயர்ந்தோர் குழாம் தொடர்பான கோட்பாட்டின் பங்கினை இங்கு காணலாம்.

உயர்ந்தோர் குழாம் கோட்பாடு ஐரோப்பாவில் தோன்றியது. ஐரோப்பாவில் பல்வேறு அரசியல் கொள்கைகளும் நடைமுறைகளும் தோன்றின. இத்தாலியில் அவ்வாறு தோன்றி உலகை உலுக்கிய கொள்கை பாசிசமாகும். பாசிசத்திற்கும் மக்களாட்சிக்கும் இடையிலான உறவு பற்றி விவாதிக்கத் தலைப்பட்ட அரசியல் சிந்தனையாளர்கள் பரேட்டோ, மோஸ்கோ, கேசட் போன்றவர்கள் உருவாக்கியதே அரசியல் உயர்ந்தோர் குழாம் கோட்பாடு ஆகும். இக்கோட்பாடு பின்னர் பல்வேறு பொருளாதார நிபுணர்கள் மற்றும் சமூகவியல் அறிஞர்கள் ஆகியோராலும் கையாளப்பட்டது. குறிப்பாக அமெரிக்கச் சிந்தனையாளர்கள் இதில் அதிக நாட்டம் காட்டினர். தொடக்க நிலையில் எதேச்சாதிரத்திற்கு ஆதரவளிக்கும் நிலையிலிருந்து இன்கோட்பாடு பின்னர் மாற்றியமைக்கப்பட்டது. இக்கோட்பாடு பற்றிக் கூறியுள்ளவர்களிடையே முக்கியமான சிலரது கருத்துக்களை இங்கு காணலாம்.

### 8.1.4. பரேட்டோவின் கோட்பாடு (1848 —1923)

வில்பிரடோ பரேட்டோ ஓர் இத்தாலிய அறிஞர். மனமும் சமுதாயமும் என்ற தமது நூலில் இவர் தனது உயர்ந்தோர் குழாம் கோட்பாட்டினை விவரித்துள்ளார். அடிப்படையில் இவர் ஒரு சமூகவியல் வல்லுனராகவும் உளவியல் நிபுணராகவும் திகழ்ந்தவர். அவரது கோட்பாடு கீழ்க்கண்ட கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டது. ஒவ்வொரு சமுதாயமும் பல்வேறு வகுப்புகளைக் கொண்டது. இவ்வகுப்புகளில் ஆளும் வகுப்பினர் என்போர் சிலராக அமைகின்றனர். இவர்கள் பெரும்பாலும் சிறுபான்மையினராகவே இருப்பர். அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்ற அவசியமான குணநலன்களை இவர்கள் பெற்றிருப்பர். இவர்களில் மிகச் சிறந்தவர்கள் உச்சிக்குச் செல்கிறார்கள். இவர்களையே உயர்ந்தோர் குழாம் என்கிறோம். ஒவ்வொரு துறையிலும் இத்தகைய உயர்ந்தோர் குழாம் அமையும். வழக்கறிஞர்களிடையே உச்சத்திலிருப்போர் வழக்கறிஞர்களிடையிலான உயர்ந்தோர் குழாம் ஆகும். அதுபோன்று மருத்துவர்களிடையிலும் பொறியியலாளர்களிடையிலும் அத்தகைய உயர்ந்தோர் குழாம்கள் அமைகின்றன. அரசியலில் அவ்வாறு அமைகின்ற உயர்ந்தோர் குழாம் அரசியல் உயர்ந்தோர் குழாம் என அறியப்படுகிறது. ஒவ்வொரு சமுதாயத்திலும். வாழும் மக்களை ஆளும் உயர்ந்தோர் குழாம், ஆளாத உயர்ந்தோர் குழாம், உயராததோர் குழாம் என வகைப்படுத்தலாம். பரேட்டோ அரசியலில் காணப்படும் உயர்ந்தோர் குழாமிற்கு மட்டும் முக்கியத்துவம் அளிக்கிறார்.

### 8.2. ஆளும் உயர்ந்தோர் குழாமின் வகைகள்

ஆளும் உயர்ந்தோர் குழாமை இரண்டு பெரிய பிரிவினராகப் பரேட்டோ பிரிக்கிறார். சேர்வகைகள் மற்றும் திறன் தொடர்ச்சி எனும் பிரிவுகளே அவையாகும். முதலில் குறிப்பிடப்பட்டுள்ள மிச்சங்கள் சூழ்ச்சித் திறனைக் குறிக்கின்றன. இரண்டாவது மிச்சங்கள் வலிமையைக் குறிக்கின்றன. முதல்வகையினர் சூழ்ச்சியைப் பயன்படுத்தியும் ஆட்சி செய்கின்றனர். முதல் வகையினர் ஊகஞ்செய்வோர் என்றும் இரண்டாவது வகையினர் சுகவாசிகள் எனவும் அவரால் குறிப்பிடப்படுகின்றனர். ஆட்சிசெய்யும் உயர்ந்த குழாமினர் தங்கள் அதிகாரத்தை நியாயப்படுத்த மரார்ந்தக சொல்லாக்கங்கள் என்பவை மக்களை ஏமாற்றுவதற்காகவே உருவாக்கப்படும் பொய்களாகும் உயர்ந்தோர் குழாம் தங்களது சுயநலம் சார்ந்த செயல்களை மூடிமறைக்க இவற்றை உருவாக்குகின்றனர்.

### 8.2.1. மோஸ்காவின் கோட்பாடு

கெயடானோ மோஸ்கா (1853—1943) ஓர் அரசியல் அறிவியலாளர். இத்தாலியைச் சேர்ந்த இவர் அரசியல் உயர்ந்தோர் குழாம் பற்றிய தனது கோட்பாட்டை ஆளும் வர்க்கம் என்ற தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். அரிஸ்டாட்டில் அரசாங்கங்களை முடியாட்சி, செல்வந்தராட்சி மற்றும் மக்களாட்சி என வகைப்படுத்தினார். அத்தகைய வகைப்பாட்டினை மோஸ்கா தவறு எனக் கூறுகிறார். இவரது கூற்றுப்படி சிறுகுழு ஆட்சி மட்டுமே நடைமுறையில் உள்ளது. எல்லாச் சமுதாயங்களிலும் ஆள்பவர்கள் மற்றும் ஆளப்படுபவர்கள் என இரண்டு வர்க்கங்கள் மட்டுமே உள்ளனர். ஆளும் வர்க்கத்தினர் எண்ணிக்கையில் சிறுபான்மையினர். அவர்கள் எல்லாவிதமான அரசியல் பணிகளையும் அனுபவிக்கின்றனர். ஆளப்படும் வர்க்கத்தினர் எண்ணிக்கையில் பெரும்பான்மையினராக உள்ளனர். அவர்கட்கு அரசியல் அதிகாரம் இல்லை. இப்பெரும்பான்மையினர் சிறுபான்மையினரால் கட்டுப்படுத்தப்பட்டு இயக்கப்படுகிறார்கள். ஆளும் வர்க்கத்தினர் எப்போதும் ஆணைகளிட்டு ஆட்சி செய்யும் ஆர்வத்துடனே இருக்கின்றனர். எல்லாச் சமுதாயத்திலும் இவ்விரு வர்க்கத்தினர் உள்ளனர்.

### 8.2.2. உயர்ந்தோர் குழாம் கோட்பாடும் பிற கோட்பாடுகளும்

ஒரு குறிப்பிட்ட உயர்ந்தோர் குழாமின் மேலாதிக்கம் என்பது மக்களாட்சியில் ஒப்புக்கொள்ள முடியாதது எனும் கருத்துச் சொல்லப்படுகிறது. உயர்ந்தோர் குழாம் என ஒரு பிரிவினர் உருவானால் சமுதாயத்தில் வர்க்கபேதங்கள் உருவாக வாய்ப்பு ஏற்படும் என்பதும் சுட்டிக்காட்டப்படுகிறது. மக்களாட்சிக்கு ஏற்றபடி உயர்ந்தோர் குழாம் கோட்பாட்டை மாற்றி அமைக்கவும் சிலர் முயன்றனர். அவர்களது கூற்றுப்படி மக்களாட்சியில் பல உயர்ந்தோர் குழாம்கள் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. உயர்ந்தோர் குழாம் கோட்பாட்டுடன் தொடர்புடையது பாசிசக் கொள்கை மக்களாட்சிக்கு எதிரான ஏதேச்சதிகாரக் கொள்கையாகும். இக்கொள்கையின் வேர்கள் உயர்ந்தோர் குழாம் கோட்பாட்டில் அமைந்துள்ளன எனக் கூறப்படுகிறது. பரேட்டோ, மோஸ்கா மற்றும் மிச்சல்ஸ் ஆகியோர் மக்களாட்சிக்குப் பாதகமான கருத்துக்களை உடையோர் என்பது புலனாகிறது. சோசலிசக் கோட்பாடு ஓரளவு உயர்ந்தோர் குழாம் கோட்பாட்டுடன் ஒத்துப் போகிறது எனலாம். பொதுவுடைமை நாடுகளில் அதிகாரம் ஆளும் வர்க்கமான சிறுபான்மையினரிடம் மட்டுமே குவிந்துள்ளது என்பது இதனை உறுதி செய்கிறது.

### 8.2.3. வளரும் நாடுகளில் உயர்ந்தோர் குழாம்

வளர்ந்து வரும் நாடுகளில் உயர்ந்தோர் குழாம் மிக முக்கியமான பங்கினை வகிக்கிறது. இந்நாடுகளில் உயர்ந்தோர் குழாம் அனைத்து வளர்ச்சிகட்கும் பொறுப்பானதாகவும் அதிகாரத்தைச் செலுத்துபவர்களாகவும் இருக்கின்றனர். இந்நாடுகளில் இவர்களை அறிவு ஜீவிகள் என அழைப்பதுண்டு. எழுத்தாளர்கள், விஞ்ஞானிகள், கல்வியாளர்கள், கலைஞர்கள், சமுதாய சேவை செய்பவர்கள் அதில் அடங்குவர். சிறுபான்மையினராக இருக்கும் இவர்கள் அதிகாரத்தைச் செலுத்துகின்றனர். இவர்களிடையிலிருந்து அரசியல் தலைவர்கள் உருவாகின்றனர். இத்தகைய அறிவு ஜீவிகளைப் பின்வரும் வகையினராகப் பிரிக்கலாம். இவர்களில் வம்சாவழி அறிவுஜீவிகள் என்போர் திறமையான ஆட்சியாளர்களாகச் செயற்பட்டு நல்ல சூழ்நிலையை உருவாக்குகின்றனர். மேற்கத்தியக் கல்வியை அறிமுகம் செய்தல், தொழில் முன்னேற்றம், வாணிப வளர்ச்சிக்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல் போன்றவற்றை இவர்கள் செய்கிறார்கள். நடுத்தரவர்க்க அறிவு ஜீவிகள் எனும் பிரிவில் அரசாங்க அதிகாரிகள் கல்வியாளர்கள் மற்றும் சில தொழில்புரிவோர் அடங்குவர். அவர்கள் சற்று அதிகமான பங்கினை வகிக்கின்றனர். புரட்சிகரமான அறிவு ஜீவிகள் என்போர் மார்க்சியக் கருத்துக்களால் ஈர்க்கப்பட்டு இடதுசாரிச் சிந்தனையுடையோர் ஆவர்.

உயர்ந்தோர் குழாம் கோட்பாடு சமூகவியல் அணுகுமுறையுடன் திகழ்கிறது. சமுதாயத்தில் நிலவுகின்ற யதார்த்த நிலைகளை அடிப்படையாகக் கொண்டு இக்கோட்பாடு அமைந்துள்ளது. தற்கால அரசியல் பகுப்பாய்வில் இது முக்கிய அங்கம் வகிக்கிறது. எனினும், இக்கோட்பாட்டில் சில குறைகள் உள்ளன. இக்கோட்பாட்டினை வலியுறுத்தும் சிந்தனையாளர்களிடையே ஒருமித்த கருத்து இல்லை. இக்கோட்பாடு சமுதாயத்தில் வகுப்பு பேதங்கட்கு வழிவகுக்கிறது. இது மக்களாட்சிக் கோட்பாட்டிற்கு எதிரானது அரசியலில் பயங்கரமான கொள்கை எனக் கருதப்படும் பாசிசக் கொள்கை இக்கோட்பாட்டின் அடித்தளத்தில் எழுந்ததாகச் சொல்லப்படுகிறது.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகள்

அ) குழு அணுகுமுறை என்றால் என்ன?

ஆ) குழுக்களின் வகைகள் எத்தனை

இ) குழு மோதல்களும், சமநிலைப்படுத்துதலும் விளக்குக.

ஈ) ஆளும் உயர்தோர் குழாமின் வகைகள் எத்தனை?

உ) உயர்ந்தோர் குழாம் கோட்பாடும் பிற கோட்பாட்டையும் விவரி?

### 8.3. தொகுப்புரை

அரசியல் அறிவியலில் அரசியல் குழு – குழக்கோட்பாடு எவ்வாறு முக்கியத்துவம் பெற்றுள்ளது என்பதனை இப்பாடத்தில் விளக்கப்பட்டுள்ளது. அரசியலில் உயர்ந்தோர் குழாம் அது எவ்வாறு செயல்படுகிறது என்பதையும் இது நன்க எடுத்துரைக்கிறது.

## 8.4. முக்கிய வார்த்தைகள்

| | | |
|---|---|---|
| 1. குழு மோதல் | — | போட்டி |
| 2. சமநிலைபடுத்தல் | — | மோதல்கள் மூலம் சமநிலைப் படுத்துதல் |
| 3. உயர்ந்தோர் குழாம் | — | கூடுதலான தகுதி பெற்றோர் |

## 8.5. பரிந்துரைக்கப்பட்ட நூல்கள்


1. Sir. E. Barker, Principles of Social and Political Theory, Calcutta, Oxford University Press – 1976.

2. C.B.Macpherson, Democratic Theory, Essays in Retrieval, Oxford, The Clarendon Press – 1977.

3. D.Held, Political Theory Today, Cambridge, Polity Press 0 1991.


## 8.6. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவு சோதனை கேள்விகளுக்கான பதில்கள்

| | |
|---|---|
| கேள்வி எண்.1 | பதில் எண். 8.1. |
| கேள்வி எண்.2 | பதில் எண். 8.1.1 |
| கேள்வி எண்.3 | பதில் எண். 8.1.2 |
| கேள்வி எண்.4 | பதில் எண். 8.2. |
| கேள்வி எண்.5 | பதில் எண். 8.2.2 |

## 8.7. மாதிரி வினாக்கள்

1. அரசியல் குழு கோட்பாட்டினைப்பற்றி விரிவாக எழுதுக.
2. அரசியல் உயர்ந்தோர் குழாம் கோட்பாட்டினை விளக்குக.

# அலகு – 9
# அரசியல் செய்தித் தொடர்பு கோட்பாட்டியல்: ஆட்டக்கோட்பாடு

## அறிமுகம்

அரசியல் செய்தித் தொடர்பு, அரசியல் முறையமைவிற்குத் தொடர்புடைய செய்திகள் எவ்வாறு பெறப்பட்டு, அனுப்பப்பட்டு சேகரித்து வைக்கப்பட்டு நடைமுறைப்படுத்தப்படுகின்றன என்ற முறையை விளக்குகிறது. செய்தித்தொடர்பு என்பது எவ்வாறு அரசியல் முறையமைவு கோரிக்கைகளையும், ஆதரவுகளையும் பெற்று, அதற்குத் தகுந்தபடி வெளிப்பாடுகளாகச் சட்டங்களை நிறைவேற்றுகிறது என்பதைப் பற்றியதாகும். முறையமைவு அதற்குத் தொடர்புடைய செய்திகளைப் பெற்று அலசி ஆராய்கிறது. மாறுபடும் சூழல்கள் தொடர்ந்து புதிய கோரிக்கைகளை சுமையைக் குறைக்க முடிகிறது என்பதைப் பொறுத்து முறையமைவின் வெற்றியமையும் செய்திகளை முறையமைவு பெற்று அதற்குத் தகுந்தபடி செயல்படுவதற்குள்ள காலம் இடைவெளி எனப்படும். பெறக்கூடிய செய்திகள் மாற்றப்பட்டோ, தவறாக அறியப்பட்டோ காணப்படுவது மெய்மைத்திரிபு எனப்படுகின்றது. செய்திகளுக்குத் தகுந்தபடி அரசியல்முறையமைவு செயல்படுவது ஆதாயம் எனப்படும். சூழல்களுக்குத் தகுந்தபடி முறையமைவானது, உள்ளீடுகளை வெளிப்பாடுகளாக மாற்றி அனுப்புவதைத் திரும்ப ஊட்டுதல் எனக்கூறலாம். திரும்ப ஊட்டும் செய்திகளுக்குத் தகுந்தபடி முறையமைவு செயல்புரிவதைப் பொறுத்துத் தான் அதன் வெற்றி தோல்வியிருக்கிறது. முறையமைவுக்கு அனுப்பப்படும் செய்திகள் சேகரித்து வைக்கப்பட்டு எதிர்காலத்தில் பயன்படுத்தப்படுகின்றன.

## நோக்கங்கள்

1. அரசியல் செய்தித் தொடர்பு கோட்பாடு பற்றி பகுப்பாய்வு செய்தல்
2. அரசியலில் ஆட்டக் கோட்டின் பங்கினை தெரிந்து கொள்ளுதல்.

## வடிவமைப்பு

கார்ல் டோஷ் அரசியல் செய்தித் தொடர்பு கோட்பாடு
டோஷ் அடிப்படைக் கருத்துப்படிவம்
கருத்துக்களை ஏற்றுக்கொள்பவர்கள்
கற்கும் வலையின் தோல்விக்குக் காரணம்
ஆட்டக் கோட்பாடு
ஆட்டக் கோட்பாட்டின் தன்மைகள்
ஆட்டக் கோட்பாட்டின் வகைகள்

பூஜ்யமற்ற பலரது ஆட்டம்
கப்ளானின் மாதிரி
ரிக்கரின் மாதிரி
செல்லிங் மாதிரி
தொகுப்புரை
முக்கியவார்த்தைகள்
பரிந்துரைக்கப்பட்ட நூல்கள்
முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவு சோதனை கேள்விகளுக்கான பதில்கள்
மாதிரி வினாக்கள்

## 9.1. கார்ல் டோஷ் அரசியல் செய்தித் தொடர்பு கோட்பாடு

கார்ல் டோஷ் அரசியல் செய்தித் தொடர்பு பகுப்பாய்வை சைபர் நெடிக்ஸ் மாதிரிப்படிவம் மூலமாக விளக்குகிறார். மனித இயந்திர மற்றும் சமூக முறையமைவுகளில் எவ்வாறு செய்தித் தொடர்பு கட்டுப்படுத்துகிறது என்பதை சைபர் நெடிக்ஸ் ஆய்கிறது. கம்ப்யூட்டரின் செயல்முறைகள் அரசியலில் தீர்மானம் செய்யும் முறையை ஒத்தவையாகும். ஆகையால் அரசியல் முறையமைவை சைபர் நெடிக்ஸ் கூறும் பகுப்பாய்வின் மூலம் புரிந்து கொள்ளலாம். கார்ல்டோஷ் எழுதியுள்ள என்ற புத்தகத்தில் விளக்கப்பட்டுள்ள கருத்துப் படிவங்கள் செய்தித் தொடர்பு கோட்பாட்டியலின் மாதிரிப் படிவமாக அமைந்து அரசியல் தீர்மானம் எவ்வாறு செயல்படுகிறது என்பதை விளக்குகின்றன.

அரசியல் என்பது சமூகக் குறிக்கோள்களை அடைவதற்காக மக்களின் சக்திகளை ஒன்று திரட்டுதல் ஆகும் என்றும் டோஷ் கூறுகிறார். அவரைப் பொறுத்தவை திறன் என்பது அரசியலில் சாரமோ அல்லது மையமோ ஆகாது. திறன் என்பது அரசியலில் முறையமைவின் குறிக்கோளை அடைவதற்குள்ள அரசியல் கூறாகும்.

ஒருவரை இதைச் செய் என்று கட்டாயப்படுத்துவதற்கு முன்பு, எதைச் செய்யவேண்டுமென்ற செய்திகளை முன்னே அனுப்பி, அவரைபுரிந்து கொள்ளும்படிச் செய்ய வேண்டும். ஒரு அதிகாரிக்கு கீழ்நிலைப் பணியாளரோடு எவ்வாறு தொடர்பு கொள்ள வேண்டுமென்று தெரியாவிட்டால், கீழ்நிலைப் பணியாளர்கள், மேல் அதிகாரி எதைச் செய்யச் சொல்கிறார் என்பதைப் புரிந்து கொள்ளாவிட்டால், அவர்களால் செவ்வனே செயல்பட முடியாது. இதனால் தான் மனித சக்திகளை ஒன்று திரட்டிச் செயல் செய்வது எப்படி என்பதைப் புரிந்து கொள்ள வேண்டுமென்கிறார் டோஷ்.

1. ஒரு அரசியல் தீர்மான முறையமைவின் சுமை எவ்வளவு? அரசாங்கம் எவ்வளவு சீக்கிரமாக அரசியல் முறையமைவின் சுமையைக் குறைக்கவல்லது?

2. புதிய கோரிக்கைகளை நிறைவேற்றுவதற்கு அரசாங்கம் எடுத்துக் கொள்ளம் கால இடைவெளி எவ்வளவு?

3. புதிய கோரிக்கைகளை ஏற்றுக் கொள்வதால் உள்ள ஆதாயம் என்ன?

4. எவ்வளவு தூரம் அரசாங்கம் புதிய பிரச்சனைகளை அனுமானித்துச் செயல்பட முடிகிறது?

### 9.1.1. டோஷ் அடிப்படைக் கருத்துப் படிவம்

மேற்கூறிய வினாக்களின் அடிப்படையில் டோஷ் அடிப்படைக் கருத்துப் படிவங்களை அமைத்திருக்கிறார். டோஷின் அடிப்படைக் கருத்துப் படிவம் கற்கும் வலை ஆகும். கற்கும் வலை என்பது ஒரு முறையமைவு எவ்வாறு செய்திகளை அனுப்பீடு செய்து செயல்படுகிறது என்பதைக் குறிக்கும் சமூக அமைப்புகள் தனி மனிதர்களிடையே சொற்கள் அனுப்பீடு செய்து செயல்படுகின்றன. மின்சாரக் கருவிகள், மின்சாரக் குறிகளின் மூலம் செயல்படுகின்றன. சூழல்களுக்குத் தகுந்தபடி சமூக அமைப்புகளும் மின்சார கருவிகளும், செய்திகளை அனுப்பீடு செய்து அனுசரித்துக் கொள்கின்றன. ஆக அரசியல் என்பது திரும்ப ஊட்டலுக்குத் தகுந்தபடி குறிக்கோளை அடையும் முறை என அறியப்படுகிறது. அரசியலில் குறிக்கோளை அடையும் முறையிலிருந்து இயந்திர மூலமாகக் குறிக்கோளை அடையும் முறை கீழ்க்கண்ட நான்கு காரணங்களுக்காக மாறுபட்டதாகும்.

1. குறிக்கோளை அடையும் முறையமைவின் புறத்திலிருந்து குறிக்கோள்கள் அனுப்பப்படுகின்றன.

2. அரசியல் முறையமைவு சிறந்த முறையில் குறிக்கோளை அடைய திரும்ப ஊட்டும் செய்திகளைப் பொறுத்திருக்கிறது. ஏனெனில் முறையமைவு சூழலிலிருந்து தனித்தியங்குகிறது.

3. அரசியல் குறிக்கோள் மாறலாம்.

4. அரசியல் குறிக்கோள்களை பல்வேறு வழிகளில் அடையலாம். கற்கும் வலைகள் கீழ்க்கண்ட மூன்று அடிப்படைக் கூறுகளைப் பெற்றிருக்கின்றன.

1. கருத்துக்களை ஏற்றுக் கொள்பவர்கள் — சூழலிலிருந்து செய்திகளைச் சேகரிப்பவர்கள்.

2. செயல் முடிப்பவர்கள் — தீர்மானங்களை நிறைவேற்றுபவர்கள்

3. திரும்ப ஊட்டும் கட்டுப்பாடுகள் குறிக்கோளை அடைவதில் தீர்மானங்களின் விளைவுகளை முறையமைவிற்கு அறிவிப்பார்கள்.

### 9.1.2. கருத்துக்களை ஏற்றுக்கொள்பவர்கள்

கருத்துக்களை ஏற்றுக்கொள்பவர்கள், செயல் முடிப்பவர்கள் திரும்ப ஊட்டும் கட்டுப்பாடுகள் கற்கும் வலையைத் தனித்துச் செயல்படச் செய்கின்றன. இதனால் கற்கும் வலைகள் சேகரித்து வைத்துள்ள செய்திகளுக்குத் தகுந்தபடி குறிக்கோள்களை மாற்றவோ, திரும்ப ஊட்டுதல்களைத் திருத்தியமைக்கவோ முடிகின்றன. சுயேட்சை முறையமைவுகள் மூன்று வகையான செய்திகளைப் பெறுகின்றன. முதலாவதாக கற்கும் வலைகள் அவைகளுடைய சூழல்களைப் பற்றிய செய்திகளைப் பெறுகின்றன. இரண்டாவதாக கற்கும் வலைகள் அவைகளைப் பற்றிய செய்திகளைப் பெறுகின்றன. இச்செய்திகளைப் பெறுவதின் மூலம் கற்கும் வலைகள் புதிய மாற்றங்களுக்குத் தகுந்தபடி தங்களைப் பராமரித்துக் கொள்ள முடியும். கற்கும் வலைகள் தங்களது குறிக்கோள்களை, சூழல்களுக்குத் தகுந்தபடி மாற்றிக் கொள்ள வேண்டும். ஐந்து வகைகளில் ஒரு முறையமைவு தோல்யடையலாம்.

1. குறிக்கோளை அடைவதற்கான திறன், தீர்மான முறையமைவிற்கு இல்லாமை.
2. முறையமைவின் குறிக்கோளை அடைவதற்குத் தகுந்த செய்திகளை சேகரிக்க முடியாமை.
3. செய்திகளின் அடிப்படையில் கொள்கைகளையோ, கொள்கைகளின் அடிப்படையில் செயல்களையோ வகுக்க முடியாமை.
4. பழைய அனுபவத்திலிருந்து கிடைத்த படிப்பினைகளை நினைவுபடுத்திக் கொள்ளாமை.
5. சூழல்களுக்குத் தகுந்தபடி முறையமைவு மாற்றத்தைப் பெறமுடியாமை.

முறையமைவின் தோல்விக்கான ஐந்து காரணங்களும் கற்கும் வலையின் மூன்று அடிப்படைக் கூறுகளான கருத்துக்களை ஏற்றுக் கொள்பவர்களையும், செயல் முடிப்பவர்களையும், திரும்ப ஊட்டும்

கட்டுப்பாடுகளையும் ஒத்தவை. கற்கும் வலையில் செயல் முடிப்பவர்கள் தோல்விடையவதற்குக் காரணம், குறிக்கோளை அடைவதற்குத் தகுந்த செய்திகளைத் திரட்ட முடியாமையும் பழைய அனுபவித்திலிருந்து படிப்பினைகளை நினைவுபடுத்திக் கொள்ளாமையும் ஆகும். திரும்ப ஊட்டும் கட்டப்பாடுகள் தோல்வியடைவதற்குக் காரணம் சூழல்களுக்குத் தகுந்தபடி முறையமைவு மாற்றத்தைப் பெற முடியாமையாகும்.

### 9.1.3. கற்கும் வலையின் தோல்விக்குக் காரணம்

கற்கும் வலையின் தோல்விக்குக் காரணம் செய்திகளை முழுவதுமாக அறிந்துகொள்ள முடியாமையாகும். இப்பிரச்சனை முறையமைவின் தோல்விக்குக் காரணமாகும். ஒரு முறையமைவு தோல்வியடைவதற்குக் காரணம் முழுச் செய்திகளும் கிடைக்கப் பெறாமையாகும்.

ஒவ்வொரு மனித அமைப்பிலும் இரண்டு வகையான ஆற்றுப்பயிற்சிகள் இருக்கின்றன என்று டோஷ் கருதுகிறார். (1) ஒரு அமைப்பு தொடாந்து இயங்க குறிக்கோளை நிறைவேற்றுவதற்கான ஆற்றுப் பயிற்சி. (2) ஒரு அமைப்புக் குறிக்கோள்களை அடைவதற்குத் தகுந்தபடி அவ்வமைப்பைப் பராமரிக்கும் ஆற்றுப் பயிற்சி. ஒரு முறையமைவு தோல்வியடைவதற்குக் காரணம் குறிப்பிட்ட குறிக்கோளை அடைவதற்குத் தகுந்தபடி ஒரு அமைப்பு பராமரிக்கப்படாததால் ஆகும். டோஷ் அரசியலை அருள் என்ற கருத்துப்படிவத்தின் வழிகாட்டியாக அணுக வேண்டுமென்கிறார். உலகத்தைப் பொதுநலக் கண்ணோட்டத்தோடு அணுகுவதை அருள் மனநிலை என்று டோஷ் மூன்று வகையான அருள் மனநிலையைக் குறிப்பிடுகிறார். அவையாவன:

1. தனித்தன்மையைப் பாதுகாத்துக் கொள்ள ஒவ்வொரு தனிமனிதனும் அல்லது அதிகாரியும் அன்றாடப் பணிகளைச் செய்தல் மட்டும் போதாது என்பதை உணரவேண்டும்.

2. ஒவ்வொரு தனிமனிதனும் அல்லது அதிகாரியும். பிரச்சனைகளைத் தீர்ப்பதற்கு வேண்டியமூலகாரணக்கூறுகள் (data) உலகில் உள்ளன. ஆனால், இதுவரை முழுவதும் கண்டுபிடிக்கப்படவில்லை என்பதை உணர வேண்டும்.

3. முறையமைவில் மாற்றத்தைக் கொண்டுவர வேண்டுமென்று அனுபவம் கூறுகிறது. புதிய அனுபவத்திற்கேற்ப புதிதான அமைப்புகளையும், ஆளுமையும் பெறவேண்டுமென்பதை உணர வேண்டும்.

டோஷின் செய்தித்தொடர் மாதிரிப்படிவம் பல காரணங்களுக்காக குறை கூறப்படுகிறது. முதலாவதாக, அது தீர்மானம், விளைவுகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கவில்லை. எப்படிச் செய்திகள் அனுப்பப்படுகின்றன என்பதற்கும் அமைப்புகளின் தன்மைக்கும் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறதே தவிர செய்திகளின் சாரத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை. இரண்டாவதாக டோஷின் செய்தித் தொடர்பு கோட்பாட்டியல் மூலமாக முறையமைவு பராமரிப்பைப் பற்றி நல்லமுறையிலும், முறையமைவில் படிப்படியாக மாற்றம் ஏற்படுவதை சிறிது சிரமத்திடனும், முறையமைவில் ஏற்படும் புரட்சிகரமான மாற்றத்தைப்பற்றி மிக அதிக கஷ்டத்துடனும் தான் கற்றறிய முடியும். மூன்றாவதாக, மாதிரிப் படிவத்தை நடைமுறைப்படுத்துவதின் முக்கிய நோக்கம், செயற்கரிய செயல்களைச் சுலபமாக விளக்குவதுதான், டோஷின் மாதிரிப் படிவத்தைப் பொறுத்தவரை மாதிரிப் படிவத்தை புரிந்துகொள்வதே கஷ்டமாக இருக்கிறது. இறுதியாக டோஷின் மாதிரிப் படிவம் அராசங்க நடைமுறைப்பற்றி சில முக்கிய வினாக்களை எழுப்பினாலும், அவைகளுக்கு விடைகாணத் தகுந்த முறையாக அமையவில்லை.

## ஆட்டக்கோட்பாடு

ஆட்டக்கோட்பாடு என்பது கணிதவியலுடன் தொடர்புடையதாகும். வான் நியூமன் என்பார் இக்கோட்பாட்டினை மனிதனின் பொருளாதார நடக்கையை விளக்குவதற்காகப் பயன்படுத்தினார். வான் நியூமனும் ஊகர் மார்கென்ஸ்டர்ன் என்பவரும் எழுதிய 'ஆட்டம் கோட்பாடும் பொருளாதார நடக்கையும்' எனும் நூல் ஆட்டக் கோட்பாட்டிற்கு முக்கியத்துவம் அளித்தது. ஹோவர்டு ரெய்பா மற்றும் மார்டின் சுபாக் என்போர் இக்கோட்பாட்டினை அரசியல் அறிவியலில் அறிமுகம் செய்தனர். பின்னர் இக்கோட்பாட்டினை வலியுறுத்தும் வண்ணம் அன்டோல் ராபோர்ட், மோர்ட்டான் கப்ளான், வில்லியம் ரிக்கரு மற்றும் தாமஸ் செல்லிங் போன்றோர் தங்களது கருத்துக்களை வெளியிட்டனர். ஆட்டக்கோட்பாடு பொதுவாகப் பன்னாட்டு அரசியல் மற்றும் அரசியல் விவேகம் ஆகி வை தொடர்பாகப் பயன்படுத்தப்படுகிறது.

## 9.2. ஆட்டக் கோட்பாடு

விளையாட்டுக் கோட்பாடு என்பது சதுரங்கம், போக்கர் மற்றும் பிரிட்ஜ் ஆகிய ஆட்டங்களில் பின்பற்றப்படும் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டது. இவ்விளையாட்டுக்களில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் விளையாட வண்டும். இவர்களிடையே போட்டி ஏற்பட வேண்டும். இவ்விளையாட்டுக்களில் விளையாடும் ஒவ்வொருவரும் தான் வெற்றியடைய முயலுவார்.

இவ்விளையாட்டக்களில் வெற்றிபெற விளையாட்டாளர்கள் தங்களுக்கு முன்னுள்ள தெரிவுகள் பற்றி அறிந்திருக்க வேண்டும். மற்ற விளையாட்டாளர்கள் அவர்களுக்குள்ள தெரிவுகட்கிடையில் வெற்றிக்கு முன்னுரிமை அளிப்பார்கள் என்பதை அனுமானிக்கவும் வேண்டும். ஒவ்வொரு ஆட்டக்காரரின் தெரிவுகளைப் பொருத்து அமையும். ஆட்டக்காரர் ஒவ்வொருவரும் திறமையுடன் விதிமுறைகளின்படி ஆடிவெற்றிபெற முயல்வர். இதுபோன்றே அரசியல் எனும் அனுமானத்தின் அடிப்படையில் அரசியலில் ஆட்டக் கோட்பாடு கையாளப்படுகிறது.

## 9.2.1. ஆட்டக் கோட்பாட்டின் தன்மைகள்

ஆட்டக் கோட்பாடு சில அடிப்படைத் தன்மைகளைக் கொண்டுள்ளது. ஆட்டக்காரர்கள் முடிவு செய்பவர்களாகத் திகழ்கிறார்கள். எத்தகைய முடிவுகள் தங்களுக்குச் சாதகமாக இருக்கும் என்பதைச் சரியாகக் கணிக்கும் திறமை இவர்கட்கு உண்டு. இவர்கள் எவ்வாறு விளையாட வேண்டும் என்பதற்குத் தெளிவான விதிமுறைகள் உள்ளன. ஆட்டக்காரர்கள் தங்கள் ஆட்டத்திற்கான வெகுமானங்களைப் பெறுகின்றனர். ஆட்டக்கோட்பாட்டில் இது ஆதாயம் என அழைக்கப்படுகிறது. ஒவ்வொரு ஆட்டக்காரரும் மிகப்பெரிய ஆதாயத்தைப் பெறும் நோக்கத்துடன் ஆடுகிறார். மிகப்பெரிய ஆதாயம் என்பது வெற்றி அடைதலாகும். அதற்கடுத்தநிலை சமன்படுத்துதல் ஆகும். கடைசிநிலை விளையாட்டில் தோற்றுப்போதல் எனலாம். ஒவ்வொரு ஆட்டக்காரரும் தான் வெற்றி பெறுவதற்காகப் பல விளையாட்டுத் தந்திரங்களை மேற்கொள்கிறார். அத்தகைய தந்திரங்களைத் திறமையுடன் வகுத்துச் செயற்படுத்துவதைப் பொருத்து அவரது ஆதாயம் அமைகிறது.

## 9.2.2. ஆட்டக் கோட்பாட்டின் வகைகள்

ஆட்டக்கோட்பாட்டினைச் சில வகைகளாக வகைப்பாடு செய்யலாம். ஆடும் நபர்களின் எண்ணிக்கை, ஆட்டக்காரர்களிடையிலான உறவு மற்றும் ஆதாயத்தைப் பங்கு வைத்தல் போன்றவற்றின் அடிப்படையில் இவ்வகைப்பாடு செய்யப்படுகிறது.

## 9.2.3. பூஜ்யமற்ற பலரது ஆட்டம்

இத்தகைய ஆட்டத்தில் பலரது பங்கேற்பு உள்ளது. இதில் ஓர் ஆட்டக்காரரின் இலாபம் மற்ற ஆட்டக்காரரின் இழப்பிற்குச் சமமாக அமைவதில்லை. இருவரும் இலாபமடையவோ அல்லது இழப்படையவோ கூடிய சூழ்நிலை அமையலாம். இதில், ஆட்டக்காரர்கள் தங்களது ஆதாயங்களைச் சேர்த்து வைத்துக் கொள்ளவும் வாய்ப்புள்ளது. இவ்விளையாட்டில் அணிகளாகச் சேர்ந்து ஆடலாம்.

மக்களாட்சி அமைப்புகளில் உருவாகும் கூட்டணி அரசாங்கங்களை இதற்கு ஒப்பிடலாம்.

## 9.2.4. கப்ளானின் மாதிரி

மோர்டான் கப்ளான் ஆட்டக்கோட்பாட்டைக் கையாண்டு ஒரு மாதிரியை உருவாக்கியுள்ளார். பன்னாட்டு அரசியலில் முறையும் வழிமுறையும் எனும் தனது நூலில் குறிப்பிடுகிறார். ஆட்டக் கோட்பாட்டினை அரசியல் பகுப்பாய்வில் மிகச்சிறந்த கருவியென அவர் கூறுகிறார். ஆட்டக்கோட்பாடு சரியான முறையில் பன்னாட்டு அரசியலில் கையாளப்பட்டால் அது வெளியுறவுக் கொள்கையின் நிச்சயமான வெற்றிக்கு வழிவகுக்கும் எனக் கருதுகிறார். ஆட்டக் கோட்பாட்டில் ஓர் ஆட்டக்காரர் முடிவுகளைச் செய்வதற்கு எத்தகைய தந்திரங்களைக் கையாளுகிறாரோ அதுபோன்ற தந்திரமான வழிமுறைகளைக் கையாண்டால் அரசியலில் கொள்கை முடிவு செய்வோர் வெற்றி பெறுவர்.

கப்ளானின் மாதிரி போதுமானதல்ல எனக் கூறப்படுகிறது. அவர் அரசியலில் நடைமுறையில் ஆட்டக் கோட்பாடு எவ்வாறு கையாளப்படலாம் என்பதைத் தெளிவாக்கவில்லை. அவரது பகுப்பாய்வு நுட்பம் மிகுந்துள்ளது. ஆனால் அவரது கூற்றுக்கள் பொதுத்தன்மையுடையனவாய் அமைந்துள்ளன. அவை அறிவியற்பூர்வமான ஆராய்ச்சியின் அடிப்படையில் அமையவில்லை. கப்ளானின் மாதிரி தற்கால நிலைக்கு ஏற்றதல்ல எனவும் சுட்டிக்காட்டப்படுகிறது. கப்ளான் செய்துள்ள அனுமானங்கள் திருப்திகரமாக அமையவில்லை.

## 9.4. ரிக்கரின் மாதிரி

வில்லியம் ரிக்கர் என்பார் தனது அரசியல் கூட்டணிகளின் கோட்பாடு எனும் நூலில் தனது ஆட்டக் கோட்பாடு மாதிரியைக் குறிப்பிடுகிறார். அவர் தனது ஆய்வினைக் கூட்டணிகளின் மீது மட்டுமே செலுத்துகிறார். பல்வேறு மக்களாட்சி முறைகளில் கூட்டணிகள் அமைகின்றன. இவை தொடர்பாக ஆட்டக் கோட்பாட்டின் மூலம் ஆய்வு செய்ய அவர் முயலுகிறார். அவரது ஆட்டத்தில் ஆட்டக்காரர்கள் பகுத்தறிவு மிக்கோராகவும், அனைத்துச் செய்திகளையும் அறிந்தோராகவும், பேரங்கள் பேசுபவர்களாகவும் அமைந்துள்ளனர். கூட்டணி அரசாங்கங்கள் ஏற்படுவதில் காணப்படும் பொதுவான கொள்கைகளைக் கண்டறிவதே அவரது ஆய்வின் அடிப்படையாக அமைந்துள்ளது.

ரிக்கர் தனது ஆட்டக்கோட்பாட்டின் வாயிலாக மூன்று கொள்கைகளை வகுக்கிறார். முதலாவதாக அமைவது அளவுக்கொள்கை ஆகும். கூட்டணியின் அளவு என்பது கொள்கை முடிவு செய்பவர்களின் திறமையைப் பொறுத்து அமைகிறது. கூட்டணியின் கொள்கைகள் தொடர்பாக அவர்கள் பெற்றுள்ள செய்திகளைச் சார்ந்தும் அளவு அமைகிறது. கூட்டணி ஒவ்வொன்றும் முன்னிலைக் கூட்டணியாக இருந்த பின்னரே கூட்டணியாகிறது. முன்னிலைக் கூட்டணியைக் கூட்டணியாக மாற்றும் தந்திரம் தந்திரக் கொள்கை எனப்படுகிறது. சமன்நிலைக் கொள்கை என்பது மூன்றாவது கோட்பாடாகும். இது கூட்டணியை நிலைப்படுத்துதலை நோக்கமாக கொண்டது. ஒரு கூட்டணி நிலைத்திருத்தல் என்பது அது எத்தகைய அடித்தளத்தில் அமைந்துள்ளது என்பதைப் பொருத்து அமைகிறது. தலைவர்களின் தப்புக்கணக்கு, முறையற்ற வழிகளில் வளங்களைச் செலவிடுதல், மற்றும் இடைவிடாது அதிகாரம் பெற அதிக ஆசைப்படுதல் போன்ற காரணங்களினால் கூட்டணிகள் சமன்நிலையை இழந்து சரிகின்றன.

## 9.3.1. செல்லிங் மாதிரி

தாமஸ் செல்லிங் முரண்பாட்டின் தந்திரம் எனும் நூலில் தனது ஆட்டக் கோட்பாடு மாதிரியைக் குறிப்பிடுகிறார். அவர் தனது ஆட்டக்கோட்பாடு மாதிரியைப் பன்னாட்டு அரசியல் தொடர்பாகப் பயன்படுத்துகிறார். இவர் முரண்பாடு அல்லது மோதல் பற்றிய ஆய்வினைச் செய்கிறார். பன்னாட்டு அரசியலில் முற்றிலுமான மோதல் அல்லது முற்றிலுமான இணைக்கவுறவு ஆகியவற்றிற்கு வாய்ப்பில்லை. பன்னாட்டு அரசியலில் மோதலும் இணக்கவுரவும் கலந்து அமைகின்றன. இதனை விளக்க, கலவைத் துாண்டல் ஆட்டங்கள் அல்லது பேரவிளையாட்டுகள் என்பவற்றைப் பயன்படுத்துகிறார். ஆட்டத்தில் ஆட்டக்காரர்கள் மேற்கொள்ளும் நகர்வுகளை சாதாரணமான முறைசார்ந்த விதத்தில் ஆய்வு செய்வதைவிட அவற்றை உளவியல் அடிப்படையில் ஆய்வு செய்வது சரியானதாக அமையும் என அவர் கூறுகிறார். மனிதன் தனது உளவியல் உயர்வுகளின் அடிப்படையில் நகர்வுகளைச் செய்கிறான். வேறும் பகுத்தறிவு அடிப்படையில் மட்டும் ஆட்டத்தை ஆடுவதில்லை. எனவே மனிதன் வாக்குறுதிகள் அளித்தல், அச்சுறுத்தல், நண்பர்களையும் எதிரிகளையும் அடையாளம் காணுதல் போன்ற செயல்களில் ஈடுபடுகிறான். தந்திரம் தொடர்பான சிந்தனை என்பதில் குறிப்பிடத்தக்க மாற்றங்களைச் செல்லிங் செய்துள்ளார். செல்லிங் வடித்துள்ள மாதிரி சிறந்ததெனக் கூறப்படுகிறது.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகள்

அ) டோஷின் செய்தித் தொடர்பு கோட்பாடு பற்றி குறிப்ப வரைக.

ஆ) டோஷின் அடிப்படை கருத்துக்கள் யாவை?

இ) கற்கும் வலை என்றால் என்ன?

ஈ) ஆட்டக்கோட்டை விவரி.

உ) ஆட்டக் கோட்பாட்டின் தன்மைகள் யாவை?

ஊ) ஆட்டக்கோட்டின் வகைகளை கூறுக.

ஆட்டக்கோட்பாடு தொடர்பாகச் சில குறைகள் சுட்டிக் காட்டப்படுகின்றன. பன்னாட்டு அரசியல் தொடர்பாக ஆட்டக் கோட்பாடு புதிய செய்தி எதையும் குறிப்பிடவில்லை. அறிவியல் கண்டுபிடிப்புகள், தொழில்நுட்ப முன்னேற்றங்கள், தற்காலத் தத்துவ ரீதியான அணுகுமுறைகள், மக்கள்தொகை போன்றவை மூலம் வேறு வழிகளில் பன்னாட்டு அரசியலைப் பயிலமுடியும். இக்கோட்பாடு தவறான அனுமானங்களின் அடிப்படையில் அமைந்துள்ளது. பன்னாட்டு உறவுகள் தொடர்பான கலைச்சொற்களுக்கு அளிக்கின்ற முக்கியத்துவத்தை இக்கோட்பாடு உண்மைகட்கு அளிக்கவில்லை. பன்னாட்டு அரசியலில் ஒரு நாடு எவற்றிற்கு முன்னுரிமை அளிக்கிறது என்பது பற்றியும் இக்கோட்பாடு அக்கறை காட்டவில்லை. பன்னாட்டு அரசியலில் ஏற்படும் போர்கள் தொடர்பாகவும் இது எதுவும் கூறவில்லை. அரசியல் விவேகத்தில் கெடுபிடிப்போர் பற்றியும் ஆட்டக்கோட்பாடு கருத்திற்கொள்ளவில்லை. ஆட்டக் கோட்பாட்டினைக் கூறுகின்ற சிந்தனையாளர்களிடையே ஒருமித்த கருத்தில்லை. ஆட்டக் கோட்பாடு என்பது எந்த அரசியல் களத்தினைப் பற்றிக் கூறுகிறது என்பதைக் கண்டறிவதும் கடினமாகவுள்ளது. ஆட்டக் கோட்பாடு மனிதனின் பகுத்தறிவு சார்ந்த செயற்பாடுகள் பற்றி மட்டுமே அமைந்துள்ளது. ஆனால் மனிதனின் எல்லாச் செயல்களும் பகுத்தறிவின் அடிப்படையில் மட்டுமே அமைவதில்லை.

ஆட்டக்கோட்பாட்டிலுள்ள பல்வேறு குறைகள் மேலே சுட்டிக்காட்டப்பட்டன. எனினும் இக்கோட்பாடிலுள்ள சில நிறைகளை மறுக்க முடியாது. பன்னாட்டு அரசியலில் காணப்படும் சில சிக்கலான பிரச்சினைகளைப் பிரித்தறிய இது உதவுகிறது. இரண்டாவது உலகப்போருக்குப் பின்னர் பன்னாட்டு அரசியலில் இரண்டு அணிகள் தோன்றின. முதலாளித்துவ அணி மற்றும் பொதுவுடைமை அணி என்ற இவ்வணிகளிடையே கெடுபிடிப்போர் எழுந்தது. அதன் காரணமாக நேட்டோ (NATO) மற்றும் சீட்டோ (SEATO) போன்ற இராணுவ உடன்பாடுகள் ஏற்பட்டன அவற்றைப் பற்றி ஆய்வுசெய்ய இக்கோட்பாடு ஓரளவே உதவுகிறது. பன்னாட்டு அரசியலில் நிகழ்கின்ற சில நிகழ்ச்சிகள் அடிப்படையில் சில எதிர்கால நிகழ்ச்சிகளை முன்னறிவித்தல் செய்ய முடியும். அத்தகைய முன்னறிவித்தலுக்கு இக்கோட்பாடு உதவுகிறது. இது மிகப் பெருமளவிலான பயன்களை அளிக்காவிடினும் இதனை உதாசீனம் செய்ய முடியாது.

## 9.4. தொகுப்புரை

இப்பாடத்தில் அரசியல் செய்தித் தொடர்புக் கோட்பாடு அரசியலில் எவ்வாறு முக்கியத்துவம் பெறுகிறது என்பதை விவரிக்கிறது. மேலும்

ஆட்டக் கோட்பாடு பன்னாட்டு அரசியலில் எவ்வாறு செயல்படுகிறது என்பதையும் இப்பாடப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளது.

## 9.5. முக்கிய வார்த்தைகள்

| | | |
|---|---|---|
| அரசியல் செய்தித் தொடர்பு | — | அரசியல் முயைமைவு கோரிக்கைகள், ஆதரவுகள் பெறுவது. |
| ஆட்டக்கோட்பாடு | — | அரசியல் யுத்தி பின்பற்றுவது. |

## 9.6. பரிந்துரைக்கப்பட்ட நூல்கள்


1. S.P.Varma, Modern Political Theory, New Delhi, Vikas – 1983.
2. N.P. Barry, Introduction to Modern Political Theory, London, Macmillan – 1955.
3. H.T. Laski, A.Grammer of Political London, Allon and Unwin – 1948.
4. R.Dahl, Modern Political Analysis, Engle wood, Cliffs N.J. Prentice Hall – 1963.


## 9.7. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவு சோதனை கேள்விகளுக்கான பதில்கள்

| | |
|---|---|
| கேள்வி எண். 1 | பதில் எண். 9.1. |
| கேள்வி எண். 2 | பதில் எண். 9.1.1 |
| கேள்வி எண். 3 | பதில் எண். 9.1.3 |
| கேள்வி எண். 4 | பதில் எண். 9.2. |
| கேள்வி எண். 5 | பதில் எண். 9.2.1 |
| கேள்வி எண். 6 | பதில் எண். 9.2.2 |

## 9.8. மாதிரி வினாக்கள்

1. செய்தித் தொடர்ப கோட்பாட்டியலில் கார்ல் டோஷின் பங்கை விளக்குக.
2. அரசியலில் ஆட்டக் கோட்பாட்டின் முக்கியத்தை விவரி.

# அலகு – 10

# அரசியல் வளர்ச்சி (முன்னேற்றம்) கோட்பாடுகள்: அரசியல் தற்காலமயமாதல்

## அறிமுகம்

அரசியல் தலைவர்களாலும், கொள்கை உருவாக்குபவர்களாலும், பொருளாதார நிபுணர்களாலும் எடுத்துக் கையாளப்பட்ட அரசியல் முன்னேற்றம் என்ற கருத்து அரசியல் சமூகவியலில் முக்கிய இடம் பெருகின்றது. இரண்டாம் உலகப் போருக்குப்பின் பல புதிய சுதந்திர ஆசிய ஆப்பிரிக்க மற்றும் லத்தின் அமெரிக்க நாடுகள் தோன்றலாயின. இந்நாடுகளின் தோற்றம் அமெரிக்க அரசியல் சமூகவியல் அறிஞர்களை தங்களுடைய அரசியல் வளர்ச்சி குறித்து ஆய்வுகள் செய்யத் தூண்டியது. மேலும் இளைய அரசியல் சமூகவியலை அறிஞர்களுடைய மேற்கத்திய சமூகங்கள் அல்லாத மற்ற சமூகங்களை அவைகளுடைய சமூக பொருளாதாரப் பின்னணிகளைக் கொண்டுதான் சிறப்பாக ஆய்வு செய்ய முடியும் என்ற கருத்து பரவலாகக் காணப்பட்டது. இதன் விளைவாக ஒரு புதிய அணுகுமுறை தோன்றியது. இவ்வணுகுமுறை புதிய சமூக அரசியல் நிறுவனங்கள், அதன் அமைப்பு போன்றவற்றை ஆய்வு செய்வதோடு நில்லாமல், அவைகளின் இயற்கைச்சூழலின் சக்திகளையும் ஆய்விற்கு எடுத்துக் கொண்டது.

## நோக்கங்கள்

1. அரசியல் முன்னேற்றம் பற்றி கற்றறிதல்
2. அரசியல் முன்னேற்றத்தில உள்ள பிரச்சனைகளை ஆய்தறிதல்
3. தற்கால பாணியதலை உற்றுஅறிதல்
4. தற்கால பாணியதலில் ஏற்படும் தடைகளை பகுப்பாய்வு செய்தல்

## வடிவமைப்பு

அரசியல் வளர்ச்சி
சமத்துவம்
வேறுபாடு கண்டறிதல்
அரசியல் முன்னேற்றப் பிரச்சனைகளும், நெருக்கடிகளும்
அரசியல் முறையமைவை எதிர்நோக்கியுள்ள பிரச்சனையின்
தன்மை முறையமைவின் வளங்கள்
அரசியல் முன்னேற்றம் — இயல்பு
படிவங்கள்
அரசியல் வீழ்ச்சி

அரசியல் முன்னேற்றத்தின் அணுகுமுறைகள்
அரசியல் வளர்ச்சிக் கோட்பாட்டின் திறனாய்வு
அரசியல் முன்னேற்றம் பற்றிய கோட்பாடுகள்
சமூக தற்கால பாணியாக்குதலின் அளவு கூறுகளின் தொகுதிகள்
தற்காலப் பாணியாதலின் அறிகுறிகள்
தற்கால பாணியாதலிலும் சமூக மாற்றமும்
பழம்பாணியும் மற்றும் பின் தங்கிய சமூக முறையமைவும்
வளர்ந்து வரும் சமூக முறையமைவுகள்
மேற்கத்திய அல்லது வளர்ந்த சமூக முறையமைவுகள்
தற்காலப் பாணியாதலின் படிவங்கள் அல்லது பாணிகள்
தற்கால பாணியாதலுக்குள்ள தடைகள்
திறனாய்வு
தொகுப்புரை
முக்கிய வார்த்தைகள்
பரிந்துரைக்கப்பட்ட நூல்கள்
முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவு சோதனை கேள்விகளுக்கான பதில்கள்
மாதிரி வினாக்கள்

## 10.1. அரசியல் வளர்ச்சி

அரசியல் வளர்ச்சி அல்லது முன்னேற்றம் என்ற கருத்து தோன்றுவதற்கு பல சமூக அறிவியல் கோட்பாட்டாளர்கள் உதவியுள்ளனர். அவர்களில் மாலிசோகி, ராட்க்லிப் பிரவுன், டால்காட் பார்சன்ஸ் மற்றும் மரியன் லெவி போன்றவர்கள் ஏட்டளவில் இக்கருத்திற்கு ஆதரவளித்தார்கள். மேலும் லூசியன் பை ஆல்மென்ட் கோல்மென், ஆப்டர், லாஸ்வெல், லெர்நெர், ரோஸ்டோ, லிப்செட் போன்றவர்களும் அரசியல் வளர்ச்சி என்ற கருத்து வளர்ச்சியில் முக்கியமானவர்கள். இவர்கள் புதிதாகத் தோன்றிய அரசுகளில் ஏற்படும் மாற்றங்களைப் பொருளாதார, சமூக, அரசியல், உளவியல், மானிட இயல் போன்ற நிறுவனங்களிலிருந்து ஆய்வு செய்தார்கள்.

மேற்கூறிய அரசியல் வளர்ச்சி குறித்து ஆய்வு செய்த அறிஞர்களில் லூசியன் பை என்பவர் முக்கியத்துவம் பெறுகிறார். பை 1963 ஆம் ஆண்டு கலாச்சாரப் பரவுதலாலும், வேறுபடுத்தி அமைத்தாலும் கூட்டிணைவு போன்றவைகளின் அடிப்படையில் புதிய தேவைகளுக்கொப்ப பழைய

வாழ்க்கை முறை மாற்றியமைக்கப்பட்டு அரசியல் வளர்ச்சிக்கு வழிவகுத்ததாகக் கருதினார். அவர் கருத்துப்படி அரசியல் வளர்ச்சிக்கு முதல்படி தேசிய அரசின் தோற்றமாகும். மேலும் அரசியல் வளர்ச்சியை

அன்று மாறுபட்ட நிலைகளில் எடுத்துரைக்கலாம் என்று கருதினார். அவைகள் மக்கள் தொகை, அரசாங்க செயல்முறை கொள்கைகள் போன்றவைகளாகும்.

அரசியல் வளர்ச்சி என்ற கருத்திற்கு யாவராலும் ஏற்றுக்கொள்ப்பட்ட எளிமையான பொருள் விளக்கம் கிடையாது. பை அரசியல் வளர்ச்சியின் அம்சங்கள் என்ற நூலில் அரசியல் வளர்ச்சி குறித்த பல பொருள் விளக்கங்களை ஆய்ந்து ஒவ்வொன்றிலும் சில பகுதிகளை ஏற்றுக்கொண்டு மற்ற பகுதிகளை மறுக்கிறார். முடிவில் பை தன்னுடைய அரசியல் வளர்ச்சி குறித்த கருத்துக்களை எடுத்தியம்புகிறார். கீழ்க்காணும் பல பொருள் விளக்கங்கள் பல அறிஞர்களால் அரசியல் வளர்ச்சி குறித்த கருத்திற்கு அளிக்கப்பட்டுள்ளன.

1. அரசியல் முன்னேற்றத்திற்கு பொருளாதார முன்னேற்றம் இன்றியமையாதது.
2. அரசியல் முன்னேற்றம் என்பது தொழில் சமுதாயத்துக்குரிய அரசியலாகும்.
3. அரசியல் முன்னேற்றம் என்பது அரசியலைத் தற்கால பணியாக்குதல் ஆகும்
4. தேசிய அரசுகள் வெற்றியுடன் செயல்படுவதுதான் அரசியல் முன்னேற்றமாகும்.
5. அரசியல் முன்னேற்றம் என்பது நிர்வாக மற்றும் சட்ட வளர்ச்சியை குறிக்கிறது.
6. அரசியல் முன்னேற்றம் மக்கள் எழுச்சியையும், பங்கேற்பையும் குறிக்கும்.
7. அரசியல் முன்னேற்றம் ஜனநாயக வளர்ச்சியைக் குறிக்கின்றது.
8. அரசியல் முன்னேற்றம் உறுதிப்பாட்டுடன் கூடிய சீரான மாற்றமாகும்.
9. அரசியல் முன்னேற்றம் எழுச்சியையும் அதிகார வளர்ச்சியையும் குறிக்கின்றது.
10. அரசியல் முன்னேற்றம் என்பது மாற்றத்தில் பல அம்சங்களில் ஒரு அம்சமாகும்.

### 10.1.1. சமத்துவம்

அரசியல் வளர்ச்சியில் மக்கள் பங்கேற்கவும் செய்கிறார்கள். அரசியல் செயல்களில் தங்களை அதில் ஈடுபடுத்தியும் கொள்கிறார்கள். இப்பங்கேற்பு ஜனநாயக முறைப்படியோ அல்லதுர் சர்வதிகார முறையிலோ மக்களை ஒன்றுதிரட்டுவதைக் குறிக்கின்றது. எவ்வாறாயினும் மக்கள் சிறந்த முறையில் அரசியலில் ஈடுபடுகிறார்கள் என்பது உண்மையாகும்.

அரசாங்கத்தால் இயற்றப்படும் சட்டங்கள் எல்லா மக்களுக்கும் பொதுவானவைகளாகின்றன. இவைகளை நடைமுறைப்படுத்துவதிலும் வேறுபாடு கற்பிக்கப்படுவதில்லை. அரசியல் உயர்பதவிகள் திறமையின் அடிப்படையில் பூர்த்திச் செய்யப்படவும் வேண்டும்.

**செயல்திறன்**

செயல்திறன் என்பது ஒரு அரசியல் முறையமைவின் வெளிப்பாட்டுச் செயல் திறனைக் குறிக்கின்றது. இவைகள் அரசாங்கச் செயல்கள், திறமை, அறிவு போன்றவைகளை உள்ளடக்கியுள்ளன. சுருங்கக் கூறின், அரசாங்கச் செயல்கள் அதன் குறிக்கோள்களை அடையும் வண்ணம் செலுத்தப்படுகின்றன.

## 10.1.2. வேறுபாடு கண்டறிதல்

வேறுபாடு கண்டறிதல் பல வேறுபட்ட சிறப்பு அமைப்புகளையும் அதற்கு ஏற்றவாறு அமைக்கப்பட்ட பணிப்பகுப்பு முறைகளையும் ஒருங்கிணைக்கும் செயலையும் உட்படுத்தியுள்ளது.

லூசியன் பை அரசியல் முன்னேற்றத்தில் உள்ள மூன்று கூறுகளையும் சமரசப்படுத்துவதில் உள்ள பிரச்சனையை உணர்ந்திருந்தார். சமத்துவம் கோரும் நெருக்கடியாலும், செயல்திறன் தேவையின் அடிப்படையிலும் முறையமைவில் அதிகமான வேறுபாடுகள் ஏற்பட பல வழிகள் உள்ளன. இச்சமத்துவம் வேண்டிய கோரிக்கைகள் அரசாங்கத் திறமைக்குச் சவாலாக அமைவதுடன், வேறுபாடுகள் சமத்துவத்தின் முக்கியத்துவத்தைக் குறைந்து விடுகின்றன. அரசியல் வளர்ச்சி குறித்த பரந்த அளவிலான ஆய்வுகள் சமத்துவம் என்பது அரசியல் கலாச்சாரத்தையும், திறமையையும் அதிகார பூர்வமான அரசாங்க அமைப்பில் கொண்டுள்ளது என்று எடுத்தியம்புகின்றன. வேறுபாடு கண்டறிதல் என்பது அதிகாரமற்ற அரசாங்க அமைப்புகளில் பிரதிபலிக்கின்றன. இதன் மூலம் அரசியல் வளர்ச்சி குறித்த பிரச்சனைகள் ஒரு முறையமைவில் உள்ள மூன்று காரணிகளாகும்.

## 10.1.3. அரசியல் முன்னேற்றப் பிரச்சனைகளும், நெருக்கடிகளும்

அரசியல் முறையமைவுகளின் வளர்ச்சி பல உள்நாட்டு மற்றும் பன்னாட்டுக் காரணிகளின் தொகுப்பால் ஏற்படுகிறது. பன்னாட்டு அரங்கில் ஏற்படும் போர்களும் ஆக்கிரமிப்புகளும் ஒரு முறையமைவில் மாறுதலை உண்டு பண்ணுகின்றன. இதே போன்று முறையமைவின்

உட்பகுதியில் நடைபெறும் நிகழ்ச்சிகளாலும் ஒரு முறையமைவு பாதிக்கப்படலாம். ஒரு முறையமைவில் பிரச்சனைகளும் சவால்களும் தோன்றும்போது அதை ஏற்றுக் கொள்ள அதன் அமைப்புகளாலும், கலாச்சாரத்தாலும் இயலாத போது அங்கு வளர்ச்சி ஏற்படுகின்றது. ஆல்மண்ட், பவல் போன்றவர்களின் கருத்துப்படி நான்கு வகையான பிரச்சனைகள் அல்லது சவால்கள் அரசியல் வளர்ச்சிக்கு இலக்காகிறது. அவையாவன:

1. அரசை உருவாக்குவதில் உள்ள பிரச்சனைகள்
2. தேசிய நாட்டை, உணர்வை வளர்ப்பதில் உள்ள பிரச்சனைகள்
3. பங்கேற்பதில் உள்ள பிரச்சனைகள்
4. பகிர்ந்தளிப்பதில் உள்ள பிரச்சனைகள்

## 10.1.4. அரசியல் முறையமைவை எதிர்நோக்கியுள்ள பிரச்சனையின் தன்மை முறையமைவின் வளங்கள்

பிற சமூக முறையமைவுகளில் ஏற்படும் விளைவு
அரசியல் உயர்ந்தோர் குழாமின் செயல்
முறையமைமயில் ஏற்படும் பிரச்சனை

இப்பிரச்சனை ஆட்சியாளருக்கும், ஆளப்படுவர்களுக்கும் இடையே அடிப்படை கருத்து குறித்து வேறுபாடு தோன்றும் போது ஏற்படுகிறது. எதேச்சாதிகார ஆட்சி இம்மாதிரியான பிரச்சனைகளை எதிர்நோக்க வேண்டியுள்ளது. இவ்வாறான பிரச்சனையை ஆட்சியாளர் எதிர்நோக்கினால் அதற்கு பரிகாரம் மக்களின் விருப்பங்களைத் தெரிந்து அதிகாரத்தைச் சட்டபூர்வமாக்குவதேயாகும்.

### 1. ஊடுருவல் பிரச்சனை

இக்கருத்தின்படி அரசாங்கச் செயல்கள் கிராமம் வரைச்சென்றடைந்து மக்களின் அடிப்படைக் கொள்கைகளைப் பாதிக்கும் பிரச்சனையைக் குறிக்கின்றது. இப்பிரச்சனையானது அரசாங்கச் செயல்கள் மக்களின் மொத்தத் தேவைகளையும் பூர்த்தி செய்ய இயலாத போது அதிகமாகின்றது.

### 2. பங்கேற்கும் பிரச்சனை

அரசியல் செயல்களில் புதிதாக வருபவர்கள் புதிய கருத்துக்களையும், பிரச்சனைகளையும் கொண்டு வருபவர்கள். எனவே அரசியல் கட்சிகளும், தன்னலக்குழுக்களும் ஒரு முறையமைவு சரிவர முறைப்படுத்த வேண்டியுள்ளது. அவ்வாறு ஒரு முறையமைவு

தேவைகளைச் சரியாக முறைப்படுத்தவில்லையானால் புதிய சில நெருக்கடிகளையும் தேவைகளையும் அது எதிர் நோக்க வேண்டியிருக்கும். மேலும் ஒரு முறையமைவு எல்லா கட்சிகளுக்கும், தன்னலக் குழுக்களுக்கும் பங்கேற்க சந்தர்ப்பம் அளிக்க வேண்டுமா? அல்லது பிரச்சாரம் செய்வதற்கு மட்டும் அனுமதி அளிக்க வேண்டுமா? என்பது குறித்தும் பிரச்சனை தோன்றுகிறது.

### 3. ஒருமைப்பாட்டு பிரச்சனை

ஒரு அரசாங்கம் மக்களின் தேவைகளை சரியாகப் புரிந்து கொண்டு அதற்கு ஏற்றாற் போல் தனது அரசியல் செயல்களை மாற்றிக்கொள்ள வேண்டும். அவ்வாறு செய்த போது அது ஒருமைப்பட்டுப் பிரச்சனைக்கு உள்ளாகும் என்று பை கூறுகிறார். மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்குள்ள அரசாங்கத்தின் திறமை வளருவது ஒருமைப்பாட்டு பிரச்சனையை கணிசமாகக் குறைக்கிறது.

### 4. பகிர்ந்தளிக்கும் பிரச்சனை

இக்கருத்து எவ்வாறு அரசாங்க அதிகாரம் பொருடிகளின் பகிர்ந்தளிப்பை சமூகத் தேவைகள், அதன் தகவுகள் போன்றவைகளின் பகிர்ந்தளிப்பைப் பாதிக்கும் வகையில் பயன்படுத்தப்படுகிறது என்பதை விளக்குகிறது சில சமயங்களில் பகிர்ந்தளிக்கும் பிரச்சனைகளில் அரசாங்கம் நேரடியாகத் தலையிட்டு பகிர்ந்தளிப்பில் உள்ள பிரச்சனைகளைச் சமாளிக்கின்றது. மேலும் வாய்ப்பு அதிகமில்லாத குழுக்களுக்கும் அதிக வாய்ப்பை அரசாங்கம் ஏற்படுத்திக் கொடுக்கின்றது.

இவ்வகையில், பல பிரச்சனைகளின் அடிப்படையில் ஒரு நாட்டின் அரசியல் வளர்ச்சி ஏற்படுகின்றது. எனவே, உலகில் உள்ள பல நாடுகளில் அதன் பிரச்சனைகளின் அடிப்படையில் அரசியல் வளர்ச்சி அமையப்பெறுகிறது.

## 10.1.5. அரசியல் முன்னேற்றம் — இயல்பு

அரசியல் வளர்ச்சி என்ற கருத்தைத் தெளிவான முறையில் பொருள் விளக்க முடியாது என்று அறிந்தோம் எனினும் அதன் சில இயல்புகளைக் காணலாம். டேவிட் எம்.உட் என்பவர் அரசியல் அறிஞர்கள் சமூகம் தற்காலப் பாணியாகுதலின் காரணிகளை சுதந்திரமான காரணிகளாகவும், அரசியல் வளர்ச்சியின் காரணிகளை சார்ந்து நிற்கும் காரணிகளாகவும், கருதுவதாகக் கூறுகிறார். இதன் அடிப்படையில் அரசியல் வளர்ச்சியில் ஏற்படும் பல மாறுதல்கள் கீழ்காணும் தற்கால பாணியாவதற்குள்ள நடைமுறைகளின் விளைவேயாகும்.

1. தொழில் மயமாக்கப்படுதல்
2. நகரமயமாக்குதல்
3. கல்வி பரவுதலும், கல்வியறிவு பெறுதலும்
4. செய்தித் தொடர்பு பரவுதல்
5. மதச்சார்பற்ற கலாச்சாரம் விரிவடைதல்

கீழ்க்கண்ட காரணிகள் பல விதமாக அரசியல் வளர்ச்சிக்குக் காரணமாகின்றன அவையாவன:

1. தற்கால அதிகார வர்க்கம் வளருதல்
2. தேசிய உணர்வு வளர்ச்சியடைதல்
3. அரசியல் கட்சி தோன்றுதல்
4. மக்கள் பங்கேற்பு அதிகரித்தல்
5. குறிக்கோள்களை அடைவதற்காக வளங்களைத் திரட்டி முறையமைவின் திறமையைப் பெருக்குதல்.
6. அரசியல் இயக்கங்களின் செயல் ஆர்வத்தில் வீழ்ச்சி.

மேற்கூறிய அரசியல் வளர்ச்சியின் பண்புகள் அனைத்தும் அரசியல் வளர்ச்சியின் ஒன்றுபடுத்தப்பட்ட பல கோணங்களை உடைய செயலாகும்.

## 10.2. படிவங்கள்

இரண்டு கருத்துப் படிவங்கள் மூலம் அரசியல் வளர்ச்சிக் கோட்பாடு வளர்ச்சியடைந்துள்ளது. அவைகள் தொடர்படிவம் படிநிலைப்படிவம் ஆகியவையாகும்.

### 1. தொடர்படிவம்

இக்கோட்பாடு, தேசிய மொத்த உற்பத்தி, தனிமனித வருமானம், வயது வந்தவர்கள் சதவீதம், கல்வியறிவு பெற்றவர்கள் எண்ணிக்கை, வேலை செய்பவர்கள் எண்ணிக்கை, தேர்தலில் பங்கேற்பு, தொழில் வளர்ச்சி குழுக்கள், அரசாங்க ஆட்சேர்ப்பு, பதவி உயர்வு போன்றவைகளின் அடிப்படையில் அரசியல் வளர்ச்சியை அளவிடமுடியும் என்ற கருத்தை விளக்குகின்றது. இக்கோட்பாடு சமூக கோட்பாட்டாளர்களால் ஆதரவளிக்கப்பட்டு வருகின்றது. அவர்கள் அரசியல் வளர்ச்சி குறைந்த சமூகங்களில் அதிக வளர்ச்சி ஏற்படத் தூண்டக்கூடிய பொது இயங்கங்களில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டனர். மேலும் சமூக பொருளாதார உளவியல் காரணிகளுக்கும் தற்கால பாணியாதல்களுக்கும் இடையே உள்ள பணித் தொடர்பையும் உணர்த்தினர்.

2. படி நிலைப் படிவம்

இக்கோட்பாட்டில் ஒரு முறையமைவு வளர்ச்சியின் ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு மாறுகின்றது. இப்படிவம் மூன்று நிலையான வளர்ச்சியை விளக்குகிறது. அவைகள் 1) மரபு சார்ந்த நிலை 2) மாறி வரும் நிலை 3) தற்கால நிலை போன்றவையாகும். மரபு சார்ந்த நிலையில் உள்ள சமூகங்கள் கிராம சமுதாயமாக இருப்பதுடன் பொருளாதாரம் உழவுத்தொழிலை சார்ந்துள்ள நிலையில் உள்ளது. இச்சமூகங்களுக்கு ஏற்றவகையான அரசியல் அமைப்புகளும் அங்கு தோன்றி நிலை பெற்றிருந்தன. மாறி வரும் நிலையில் சமூக அமைப்பானது. தொழில் வளர்ச்சியின் தொடக்க நிலையாகும். இச்சமூகத்தில் அரசியல் முறையமைவும் மாற்றத்திற்குட்படுகின்றது. மூன்றாவது நிலையில் உள்ள சமூகம் நகர சமூகமாக இருப்பதுடன் தொழில் வளர்ச்சியடைந்த சமூகமாகவும் காணப்படுகின்றது. இந்த நகர வாழ்க்கைக்கு ஏற்ப அது தன் அரசியல் முறையமைவையும் ஏற்படுத்திக் கொள்கின்றது.

மேற்கூறிய இரண்டு மாதிரிப்படிவங்களும் தங்களுக்கு உரித்தான குறைபாடுகளைக் கொண்டுள்ளன. தொடர் படிவத்தில் பொருளாதாரம், சமூகவியல், உளவியல் போன்ற துறைகள் ஒன்றுடன் மற்றொன்று நெருங்கிய தொடர்புடையதாக இருப்பதைக் காண்கிறோம். அதேபோன்று படி நிலைப்படிவம் எல்லாவற்றிற்கும் பொதுவான ஒன்றல்ல. ஒரு அரசின் மூலம் கிடைக்கப் பெற்ற செயல்திறன் அறிவை மற்ற அரசுகளுக்கும் பயன்படுத்துவதால் அக்கோட்பாடு முழுமை பெற்றதாகக் காண்படுவதில்லை.

## 10.2.1. அரசியல் வீழ்ச்சி

அரசியல் வீழ்ச்சி என்பது அரசியல் வளர்ச்சிக்கு நேர்மாறான ஒரு நிகழ்ச்சியல்ல. அவைகள் ஒன்றொடொன்று தொடர்புடையதாகும். எனவே அரசியல் வீழ்ச்சியை விளக்க அரசியல் வளர்ச்சியின் பொருள் விளக்கம் அவசியமாகின்றது. அரசியல் வீழ்ச்சி சில சமயங்களில் சிறந்த முறையிலான அரசியல் வளர்ச்சிக்கும் வழிவகுக்கலாம். அரசாங்க உள்ளீட்டுச் செயல்களில் ஏற்படும் வீழ்ச்சியானது அரசயில் வளர்ச்சிக்கு முரணாகவும் அமைய வழியுள்ளது. இதன் விளைவாக ஒரு அரசியல் முறையமைவின் திறமை அதிக நெருக்கடியின் விளைவாகக் குறையவும் வழியுள்ளது. அரசியல் வீழ்ச்சி என்ற கருத்தைப்பற்றிக் கூறும்போது ஹன்டிங்கடன் என்பவருடைய கருத்து முக்கியத்துவம் பெருகின்றது. அவர் கருத்துப்படி எல்லா அரசியல் நிறுவனங்களும், வளர்ச்சி, முதிர்ச்சி, வீழ்ச்சி, மறைவு போன்ற நிலைக்கு உள்ளாகின்றன. மேலும் அரசியல் அமைப்புகள், நடைமுறைகள் ஆகியவை எவ்வளவு தூரம்

திட்டவட்டமான நிறுவனமயமாக்கப்பட்டிருக்கிறது என்பதை ஒரு அளவுகோலாக வைத்து அரசியலை அவர் மதீப்பீடு செய்கிறார்.

## 10.2.2. அரசியல் முன்னேற்றத்தின் அணுகுமுறைகள்

வளர்ந்து வரும் நாடுகளின் அரசியல் போக்கின் காரணமாக அரசியல் வளர்ச்சி என்ற கருத்து தற்காலத்தில் அதிக முக்கியத்துவம் பெற்றது. 1955ஆம் ஆண்டு ராய் சி.மெக்கரிடின் வளரும் நாடுகளின் அரசியல் முறைமையை ஆய்வு செய்ய முற்பட்டத. இதற்கு ஒரு முன்னோடியாக அமைந்தது. அவரைத் தொடர்ந்து ஆல்மண்ட் போன்ற அறிஞர்கள் இத்துறையில் கவனம் செலுத்தினர். இம்முறை தொடர்புமுறை அணுகுமுறையை வெளிப்படுத்தியதுடன், செயல்முறையின் மூலம் தெரிந்து கொள்ளக் கூடிய ஆய்வு முறையையும் அறிமுகப்படுத்தியது எனலாம். அவைகள் அளந்து மதிப்பிடத்தக்க முறை ஆய்வுமுறை போன்றவைகளாகும்.

கார்ல் டோஷ் என்பவர் தான் அளந்து மதிப்பிடத்தக்க ஆய்வு முறையின் முன்னோடியாக விளங்கினார். அவர் அம்முறையை சமூக எழுச்சி, பன்னாட்டு அரசியல் ஒப்பீடு போன்றவை குறித்த அரசியல் வளர்ச்சியை ஆராயப் பயன்படுத்தினார். ஏல் பல்கலைக்கழகம் தான் அளந்து மதிப்பிடத்தக்க ஆய்வு முறைய்ன மையப்பகுதியானது பாங்கஸ் மற்றும் டெக்சர் போன்றவர்களுடைய கொள்கையின் ஒரு பகுதி ஆய்வு செய்யம் முறை. ஏல் அரசியல் புள்ளி விபரச் செயலின் முக்கியப் படைப்பாகப் கருதப்படுகின்றது. இதே போன்று பல ஆய்வு நிறுவனங்களிலும் அமெரிக்காவில் தோன்றி அளந்து மதிப்பிடத்தக்க ஆய்வு முறையின் மூலம், தேசிய ஆய்வு பிரபலமடைந்தது.

தல ஆய்வு முறையும் கணிசமான முறையில் வளர்ச்சியடைந்துள்ளது. இம்முறை தனி அரசியல் முறையமைவை அதன் சமூக பொருளாதாரப் பின்னணியைக் கொண்டு ஆய்வு செய்யும் வகைக்கு முக்கியத்துவம் அளித்தது. அம்முறையில் ஆய்வாளர்கள் கானா, பர்மா, சியெர்ரா, லியோன் போன்ற வளர்ந்து வரும் நாடுகளின் அரசியல் முறையமைவுகளை அவைகளின் சமூக, உளவியல், கலாச்சார, பொருளாதார பின்னணியைக் கொண்டு ஆய்வு செய்தார்கள், இங்ஙனம் சமூக மாற்றத்திற்கு அரசியல் திறமை ஒரு காரணி என்ற கருத்து வலுவிழந்தது எனலாம்.

மேற்கூறிய இரண்டு அணுகுமுறைகளும் செயல்முறையின் மூலம் அறிந்து கொள்ளும் கோட்பாட்டின் இரண்டு பகுதியாக இருந்த போதிலும் அடிப்படையில் அவ்விரண்டும் வேறுபடுகின்றன. முதல்வகையான அளவு முறையை மக்களின் சிக்கலான வாழ்க்கை முறையிலிருந்து சில

குறியீடுகளை வேறுபடுத்துகிறது. அக்குறியீடுகள் அளந்து மதிப்பிடத்தக்கதும், ஒப்பிடத்தக்கதும் ஆகும். இரண்டாவது வகை ஆய்வு முறை வரலாறு, பூகோள, கலாச்சார சூழ்நிலைகள் மீது கவனத்தைச் செலுத்துகிறது. 1960ஆம் ஆண்டின் துவக்கத்திலிருந்து ரிகின்ஸ், ஆல்மண்ட், ராஸ்டோ, பவல், லூாசியன் பை போன்ற சமூகவியல் அறிஞர்கள் இத்துறையில் பிரபலமாக விளங்குகின்றார்கள்.

### 10.2.3. அரசியல் வளர்ச்சிக் கோட்பாட்டின் திறனாய்வு

அரசியல் வளர்ச்சி என்ற கருத்தில் மூன்று வகையான குறைபாடுகள் காணப்படுகின்றன. முதலாவதாக, அரசியல் வளர்ச்சி என்ற கருத்து தெளிவான பொருள் விளக்கத்தைக் கொண்டிருக்கவில்லை. இக்கருத்து குறித்த பல மாறுபட்ட விளக்கங்களை ஆராய்ந்த பொழுதிலும் எது எதை உட்படுத்துகிறது, எதை உட்படுத்தவில்லை என்பதைத் தெரிந்து கொள்வது மிகவும் கடினம்.

இரண்டாவதாக அரசியல் வளர்ச்சி குறித்த மாதிரி படிவங்கள் அனைத்தும் தொடர்ச்சியான ஒரு மாதிரிப் படிவத்தை வழங்கவில்லை. பகுப்பாய்வுகள் அனைத்தும் அரசியல் அல்லாத காரணிகள் தான் அரசியல் மாற்றத்திற்கும் மேடை அமைக்கின்றன என்ற எண்ணத்தை உண்டாக்கும் வகையில் அமைந்துள்ளது. இவ்வாய்வுகள் அனைத்தும் குழப்பத்தை ஏற்படுத்துவதுடன் அரசியல் விஞ்ஞானத்தை சமூக அறிவியல்கள் என்ற கடலில் புகுத்துகின்றது.

முடிவாக, அரசியல் வளர்ச்சி உலகில் உள்ள எல்லா நாடுகளும் ஏற்றுக்கொள்ளும் ஒரு மாதிரி படிவத்தை நமக்கு அளிக்கவில்லை. அரசியல் வளர்ச்சி என்ற கருத்து பொதுவுடைமைக் கோட்பாட்டையோ அல்லது முதலாளித்துவ கோட்பாட்டையோ திருப்திப்படுத்தவில்லை. இவற்றிற்கும் மேலாக அரசியல் வளர்ச்சி உண்மையில் மூன்றாம் உலக அரசியல் நடைமுறையை புரிந்து கொள்ளத் தவறிவிட்டது என்றே கூறலாம்.

மேற்கூறிய குறைபாடுகள் காணப்படினும் அரசியல் வளர்ச்சி என்ற கருத்து இன்று அறிஞர்களிடையே அதிக செல்வாக்குப் பெற்றுள்ளது. எந்த ஒரு கோட்பாடும் குறைபாடுகளுக்கு உள்ளாகாமல் இருப்பதில்லை. அதே சமயத்தில் இந்த கோட்பாட்டில் பல நிறைகளும் உள்ளன என்பதை யாரும் மறுக்க முடியாது. அவைகளை இங்கு காண்போம்.

தற்கால அரசியலில், அரசியல் என்பது ஒரு மிகப்பெரிய பிரச்சனையாகும். எனவே, அரசியல் வளர்ச்சி என்ற செயல்படிப்படியானதாகவும், உபயோகமானதாகவும் முறையானதாகவும்

அமைய வேண்டியது மிகவும் அவசியம். இங்ஙனம் இன்றைய அரசியலில் அரசியல் வளர்ச்சி என்ற கருத்து முக்கியத்துவம் பெறுகின்றது. இரண்டாவதாக, அரசியல் வளர்ச்சி அரசியல் அமைப்புகளை விலக்குவதற்கும், பிரிப்பதற்கும் பயன்படுகின்றது. ஒரு அரசியல் முறையமைவின் வளர்ச்சிப்படி நிலைகளைத் தெரிந்து கொண்டால் அதை மற்ற முறையமைவில் ஏற்படும் அரசியல் வளர்ச்சியின் படிநிலைகளுடன் எளிதில் ஒப்பிடலாம். மூன்றாவதாக ஒரு முறையமைவின் அரசியல் வளர்ச்சியை பல மாறுபட்ட காலங்களில் ஆய்வு செய்வதால் அம்முறையமைவிற்கு அடிப்படையாக அமைந்திருக்கும் கொள்கைகள் எவ்வளவு தூரம் உறுதியையும், குறைபாடுகளையும் கொண்டு விளங்குகிறது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். நான்காவதாக, அரசியல் வளர்ச்சியைப் பல படிநிலைகளில் ஆய்வு செய்வதால் ஒரு முறையமைவின் வேறுபல பண்புகளையும் அதன் பணிகளையும் விளக்க உதவுகின்றது. உதாரணமாக, துணை முறையமைவு, சுயாட்சி அமைப்பு மற்றும் பங்குமுறை வேறுபாடுகள் கலாச்சார மதச்சார்பின்மை போன்றவைகளாகும். முடிவாக, அரசியல் வளர்ச்சி குறித்த ஆய்வானது ஒரு புதிய கல்வித்திட்டத்தை உருவாக்குதாக அமைகிறது. அதை ஆல்மண்ட், பாலிமெட்ரிக்ஸ் என்று கூறுகிறார். இவ்வாறு அரசியல் ஒரு நிலையான தன்மையிலிருந்து தற்பொழுது இயங்கக்கூடிய ஒரு முறையமையாகவும் செயல் முறைகளைப் பகுப்பாய்வு செய்யும் ஒரு பாடமாகவும் அமைந்துள்ளது.

### 10.2.4. அரசியல் முன்னேற்றம் பற்றிய கோட்பாடுகள்

லூாசியன் பை என்பவர் அரசியல் வளர்ச்சி பற்றிய கோட்பாட்டியலை வளர்த்தவர்களுள் ஒருவராவர். அரசியல் வளர்ச்சியின் சிறப்பான அம்சங்களை இவர் வகுத்துக் கூறியுள்ளார். இவரின் கருத்துப்படி அரசியல் வளர்ச்சிக்கான அறிகுறிகளை கீழ்க்கண்ட மூன்று நிலைகளில் அறியலாம்.

1) மக்கள் தொகை அடிப்படை 2) அரசாங்கத்தின் முறையமைவின் பொதுப்படையான பராமரிப்பு, செயல்திறன் அடிப்படை 3) அரசியல் முறையமைவின் அமைப்பு அடிப்படை.

முதலாவதாக, அரசியல் வளர்ச்சியால் அரசியல் முறையமைவில் மக்களுடைய ஈடுபாடு கூடுதலாயிருந்தது. இதனால் மக்களுக்கு சமத்துவம் பற்றி கூடுதல் விழிப்புணர்வு இருந்தது. இரண்டாவதாக, அரசியல் வளர்ச்சியால் பொது விஷயங்களை நிர்வகிக்கவும் பொது மக்களின் தேவைகளை சரிகட்டவும் அரசியல் முறையமைவுத் திறமை பெருகுகிறது. மூன்றாவதாக, அரசியல் வளர்ச்சியில் கட்டமைப்பு சார்ந்த

வேறுபாடுகள், பணி சார்ந்த தனித்தன்மைகள் மற்றும் நிறுவனங்களுக்கடையேயான ஒருமைப்பாடுகள் ஆகியவை தோன்றின.

சமத்துவம், திறமை, வேறுபாடுகள் ஆகிய மூன்றும் லூசியன் பை கண்டுபிடித்த வளர்ச்சி ஒற்றிசைவின் மூன்று பண்பியல்புகளாகும். பையின் கருத்துப்படி அரசியல் முறையமைவின் வளர்ச்சியை இவ்வியல்புகளின் அடிப்படையில் கணக்கிடலாம்.

பை அரசியல் வளர்ச்சிக்கு எதிரான ஆறு வகையான பிரச்சனைகளை வரையறை செய்துள்ளார். முதலாவது பிரச்சனை அடையாளப் பிரச்சனையாகும். பல புதிய அரசுகளின் புராதான அடையாள முறைகள் (சாதி, இன, மொழி ஆகியவை) தேசிய அடையாள முறையுடன் போட்டியிடுகின்றன. அடையாளப் பிரச்சனை குறுகிய மனப்பான்மையும், பரந்த வழக்கமும் சார்ந்த பிரச்சனை, புராதான பாரம்பரியமும் அவசியத்தையும் வலியுறுத்துகிறது. மக்கள் இரு பிரிவுகளுக்கிடையே சிக்கி எந்தவொரு சமூகத்திலும் பற்றுறுதியில்லாது போனால் நிலையான தற்கால அரசினைத் தட்டியெழுப்பவல்ல அடையாள உணர்வைப் பெறமுடியாது.

இரண்டாவது பிரச்சனையான முறைமை நிலை குறித்த பிரச்சனை விளங்குகிறது. இதில் அரசாங்கத்தின் அதிகாரத்திற்கும் பொறுப்பிற்கும் முறைமை நிலையைப் பெறுகின்ற பிரச்சனை அடங்கும்.

ஊடுருவல் பிரச்சனை அடுத்த பிரச்சனையாகும். இப்பிரச்சனையில் சமூகத்தின் கீழ்மட்டத்திற்கு அரசாங்கம் சென்று அடிப்படைக் கொள்கைகளை அமலாக்கும் பிரச்சனை உள்ளடக்கியுள்ளது. குறிப்பிடத்தக்க கொள்கைகளை ஒரு அரசாங்கம் அமுலாக்க வேண்டுமெனில் அது மக்களுடைய அன்றாட வாழ்வில் ஈடுபட வேண்டும்.

அரசாங்கத்தில் பங்கு பெறும் பிரச்சனை நான்காவது பிரச்சனையாகும். புதிதாகப் பங்கு பெறுபவர்கள் முன்பே செயல்பட்டு வரும் அரசியல் நிறுவனங்களில் சுமையை ஏற்படுத்தும் பொழுது இப்பிரச்சனை தோன்றுகிறது. இப்பிரச்சனை தோன்றியுள்ள, தோன்றிவரும் அரசியல் குழுக்களுக்கு சுதந்திரம் அளிக்க வேண்டுமா எனும் பிரச்சனையை உட்படுத்தியதாய் விளங்குகிறது.

அரசியல் வளர்ச்சியின் அடுத்த பிரச்சனையாக ஒருமைப்பாடு விளங்குகிறது. அடுத்த பிரச்சனை பகிர்ந்தளித்தல் பற்றிய பிரச்சனையாகும். பொருள்களையும், சேவைகளையும் வளங்களையும்

சமூகத்திலுள்ளவர்களுக்குப் பகிர்ந்தளிப்பதற்காக அரசாங்க அதிகாரத்தை எவ்வாறு பயன்படுத்த வேண்டும் என்பதே இப்பிரச்சனையாகும்.

பை இப்பிரச்சனைகளின் தன்மையை அடிப்படையாகக் கொண்டு ஒரு நாட்டின் அரசியல் வளர்ச்சியை நிர்ணயிக்கலாம் என்று நம்புகிறார்.

1. அரசியல் ஒன்றிப்பு: அரசின் கையில் அதிகார குவிப்பை ஏற்படுத்துதல்
2. தொழில் மயம்: பொருளாதார வளர்ச்சியை ஏற்படுத்தும் பாவனை.
3. தேசீய நலன்: அரசின் அரசியல் மற்றும் பொருளாதார அதிகாரத்தை மக்களுக்குக் கிடைக்கச் செய்தல்.
4. மிஞ்சிய நிலை: இங்கு மக்கள் கூடுதலான பொருள் செறிவைப் பெறுகின்றனர்.

ஆர்கான்ஸ்கி அரசியல் நிறுவனங்களை கட்டியெழுப்புவதைக் காட்டிலும் பொருளாதார வளர்ச்சிக்கே கூடுதல் முக்கியத்துவம் தருகிறார். குறிப்படத்தக்க பொருளாதார வளர்ச்சி இருந்தாலே போதும். அரசியல் முறையைப்பற்றி அவர் கவலைப்படவில்லை.

டேவிட் ஆப்டர் இருவேறு வளர்ச்சி சார்ந்த முறையைக் குறிப்பிடுகின்றார். அதன்படி மக்கள் கொண்டிருந்த அரசாங்கவகை மக்கள் பரம்பரையாகப் பெற்றிருந்த தகவு முறையமைவு ஆகியவற்றைப் பொறுத்து வளர்ச்சி அமையும். மேலும் ஆப்டர் வளரும் சமூகங்கள் புதுமைப்பாங்குடைய சர்வாதிகாரங்கள் இராணுவ குழுவாட்சிகள் போன்றவைகளை ஏற்படுத்த வாய்ப்புகள் இருப்பதாகவும் கருதுகின்றார். ஆப்டரை பின் தொடர்ந்து புதுமைப்பாங்கின் மீது ஆய்வுக்கவனம் செலுத்த பல முயற்சிகள் செய்யப்பட்டன.

அறுபதாம் ஆண்டுகளின் மத்தியில் அரசியல் வளர்ச்சி பற்றிய ஆய்வில் சமூகவியல் குறிப்பாக கட்டமைப்பு சார்ந்த பணிசார்ந்த மாதிரி படிவங்கள் ஆகியவற்றிற்குக் கூடுதல் முக்கியத்துவம் கொடுக்கப்பட்ட நிலை உணரப்பட்டது. டால்காட் பார்சன்சின் வழியில் தோன்றிய அரசியல் அறிவியலர்கள் அரசாங்க முறையமைவானது சமூக உளவியல், கலாச்சாரம், பொருளாதாரம் சார்ந்த காரணிகளால் நிர்ணயிக்கப்படுவதாக எண்ணினார். அரசியல் சமூக சக்திகளின் கைபொம்மையாகக் கருதப்பட்டது. அரசியல் தலைவர்களின் திறமை மற்றும் விருப்பு அரசியல் வளர்ச்சிக்குக் காரணமாயிருக்கலாம் என்று கருதத் தவறிவிட்டனர். இப்பொழுது அரசியலும் அரசியல் வளர்ச்சியை ஊக்குவிக்கும் ஒரு காரணியாகத் திகழ்கிறது என்னும் உண்மை உணரப்பட்டது

அரசியல் வளர்ச்சி பற்றிய ஆய்வுகள் அறுபதாம் ஆண்டுகளின் மத்தியில் உலகளவில் தோன்றிய புதுமைப்பாங்கு தேசீயம் அல்லது மக்களாட்சி இவைகளால் அரசியல் வளர்ச்சி பாதிக்கப்பட்டது என்று தான் விளக்கினவே தவிர இவைகளின் மீது அரசியல் பெற்றிருந்த செல்வாக்கினை விளக்கவில்லை.

அரசியல் வளர்ச்சியை நிர்ணயிப்பதில் சமூக, பொருளாதார நிர்வாக மற்றும் கலாச்சார காரணிகளின் பங்கினை மறுக்க முடியாது. எனினும் ஒரு குறிப்பிட்ட காரணி எந்த அளவிற்கு அரசியல் வளர்ச்சியை நிர்ணயிக்க முடிந்தது என்பதைத் திட்டவட்டமாகக் கூறமுடியவில்லை. அதை சோதித்தறிவதற்கு உதந்த புள்ளி விவரங்களும் கிடைக்கவில்லை. எனவே அறுபதாம் ஆண்டுகளின் இறுதியில் சமூக பொருளாதார மற்றும் உளவியல் சார்ந்த காரணிகள் அரசியல் வளர்ச்சியை நிர்ணயிப்பதில் பெரும் பங்கு வகித்தலால் இவைகளை அரசியல் பகுப்பாய்வில் விட்டு விடுவது சரியன்று என்று உணரப்பட்டது. இருப்பினும், முடிவில் தேசத்தலைவர்களின் விருப்பு மற்றும் திறமை ஆகியவையே எப்படி வளர்ச்சி ஏற்படுகிறது என்பதற்குப் பொறுப்பாய் இருத்தலால் அரசியல் தலைவர்களின் விருப்பு, திறமை ஆகியவைகளுக்கு அரசியல் வளர்ச்சி பற்றிய ஆய்வில் இடமளிக்க வேண்டுமென கருதப்பட்டது.

சாமுவேல் ஹண்டிங்டன் என்பவர் அரசியல் வளர்ச்சியை சமூக பொருளாதார புதுமைக் பாங்கின் பிடியிலிருந்து விடுவிக்கப் பாடுபட்டவராவார். இந்த அரசியல் வளர்ச்சியை பல சட்டங்களின் அடிப்படையில் நோக்கும் முறைக்கு எதிர்ப்பு தெரிவித்தார். அரசியல் வளர்ச்சி தற்பொழுதைய மேற்கத்திய சமூகங்களை பிரதிபலிப்பதாக மாத்திரம் இருந்தால் எல்லா

சமூகங்களும் இந்த மார்க்கத்திலேயே அமைவதனால், பண்டைய சீன, கிரேக்க, உரோம, எகிப்திய, இந்திய முதலிய வளர்ச்சியுற்ற அரசியல் முறையமைவுகளை எவ்வாறு எண்ணுவது? இவற்றின் காலம், சூழ்நிலை ஆகியவைகளை வைத்துப் பார்க்குமிடத்து இவையனைத்தும் அரசியல் வளர்ச்சிக்கான தகுதிகளைப் பெற்றிருந்தன என்பது மறுக்க முடியாதது. அரசியல் வளர்ச்சி பற்றிய அறிவுக்கு ஹண்டிங்டன் ஆற்றிய மிகப் பெரிய சாதனை இவர் கூறும் அரசியலில் அழிவு பற்றிய கருத்தாகும். எவ்வாறு நிறுவனங்கள் கெட்டு அழிகின்றன. அவை எவ்வாறு வளர்ந்து முதிர்ச்சி எய்துகிறது என்பதே இவருடைய முக்கியப் படைப்பாகும். ஹண்டிங்டன் அரசியல் வளர்ச்சியை புதுமைப்பாங்குடன் தொடர்புபடுத்தும் போக்கினைக் கடுமையாக எதிர்க்கிறார். இவர் புதுமைப்பாங்கினை அரசியல் வளர்ச்சியின் ஒரு அம்சமாகக் கருத

மறுத்தார். ஆனால் புதுமைப்பாங்கினை தற்கால அல்லது புராதன அரசியல் கூட்டமைவுகளுக்குள்ள நிலைப்புதன்மை, குறைபாடுகளுக்கும் இடையே எதிர் எதிர் தொடர்பு உண்டு என்பதை மறுக்கவில்லை. இருப்பினும் அரசியல் கூட்டமைவுகளின் தன்மையே புதுமைப்பாங்கிற்கு இடமளிக்கிறது என்பது இவர் வாதம் இவரைப் பொறுத்தவரையில் அரசியல் வளர்ச்சியை நிர்ணயிப்பதற்கான அளவுகோல் அரசியல் அமைப்புகள் மற்றும் அரசியல் நடைமுறைகளேயாகும். நன்கு நிறுவப்பட்ட அரசியல் முறையில் சுயேச்சைத் தன்மை, ஒன்றுபடல் ஆகிய பண்புகள் உயர் அளவில் இருக்கும் என்பது இவரது கொள்கையாகும்.

ரிக்ஸ் என்பவர் தனது "தற்கால அரசியல் பகுப்பாய்வு" எனும் நூற்பகுதியில் ஆல்மண்ட் முதல் ஹண்டிங்டன் வரையுள்ளோரின் அரசியல் வளர்ச்சி சார்ந்த கருத்துக்களைத் திரட்டி தனது அரசியல் வளர்ச்சி பற்றிய கோட்பாட்டியலை உருவாக்கப் பயன்படுத்தியுள்ளார். இவருடைய கருத்துப்படி, தொழில்துறை சார்ந்த மாறுதலுக்கும் கலாச்சாரம் சார்ந்த மாறுதலுக்கும் இடையே வேறுபாடு இருப்பதோடன்றி, அரசியல் நிறுவனங்கள் கலாச்சாரத்தைக் காட்டிலும் தொழில் துறையுடன் மிக நெருங்கிய உறவு கொண்டு விளங்குகிறது. உதாரணமாக, அரசியல் கட்சிகளை ஏற்படுத்துவது தொழிற்துறை சார்ந்தது. இது பொதுவுடைமை சார்ந்த பகுப்பாய்விற்கும் பணிசார்ந்த பகுப்பாய்விற்கும் இடையே வேறுபாடு காண்கிறார். இவர், அரசியல் வளர்ச்சி பற்றிய கோட்பாட்டியலார்கள் பணிசார்ந்த பகுப்பாய்விற்கு கூடுதல் கவனம் செலுத்துகின்றனர் என்றும் கட்டமைப்பு சார்ந்த பகுப்பாய்விற்கு அவ்வளவாக கவனம் செலுத்தமலிருக்கிறார்கள் என்று குறை கண்டார்.

நிறுவனப்படுத்துதல் அவசியம் என்னும் ஹண்டிங்டனின் கருத்தினை இவர் ஏற்றுக்கொள்ளவில்லை. கூடுதலான நிறுவனப்படுத்துதல் அரசை வளர்ச்சி வலையில் சிக்க வைத்துவிடும் என்று ரிக்ஸ் அஞ்சினார்.

## அரசியல் தற்காலமயமாதல்

தற்காலப் பாணியாதல் என்ற சொல் பழைய நடைமுறையைக் குறிக்கின்ற ஒரு புதிய சொல்லாகும். இச்செயலின் மூலம் பின்தங்கிய முன்னேற்றம் அடையா சமூகங்கள் முன்னேறும் நோக்கோடு முன்னேற்றம் அடைந்த சமூகங்களைப் பின்பற்றுகின்றன. இங்ஙனம் ஒரு சமூகம் தன் இயற்கை வளங்களைச் செம்மையாகப் பயன்படுத்தித் தம்மை நவீனப்படுத்திக் கொள்கிறது. சுருங்கப் கூறின், சமூக சூழ்நிலைகளில் ஏற்படும் மாற்றங்களுக்கு ஏற்றவாறு ஒரு அரசியல்

கலாச்சாரம் மாறுபடுவதையே தற்காலப் பாணியாதல் என்ற சொற்றொடர் குறிக்கின்றது.

இரண்டாம் உலகப் போருக்குப்பின் சமூக மாற்ற நடைமுறைகளைக் குறிக்க ஐரோப்பிய பாணிமயமாக்குதல், ஆங்கில பாணிமயமாக்குதல் மேற்கத்தியப் பாணிமயமாக்குதல் என்ற மாறுபட்ட சொற்கள் பயன்படுத்தப்பட்டன. ஆனால் போருக்குப்பின் இச்சொற்கள் எல்லாம் சமூக மாற்றத்தைக் குறிப்பிட்ட முழுமையான உய்த்துணரும்படியான சொல்லாக இல்லை என பெரும்பாலான அறிஞர்களால் உணரப்பட்டது. எனவே சமூக மாற்றத்தை முழுமையாகப் புரிந்து கொள்ள உதவும் ஒரு புதிய சொல்லாகத் தற்கால பாணியாதல் உருவெடுத்தது. இச்சொல் விரிவான முறையில் சமூகம் தற்காலப் பாணியாக்குதலின் எல்லாப் பகுதியையும் நன்கு விளக்குகிறது.

லூாசியின் பை என்பவர் தற்கால பாணியாக்குதலுக்குக் கீழ்கண்டவாறு இலக்கணம் வகுக்கின்றனர். மரபு சார்ந்த கரமாங்களும் அல்லது பழங்குடி சமூகங்களும் தற்கால தொழில் மயமான நகரவாழ்க்கையின் நெருக்கடிகளுக்கும், தேவைகளுக்கும் ஏற்றவாறு எதிர்செயல் புரிவதையே தற்காலப்பாணியாக்குதல் என்ற சொல் குறிக்கிறது என்கிறார். உலக கலாச்சாரம் பரவுதல் என்ற பொருளைக் குறிப்பிடுவதற்குக்க கூட தற்காலப் பாணியாக்குதல் என்ற சொல்லைக் கையாளலாம். இந்தக் கலாச்சாரம் பழம்பாணி சமூகங்களை மறையச் செய்து அதனுடைய இடத்தில் ஒரு புது சமூகத்தை விஞ்ஞானம், தொழில் நுட்பம், சமய சார்பிலா சமூக உறவு போன்றவற்றை அடிப்படையாகக் கொண்ட சமூகத்தை உருவாக்க முயலுகிறது. இந்தப் புதிய சமூகம் தேசிய அரசுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கக் கூடியதாகவும் இருக்கின்றது.

### 10.3. சமூக தற்காலபாணியாக்குதலின் அளவு கூறுகளின் தொகுதிகள்

சமூக தற்கால பாணியாதல் என்ற செயல் விரிவான ஒன்றாகும். இது அரசியல், பொருளாதாரம் சமூகவியல், உளவியல் போன்றவைகளை உள்ளடக்கியுள்ளது. ஹன்டிங்டன் கூறுவதுபோல சமூகத் தற்காலப் பாணியாக்குதல் என்பது மாற்றத்தை உள்ளடக்கிய பல கோணங்களைக் கொண்ட ஒரு செயலாகும். இது மனித எண்ணங்களையும், செயல்களையும் உள்ளடக்கியதாகும். இதனால்

தற்கால பாணியாதல் பலகோணங்களைக் கொண்ட ஒரு செயல்முறை எனக்கூறலாம்.

(1) பொருளாதார அளவில் தற்கால பாணியாதல் பொருளாதார வளர்ச்சியைக் குறிக்கின்றது. நாட்டின் உற்பத்தியைப் பெருக்குதல், தனி மனித சம்பளம், பொருளாதார வளர்ச்சித் திட்டம், தொழில் மயமாக்குதல், முதலீட்டைப் பெருக்குதல், நகரமயமாக்குதல், விவசாயத்தில் ஈடுபட்டுள்ளவர்களின், எண்ணிக்கையைக் குறைத்தல், வணிகத்தை வளர்த்தல் போன்ற துறைகளில் ஏற்படும் முன்னேற்றத்தைத் தற்காலப் பாணியாதல் என்ற தொடர் குறிக்கின்றது.

(2) அறிவாற்றல் சார்ந்த துறையில் தற்காலப் பாணியாதல் என்பது விஞ்ஞான வளர்ச்சியையும், கல்வித் துறையிலும், மக்கள் செய்தித் தொடர்புத் துறையிலும் ஏற்படும் முன்னேற்றங்களைக் குறிக்கின்றது.

(3) சமுதாய நிலைப்புள்ளி விவர ஆய்வுத்துறையில், தற்காலப் பணியாதல் வாழ்க்கைத் தர உயர்வு, மக்கள் இடமாற்றம், நகரமயமாக்குதல் போன்ற துறைகளில் ஏற்படும் வளர்ச்சியைக் குறிக்கின்றது.

(4) சமூக அளவில் தற்கால பாணியாதல் தனிமனித விசுவாசம் குடும்பத்திற்கும், முதன்மைக் குழுக்களின் விசுவாசம், சுதந்திரமாக அமைக்கப்பட்ட சங்கங்களுக்கும் மாற்றப்படுவதைக் குறிக்கின்றது.

(5) தற்காலப் பாணியாதல் உளவியல் அடிப்படையில் மக்களின் மரபுகளிலும் தகவுகளிலும், ஆற்றுப்பயிற்சிகளிலும் ஏற்படும் மாற்றங்களைக் குறிக்கின்றது.

(6) வரலாறு அடிப்படையில் தற்காலப் பாணியாதல் வடக்கு ஐரோப்பாவிலும், வடக்கு அமெரிக்காவிலும் சமூக, பொருளாதார, அரசியல் முறையமைவுகளில் ஏற்பட்ட மாற்றங்கள் மற்ற ஐரோப்பிய நாடுகளிலும் பரவுவதைக் குறிக்கின்றது.

தற்காலப் பாணியாதல் விரிவான செயல்களின் தொகுப்பாகும். இது பொருளாதார வளர்ச்சியில் ஏற்படும் தீவர மாற்றங்கள், அரசியல் முறையமைவின் தன்மை, பொருள் போன்றவற்றில் ஏற்படும் மாற்றங்கள்,

சமூக உளவியல் துறையில் ஏற்படும் மாற்றங்கள் போன்றவைகளை அது குறிக்கின்றது.

### 10.3.1. தற்காலப் பாணியாதலின் அறிகுறிகள்

மேற்கூறிய விவாதத்தின் மூலம் தற்காலப் பாணியாதலின் அறிகுறிதகள் சிலவற்றைத் தற்கால சமூகத்தில் காணலாம். அவைகள் 1) நகரமயமாதல் 2) தனிமனித வருமானம் அதிகரித்தல் 3) தேசிய பொருள் உற்பத்திப் பெருக்கம் 4) கல்வி அறிவு அதிகரித்தல் 5) அதிக அளவு அரசியல் பங்கேற்பு 6) சமயச் சார்பின்மை 7) சார்ந்துறையிலிருந்து திறமைக்கு மாறுதல் 8) அரசியல் அதிகாரத்தின் தன்மையும், அளவும் அதிகரித்தல் 9) சமூகத்தின் பங்கிற்கும், அமைப்பிற்கும் வேறுபாடு கற்பித்தல் 10) தொழிலாளர்கள் உழைப்பு பெருகுதல் 11) வரவு செலவுத் திட்டத்தில் தொழிலுக்கு அதிக பங்கு அளித்தல் 12) மின் சக்தி அதிகம் உபயோகித்தல் 13) தேசிய ஒருமைப்பாட்டைப் பேணுதல் ஆகியவையாகும்.

### 10.3.2. தற்காலப் பாணியாலும் சமூக மாற்றம்

அரசியல் தற்காலப் பாணியாதல் பற்றிய படிப்பு அதற்கும் சமூக எழுச்சிக்கும் உள்ள உட்தொடர்பை விளக்குகின்றது. இக்கருத்தின் அடிப்படையில் உலகில் உள்ள சமூக முறையமைவுகளை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். அவைகள் பழம்பாணி மற்றும் பின்தங்கிய சமூக முறையமைவு, வளரும் சமூக முறையமைவுகள், மேற்கத்திய அல்லது வளர்ச்சியுற்ற சமூக முறையமைவுகள் என்பனவாகும்.

### 10.3.3. பழம்பாணி மற்றும் பின்தங்கிய சமூக முறையமைவு

இவ்வகைப் பின்தங்கிய சமூக முறையமைவுகளில் மரபுகளும், சடங்கு முறைகளும் மக்களிடம் மதிப்பையும், அதிகாரத்தையும் பெற்றுத் திகழ்கின்றன. அதிகாரம் எங்கு இருந்ததோ அங்கேயே முடங்கிக் கிடக்கின்றது. அதிகாரத்தை மாற்றுவதற்கும், சமூக போதனைக்கும், ஆட்சேர்ப்பு முறைக்கும் மாற்றத்தை உண்டாக்கக்கூடிய எந்தவிதமான முயற்சியும் செய்யப்படாத நிலையில் உள்ளது. அரசாங்க நிறுவனங்களிலும், தன் விருப்பச் சங்கங்களிலும் உறுப்பினர்கள் சமய சாதி அடிப்படையிலும் ஒரு சில குறிப்பிட்ட குழுக்களாலும் நடத்திச் செல்லப்படுகின்றனர். இவ்வாறான படிநிலை அமைப்புள்ள அரசாங்க அதிகாரம் மக்கள் தங்களை முழுவதுமாக அர்ப்பணித்துக் கொண்ட நிலையையே அல்லது நன்கு அமைக்கப்பட்ட முறைக்கு எதிரான தவிர

சமதர்மக் கொள்கையை ஏற்றுக் கொண்டு நடைபெற்றுக் கொண்டிருக்கும் முறையமைவிற்கு எதிராகச் செயல்படும் முறையையே ஏற்படுத்துகின்றது.

பல மூன்றாம் உலக நாடுகளாகிய நேபாளம், பூட்டான், சைராலியோன் போன்ற நாடுகளைப் பழம்பாணியில் பின் தங்கிய சமூக முறையமைவுகளுக்கு உதாரணமாகக் கூறலாம். இச்சமூகங்களில் பழைய ஒரே குடும்பத்தவரோ அல்லது ஒரு குடியினரோ தொடர்ந்து பெற்று அவர்கள் எழுத்தறிவில்லாத மக்களின் தலைவிதியை நிர்ணயம் செய்கிறார்கள். நகரமயமாக்குதல், கல்வி வளர்ச்சியடைதல், செய்தித் தொடர்பு சாதனங்கள் போன்றவைகள் அபிவிருத்தி அடைந்த போதிலும் அரசியல் தற்கால பாணியாதலின் குறிக்கோள்களாகிய மக்களாட்சி, நிலைப்புத்தன்மை, அமைப்பு வேறுபாடுகள், திறமை அடிப்படை, தேசிய ஒருமைப்பாடு போன்றவைகள் எப்பொழுதும் பூர்த்தி செய்ய முடியாத குறிக்கோளாகக் காணப்படுகின்றன. இம்மாதிரியான சமூக முறையமைவுகளில் காணப்படும் முக்கிய அம்சம் என்னவென்றால் முன்னேற்றத்தை நோக்கி பீறு நடைபோடும் அரசியல் சமூகங்களில், சில சமயம் சில சமூகங்கள் பின்நோக்கிச் சென்று எதேச்சாதிகாரமான ஆட்சியையோ, ஒரு கட்சி ஆதிக்க ஆட்சியையோ ஏற்படுத்திக் கொள்கின்றன. தேசிய ஒருமைப்பாட்டை வேண்டிய சமூகங்கள் அதனை அடையும் முயற்சியில் வெற்றியடையாமல் இன மற்றும் உள்நாட்டுக் கலகங்களை எதிர்நோக்க வேண்டியுள்ளது. சில நாடுகளில் அவை அன்னியராட்சிக்கு அடிமைப்பட்டிருந்த காலத்தில் உருவாகிய திறமையான அதிகாரவர்க்கமும், கட்சி முறையும் நாளடைவில் வலுவிழந்து நிற்பதைக் காணலாம்.

## 10.3.4. வளர்ந்து வரும் சமூக முறையமைவுகள்

வளர்ந்து வரும் நாடுகளில் உள்ள சமூக முறையமைவுகள் பழமையையும் புதுமையையும் ஏற்றுக் கொண்ட சமூகங்களாகும். வளர்ந்து வரும் சமூக முறையமைவுகள் ஐரோப்பிய அரசுகளின் கீழ் காலனியாக இருந்த நாடுகளைக் குறிக்கின்றன. இந்நாடுகள் காலனிகளாக இருந்த போது இதன் அன்னிய ஆட்சியாளர்கள் அவர்களின் கலாச்சாரத்தை காலனிகளின் மீது வெற்றிகரமாகப் புகுத்தினார்கள். அன்னிய ஆட்சியிலிருந்து விடுபட வேண்டி சுதந்திரப் போராட்டம் தொடங்கிய போது மரபார்ந்த கட்டுப்பாடுகளும் செல்வாக்கும், சுதந்திரம் பெற வேண்டும் என்ற குறிக்கோளுடன் இணைந்தன. சுதந்திரம் பெற்றபின் மரபார்ந்த நெருக்கடிகள் திரும்பவும் பழைய நிலையை அடைந்து விருப்பக் குழுக்களும் அரசியல் கட்சிகளும் தோன்றுவதற்கு அடிப்படையாக அமைந்தன. இதன் விளைவாக புதிய நிறுவனங்கள் பழைய மரபுகளை அடிப்படையாகக் கொண்டு எழுந்தன. இவைகள்

தொடர்ச்சியாக தொழில் இயல்கள் மீதும் நகரமயமாக்குதல் மீதும் அதிக செல்வாக்குப் பெற்றுத் திகழ்கின்றன.

மேற்கண்ட விவாதத்தின் மூலம் இங்கு இரண்டு முக்கியக் கருத்துக்களைக் காணலாம். முதலாவதாக, அரசியல் தற்கால பாணியாக்குதல் விரைவுப்படுத்தப் படுவதனால் மரபுகள் முழுவதும் புதுமைப்பண்புகளுக்கு அர்ப்பணம் செய்யப்படுவதில்லை. இதற்கு ஒரு சிறந்த சான்றாகத் துருக்கியைக் கூறலாம். முஸ்தாபா கமால் துருக்கியை அரசியல் சமூக போதனையின் மூலம் தற்கால பாணியாக்க விரும்பினார். ஆனால் அவருக்குப் பின் பதவிக்கு வந்த இஸ்மெட் இனோனு அதே செயலை புதிய நினைவுச் சின்னங்கள், தேசிய கல்வி போன்றவைகளின் மூலம் துருக்கியை தற்காலப் பாணியாக்க முயன்றார்.

இரண்டாவதாக, சமூகம் பழமையிலிருந்து முழுமையாக விடுபடவில்லை முழுமையான அடிப்படை மாறுதல்கள் சமூகத்தில் நிகழ்ந்தபோதிலும் பழமையின் சில அம்சங்கள் இன்னமும் தொடர்ந்து கொண்டு தான் இருக்கின்றன. ஒரு சமூகத்தில் அரசியல் தற்காலப் பாணியாதல், சமூக போதனை, ஆட்சேர்ப்பு போன்றவைகள் நடைபெற்றுக் கொண்டிருக்கும் வேளையிலேயே அம்முறையமைவில் வாழும் மக்கள் தங்கள் தலைவர்கள் மீதும் சமூக, அரசியல் குறித்த தத்துவங்கள் மீதும் அசைக்கமுடியாத அளவு நம்பிக்கை கொண்டுள்ளார்கள். இதன் காரணமாக சமூகத்தில் உள்ள சில கொள்கைகள் சமய அந்தஸ்தைப் பெற்றுள்ளன.

### 10.3.5. மேற்கத்திய அல்லது வளர்ந்த சமூக முறையமைவுகள்

இம்மாதிரியான நாடுகளில் உள்ள மக்கள் செல்வந்தர்களாகவும் நன்கு கல்வி பெற்றவர்களாகவும் காணப்படுகிறார்கள். நாடும் நகரமாக்கப்படுவதுடன் தொழில் மயமாகவும் ஆக்கப்படுகிறது. நிறுவன அமைப்புகளில் உள்ள தீர்மானங்களைச் செய்கின்றவர்கள் மக்களிடமிருந்து நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு சட்டப்படியாக மக்களுக்குப் பொறுப்பானவர்களாகின்றார்கள். ஏனெனில் அங்கு மக்களின் செல்வாக்கு பெறாதத் தீர்மானங்கள் ஆட்சியாளர்களால் இயற்றப்படுவதில்லை. இம்மாதிரியான வளர்ந்த சமூக முறையமைவுகளில் மக்களாட்சித் தன்மையில்லாத முறையில் தீர்மானங்கள் செய்யக்கூடிய அமைப்புகள் பல காணக்கூடும். எடுத்துக்காட்டாக படுகை நிலையில் அமைக்கப்பட்ட ஒரு கட்சியில் தீர்மானம் செய்யும் அதிகாரம் அனைத்தும் உயர்மட்டத்தில் உள்ள அமைப்பில் மட்டும் மையப்படுத்தப்பட்டுள்ளதைக் கூறலாம். இவ்வாறு இருப்பினும் மக்களாட்சி முறையில் பற்றும் ஈடுபாடும் அதிகமாகக் காணப்படும் மக்களிடையே இம்மாதிரி தீர்மானம்

செய்யும்முறை தொடர்ந்து நீடிக்காது. இம்மாதிரியான சமூக முறையமைவுகளுக்கு இங்கிலாந்து, அமெரிக்கா, பிரான்ஸ் போன்ற நாடுகளை எடுத்துக்காட்டாகக் கூறலாம். அதிகாரம் வாய்ந்த இங்கிலாந்தின் தலைமை அமைச்சர், இங்கிலாந்து ஐரோப்பிய பொதுச் சந்தையில் உறுப்பினராகச் சேரவேண்டுமா என்ற பிரச்சனைக்குத் தீர்வு காண தேர்தலை சந்திக்க வேண்டியதாயிற்று. இதே போன்று அல்ஜிரியா சுதந்திரக் கிளர்ச்சியை ஒடுக்குவதற்காக பிரெஞ்சு மக்களால் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரஞ்சுக் குடியரசுத் தலைவர் கடைசியில் அல்ஜிரியாவிற்கு சுதந்திரம் வழங்க வேண்டிய கட்டாயத்திற்குள்ளானார். இதிலிருந்து மேற்கூறிய சமூக முறையமைவுகள் எல்லாம் ஜனநாயக மரபுகளுக்குத் தங்களை உட்படுத்திக் கொண்டன என அறிகிறோம். வளர்ந்து வரும் சமூக முறையமைவைக் காட்டிலும் மேற்கத்திய சமூகங்கள் நன்கு முன்னேறிய சமூக முறையமைவுகளைப் பெற்றுள்ளன.

### 10.3.6. தற்காலப் பாணியாதலின் படிவங்கள் அல்லது பாணிகள்

ஹன்டிங்டன் மூன்று தற்காலப் பாணியாதலின் படிவங்களைக் கூறுகின்றார். அவைகள் பிரிட்டிஷ் வகை இங்கிலாந்தும் பிரான்சும் இவ்வகையைச் சேர்ந்தவைகள், இந்நாடுகள் மற்ற நாடுகளுக்கு முன் தற்காலப் பாணியாகி மற்ற நாடுகளுக்கு முன்மாதிரியாக விளங்குகின்றன. இரண்டாவது படிவம், அமெரிக்கப் படிவமாகும் இதற்கு அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா, நியூசிலாண்டு போன்ற நாடுகளைச் சான்றாகக் கூறலாம். இவை புதிய உலகில் இங்கிலாந்தின் படிவத்தைப் பின்பற்றியவைகள். மூன்றாவது படிவம் ஐரோப்பிய கண்ட படிவம் என்றழைக்கப்படுகிறது. இவ்வகை சமூகங்கள் பிரெஞ்சுப் புரட்சி நடைபெற்ற காலத்திற்குப் பின்பு தற்காலப் பாணியாதலுக்குட்பட்டன.

## 10.4. தற்காலப் பாணியாதலுக்குள்ள தடைகள்

தற்காலப் பாணியாதல் என்ற சொல் சுமூகமாக நடைபெறும் செயல் அன்று. சில காரணங்கள் இருப்பதுவும் இல்லாதிருப்பதும் தற்காலப் பாணியாதலுக்குத் தடையாகவோ முட்டுக்கட்டையாகவோ விளங்குகின்றன. அவைகளை இங்கு காண்போம்.

1. உறவுத் தொடர்பு முறை

தற்காலப் பாணியாதலுக்கு மரபுசார்ந்த உறவுத்தொடர்பு முறை அமைப்புத் திறன் வாய்ந்த தடையாக விளங்குகிறது. மேலும், உறவுத் தொடர்பு அமைப்பு, தொழில் வளர்ச்சிக்கும் முட்டுக்கட்டையாக இருக்கின்றது. ஏனெனில் மரபு சார்ந்த உறவுத் தொடர்பு முறை

தனிமனிதனுக்கு முக்கியத்துவம் கொடுக்கின்றதே அல்லாமல் அவனால் உருவாக்கப்படும் கருவிகளுக்கு முக்கியத்துவம் அளிப்பது இல்லை.

2. சமூகத்தில் பெண்களுக்குள்ள அந்தஸ்து

மரபு சார்ந்த பெரும்பான்மை சமூகங்களிளெல்லாம் ஆண்கள் ஆதிக்கம் செலுத்துகின்றார்கள். அரசியல் சமூக, பொருளாதார கல்வி போன்ற துறைகளில் பெண்களுக்கு ஆண்களுடன் உள்ள சம அந்தஸ்தை மரபு சார்ந்த சமூகங்கள் அளிப்பதில்லை. இதன் விளைவாக, சமுதாயத்தில் உள்ள மக்கள் எண்ணிக்கையில் ஏறத்தாழ பாதிப்போர்கள் தற்காலப் பாணியாதிலிருந்து புறக்கணிக்கப்படுகிறார்கள்.

3. மக்கள் பெருக்கம்

பல பின் தங்கிய நாடுகளில் உணவு உற்பத்தியை விட அதிகமாக ஜனப்பெருக்கம் ஏற்படுகின்றது. இவற்றின் தேசீய பொருள் உற்பத்தி மூன்று சதவீதத்தில் அதிகரிக்கிறது. இதனால் இப்பின் தங்கிய நாடுகள் முன்னேற முடியாமல் தேக்க நிலையில் இருப்பதுடன் மக்களுக்கு நல்வாழ்வைக் கொடுக்கவும் இயலாத நிலையில் உள்ளன. இதன் விளைவாக பொருளாதார நிலை நாளுக்குநாள் வீழ்ச்சியடைந்து கொண்டிருக்கின்றது.

4. சமயம்

சமயம், மாற்றத்திற்கு உட்படாமலும், பொருளாதார வளர்ச்சிக்கு முட்டுக்கட்டையாக விளங்குகிறது. சமயம் மரபுகளின் மொத்த தொகுப்பாகவும் உறுதிப்பாடுகள், தகவுகள் போன்றவைகளின் அடிப்படையாகவும் விளங்குவதால் அது தற்கால விஞ்ஞானம், தொழில் நுட்பம் போன்றவைகளில் ஏற்படும் மாறுதல்களை ஏற்றுக் கொள்ள முடியவில்லை. எனவே சமயம் தொடர்ந்து தற்காலப் பாணியாதலின் தடையாக விளங்குகிறது.

5. வயதாகிக் கொண்டிருப்போரும், முதியோரும்

மரபு சார்ந்த சமூகத்தின் ஒரு முக்கியச் சிறப்பு முதியோருக்கு மதிப்புக் கொடுப்பதாகும். ஆனால் தற்காலப்பாணியாதலின் பொது எண்ணம் முதியோருக்கு மதிப்புக் கொடுப்பதை விடுத்து இளைஞர் கலாச்சாரம் ஒன்றைத் தோற்றுவிப்பதேயாகும்.

6. அரசியல் தற்கால பாணியாதல்

அறிஞர்களின் கருத்துப்படி, பொருளாதார மற்றும் சமூகத் தற்கால பாணியாதலில் அரசியல் தற்கால பாணியாதல் என்பது மறுக்க முடியாத ஒன்றாகும். முதலில் அரசியல் தற்கால பாணியாக ஆக்கப்பட்டால் மக்கள் தேசிய அரசு, தலைவர்கள் போன்ற பெரிய பிரச்சனைகளைக் குறித்து அதிக விருப்பம் எடுத்துக் கொள்வார்கள்.

7. செய்தித் தொடர்பு

டேவிட் லெர்நெர் என்பவருடைய கருத்துப்படி எந்த தற்கால சமூகமும் திறமையாக நன்கு வளர்ச்சியடைந்த மக்கள் தொடர்பு சாதனங்கள் இல்லாமல் பணியாற்ற முடியாது. கார்ல் டோஷ் என்பவரும் இக்கருத்தை கூறுகையில் தற்காலப்பாணியாதலின் முக்கியக்கூறு மக்கள் செய்தித் தொடர்பு சாதன்ங்களே ஆகும் என்று கூறுகிறார். ஏனெனில் தற்கால மனிதன் ஒவ்வொரு நாளும் பல மக்கள் செய்தித் தொடர்பு சாதனங்களுக்கு உட்படுத்தப்படுகிறான்.

8. சமூக படுகை நிலைகள்

மரபு சார்ந்த சமூகங்கள் பொதுவாக பிறர் நுழையமுடியாத வகுப்பு முறையையும் நெகிழாத சாதி அமைப்பையும் கொண்டுள்ளன. ஒரு குடியில் பிறக்கும் ஒருவர் மற்ற வகுப்பிற்கோ அல்லது சாதிக்கோ மாற முடியாது. ஒரு குடும்பத்தில் பிறக்கும் ஒருவன் அதே குடும்பத்தில் வளர்ந்து அங்கேயே இறந்து போகின்றான். பின் அவன் மகன் வளர்ந்து குடும்பத் தலைவனாகின்றான். இங்ஙனம் தலைமுறை தலைமுறையாக மரபு சார்ந்த சமூகங்கள் மாற்றங்கள் இல்லாமல் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன. அந்தஸ்தும், மரியாதையும் பழமையின் அடிப்படையில் குடும்பங்களிலிருந்தே மக்களுக்கு வழங்கப்படுகின்றன. அதிகாரத்துக்கு மக்கள் அஞ்சுகிறார்கள். மரியாதை கொடுகின்றனர். ஆனால் தற்கால வாழ்க்கை மரபு சார்ந்த வாழ்க்கைக்கு முரணான ஒன்றாகும். தேசிய சமூகத்தில் மற்ற எல்லா குடிமகனைப் போலவும் சமூகத்தில் தன்னை ஒரு பகுதியாகவும் தற்கால மனிதன் நினைத்து வாழ்கின்றான்.

9. பணி ஈடுபாடு

பலர் பொருளாதார நெருக்கடி காரணமாக நகரத்திற்கு வேலை தேடி வருகிறார்கள். சிறிது காலம் பணியாற்றி சிறிது பணம் சேர்த்துக் கொண்ட பின்பு சிலர் திரும்பவும் கிராம வாழ்க்கைக்கு திரும்பி வருகிறார்கள். இதன் விளைவாக பயிற்சிக்காக ஒருவனுக்கு செய்த செலவும், போதிய பணியாள் கிடைக்காத காரணத்தால் உற்பத்தியும் வெகுவாகப் பாதிக்கப்படுகின்றன. இவர்களில் சிலர் விவசாயத் தொழிலுக்குப் பதிலாக, தொழிற்சாலை பணியில் தங்களை அதிகமாக ஈடுபடுத்திக் கொள்கிறார்கள்.

## 10.4.1. திறனாய்வு

அரசியல் வளர்ச்சியைக் குறை கூறிய முறையிலேயே தற்கால பாணியாதல் பற்றி கருத்தும் குறை கூறப்படுகின்றது. அரசியலில் தற்காலப் பாணியாதல் என்ற கருத்து முக்கியத்துவம் பெற்றதின் விளைவாக

அரசியல், சமூகவியல், பொருளாதாரம் போன்றவைகளுடன் அதிகத் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டது. இதை அரசியலைச் சுதந்திரமான தனிப்பாடமாக்க விரும்பிய அறிஞர்கள் எதிர்த்தனர். டால்காட் பார்சன்ஸ் (Tallcott Parsons) இராபர்ட் மெர்ட்டன், டேவிட் ஈஸ்டன் போன்றவர்களின் செல்வாக்கு அரசியலில் அதிகமாதின் காரணமாக அரசாங்க முறையமைவு சமூக, உளவியல் கலாச்சார மற்றும் பொருளாதார காரணிகளைச் சார்ந்துள்ளது என்ற எண்ணம் தோன்றும்படிச் செய்தது. எனவே அரசியல் என்பது சமூகக்காரணிகளால் ஆக்கப்பட்ட ஒன்று எனக் கருதப்பட்டது.

இரண்டாவதாக, தற்கால பாணியாதல் என்ற கருத்து மரபு சார்ந்த சமூகங்கள் அடையவேண்டிய குறிக்கோள்களைக் குறிக்கின்றது. அது மெரிக்காவைப் போன்ற அல்லது மேற்கத்திய மக்களாட்சியைப் போன்ற ஆட்சிமுறையை மரபு சார்ந்த சமூகங்கள் அடைதல் என்பதைக் குறிக்கும். ஆனால் அமெரிக்காவைப் போன்ற முதலாளித்துவ தாராள மக்களாட்சி முறை மூன்றாம் உலக நாடுகளுக்கு உகந்ததன்று. மேலும், மேற்கத்திய மக்களாட்சி முறையும் உட்கருத்து வேறுபாடுகளில் பிரச்சனைக்குள்ளாகின்றது.

மூன்றாவதாக தற்காலப் பாணியாதல் என்ற கருத்து பொதுவுடைமை சமூகங்களில் உள்ள தற்காலப் பாணியாதல் முறையைப் பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை. மேலும் இக்கருத்தின் வழிமுறைகள் சோசலிச நாடுகளின் தற்காலப் பாணியாதலின் செயல்களைப் படிக்கப் பயன்படுத்துவதில்லை. எனவே தற்காலப் பாணியாதல் என்ற கருத்து தவறானது அரசியல் சாயம் பூசப்பட்டது என்று குறை கூறப்படுகின்றது.

மேற்கூறிய குறைபாடுகள் இருப்பினும், தற்காலப் பாணியாதல் என்ற கருத்து அரசியல் கல்வியில் முக்கியத்துவம் பெறுகிறது. தற்காலப் பாணியாதல் என்ற கருத்து அரசியல் முறையமைவை விரிவாகப் படிப்பதற்கு நன்கு உதவுகின்றது.

## 10.5. தொகுப்புரை

அரசியல் அறிவியலில் அரசியல் வளர்ச்சி என்பது முக்கிய பங்கு வகிக்கிறது. அரசியல் வளர்ச்சியில் ஏற்படும் வேறு சமத்துவம் ஏற்படும் நெருக்கடிகள் போன்றவை இப்பாடப்பகுதி விளக்குகிறது. தற்காலப் பாணியதல் பொருள் அதன் தன்மை அதன் அறிகுறிகள் அதில் ஏற்படும் தடைகளையும் இப்பாடப்பகுதி எடுத்துகைக்கிறது.

## 10.6. முக்கிய வார்த்தைகள்

| | | |
|---|---|---|
| ஊடுருவல் பிரச்சனை | — | மக்களை சென்றடைதல் |
| ஒருமைப்பாடு பிரச்சனை | — | மக்களை இணைத்தல் |
| பழம்பாணி | — | மரபு, வழக்காறுகள் |

## 10.7. பரிந்துரைக்கப்பட்ட நூல்கள்


1. A.Breeh, Political Theory, The Foujdation of Twenteeth century, The Times of India
2. H.J. Laski A.Grammer of Politics, London, Allen and unwin 1948.
3. S.Ramswamy, Political Theroy Ideas and concepts, Delhi Macmillan – 2002.
4. D.Held, Political Theroy Today, Cambridge, Polity Press – 1991.


## 10.8. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவு சோதனை கேள்விகளுக்கான பதில்கள்

| | |
|---|---|
| கேள்வி எண். 1 | பதில் எண். 10.1. |
| கேள்வி எண். 2 | பதில் எண். 10.1.3 |
| கேள்வி எண். 3 | பதில் எண். 10.2.2 |
| கேள்வி எண். 4 | பதில் எண். 10.3.1 |
| கேள்வி எண். 5 | பதில் எண். 10.3.6 |
| கேள்வி எண். 6 | பதில் எண். 10.4. |

## 10.9. மாதிரி வினாக்கள்

1. அரசியல் வளர்ச்சிக்குள்ள முக்கியதத்துவத்தை விவரி
2. அரசியல் வளர்ச்சியில் உள்ள நெருக்கடிகளை விளக்குக.
3. தற்காலப் பாணியாதல் என்பதை விவரிக்க
4. தற்காலப் பாணியாதலின் படிவங்கள் கூறுக.

## மாதிரி வினாக்கள் —1

ஏதேனும் ஐந்து வினாக்களுக்கு விடையளிக்கவும் மதிப்பெண் — 100

1. அரசியல் அறிவியலின் எல்லையை ஆராய்க
2. அரசின் சிறப்பியல்புகளை விவரி
3. இறைமையின் தன்மைகளை விளக்குக
4. அரசியலமைப்பின் பல்வேறு வகைகளை பகுப்பாய்க
5. சமத்துவக் கோட்பாட்டை விளக்குக
6. பிற்கால நடக்கை கோட்பாட்டியல் " ஒரு உண்மையான புரட்சி, எதிர் செயலல்ல – விவாதிக்க.
7. அமைப்பு – பணி முறை என்பது அடிப்படையில் நிலை அமைப்பு ஆய்வாகுமா? – விளக்குக.
8. அதிகாரம் பற்றிய ராபர்ட் தாலின் கருத்துக்களைத் திறனாய்வு செய்க.
9. முழு கோட்பாட்டைத் திறனாய்வு செய்க
10. அரசியல் முன்னேற்றம் என்ற கருத்தை ஆராய்க.

## மாதிரி வினாக்கள் — 2

ஏதேனும் ஐந்து வினாக்களுக்கு விடையளிக்கவும் மதிப்பெண் — 100

1. அரசியல் விஞ்ஞானத்தின் பொருளையும் தன்மையும் விவரி.
2. தற்கால அரசியலமைப்புகளை வகைப்படுத்துக.
3. சமுதாய ஒப்பந்தக் கோட்பாட்டினை ஆராய்க
4. இறைமை கோட்பாடு பற்றிய பன்மையாளர்களின் கருத்துக்களை விமர்சித்து ஆராய்க.
5. அரசியல் கலாச்சாரத்தின் தன்மையை விளக்குக.
6. அரசியல் சமூகமாதலின் பல்வேறு காரணிகள் யாவை
7. உயர்ந்தோர் குழாம் கோட்பாட்டை ஆராய்க
8. அடிப்படை உரிமைகள் என்றால் என்ன? ஒரு ஜனநாயக அரசியலில் அவை எங்ஙனம் பாதுகாக்கப்படுகிறது.
9. அதிகாரம் பற்றிய ராபர்ட் தாலின் கருத்துக்களைத் திறனாய்வு செய்க
10. அரசியல் நவீனமயமாதல் என்ற கருத்தை ஆராய்க.